# இலக்கண ஆய்வுக் கட்டுரைகள் - 1

பதிப்பாசிரியர்

ச. அகத்தியலிங்கம்

ச. பாலசுப்பிரமணியன்



அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலைநகர்

1974

# பதிப்புரை

அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயர் ஆய்வுத் துறை பலதுறை ஆய்வுகளில் ஈடுபட்டுள்ளது. திராவிட மொழியியல், ஒப்புமை மொழியியல் (contrastive linguistics) கிளை மொழிகளின் ஆய்வு (Dialectology, மொழிபயிற்றுதல், தமிழியல் போன்றன அவற்றுள் சில. தமிழியல் ஆய்வின் பகுதியாக தமிழ் மொழியின் வரலாற்று இலக்கணம், தமிழ் இலக்கணக் கொள்கைகள் ஆய்வு, தமிழ்க் கல்வெட்டு மொழி ஆய்வு போன்றவை நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இவ்வாய்வுகளில் இத்துறையின் ஆசிரியர்களும் ஆராய்ச்சி மாணவர்களும் ஈடுபட்டுள்ளனர். இவற்றுடன் ஆண்டு தோறும் ஆராய்ச்சிக்கருத்தரங்கு ஒன்றினை நிகழ்த்தி, பிற கல்வி நிலையங்களில் பணிபுரியும் இத்துறை ஆய்வாளர்களையும் அவ்வப்போது அழைத்து அவர்களுடன் கருத்துப் பரிமாற்றம் செய்வதும் அக்கருத்துக்களை நூல்வடிவில் வெளியிடுவதும் மொழியியல் துறையின் பணிகளில் ஒன்றாகும். தமிழ் இலக்கணக் கொள்கைகள் ஆய்வுபற்றி இது காறும் மூன்று கருத்தரங்குகள் நடத்தப் பெற்றுள்ளன. அவற்றுள் 1970-ல் நடத்த கருத்தரங்கு தொல்காப்பியத்தை மட்டும் முழுமையாக ஆராய்ந்து அக்கருத்தரங்கின் நிகழ்ச்சிகள் தொல்காப்பிய மொழியியல் என்ற பெயரில் நூல் வடிவில் வெளியிடப் பெற்றுள்ளன. 1973-ல் நடைபெற்ற இரண்டாவது தமிழ் இலக்கணக் கொள்கைகள் கருத்தரங்கில் ஆராயப் பெற்ற கட்டுரைகளின் தொகுப்பே இவ் இலக்கண ஆய்வுக் கட்டுரைகள்-1.

தமிழ் பழைமையான இலக்கண மரபுடைய மொழிகளில் ஒன்று. இன்று வளர்ந்துவரும் மொழியியல் ஆய்வின் பலனைக்

கண்டறியப்பட்டுள்ள மொழியியல் உண்மைகள் பலவும் நம் பழந்தமிழ் இலக்கண நூல்களில் பொதிந்து கிடக்கும் தன்மை, ஆராய்ச்சியாளரை வியப்பில் ஆழ்த்துகிறது. இன்றைய ஆய்வாளரால் அரிதின் முயன்று நிறுவப்பட்டுள்ள பல உண்மைகள் மிக எளிமையாகத் தமிழ் நூல்களில் கூறப்பட்டுள்ளன. தமிழ் இலக்கணக் கொள்கைகள் பல இன்றைய ஆய்விற்குத் துணை புரிவனவாகவும் விளங்குகின்றன. இவற்றையெல்லாம் ஆய்ந்து வெளிப்படுத்துதலே இக்கருத்தரங்கின் நோக்கம். தொல்காப்பியம் முதற் கொண்டு பிற்கால இலக்கண நூலாகிய தொன்னூல் விளக்கம்வரை பல்வேறு இலக்கண நூல்களும் ஆராய்ச்சியாளரால் தம் ஆய்வுக்குப் பொருளாக எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. சில ஆய்வாளர்கள் தொன்னூல் விளக்கம், இலக்கணக் கொத்து, நேமிநாதம் போன்ற நூல்களை முழுமையாக ஆய்ந்துள்ளனர் (16-19). சிலர் ஒருகருத்து பற்றி ஒப்பாய்வு நிகழ்த்தியுள்ளனர் (15,20). பல ஆய்வாளர்கள் காலம், குறிப்பு வினை, முற்றெச்சம் போன்ற இலக்கணக் கொள்கைகள் பற்றி பல இலக்கண ஆசிரியர்களின் கருத்துக்களையும் ஆராய்ந்து தங்கள் கருத்துக்களையும் சான்றுகளுடன் நிறுவியுள்ளனர் (1-13). உரையாசிரியர்களின் இலக்கணக் கொள்கைகளும் ஆராயப் பட்டுள்ளன (21-23). தொல்காப்பியரின் இலக்கணக் கொள்கைகள் மீண்டும் சில கட்டுரைகளில் சிறப்பாக 'ஆய்வு செய்யப் பட்டுள்ளன (24 – 27). "கருமொழியும் கருவிமொழியும்" (14) "தொல்காப்பியர் இலக்கணம் – எண்ணியக்க ஆய்வுகள்" (28) போன்ற பொதுக் கருத்துக்களும் ஆராயப்பட்டுள்ளன. உண்மையான ஆய்வு கருத்து வேறுபாடு, கருத்துச் சுதந்திரம் இவற்றின் அடிப்படையில் வளர்வதாகும், தமிழ் இலக்கண ஆசிரியர்களும் உரையாசிரியர்களும் தம்முள் வேறுபட்டமையும் ஒருவரை ஒருவர் மறுத்துக் கொண்ட தன்மையும் நம் இலக்கண மரபின் வளர்ச்சிக்கு எருவாய் நின்றவைகளாம். இக்கட்டுரைத் தொகுப்பிலும் மாறுபட்ட கருத்துக்களை ஆய்வாளர் முழுச்

சுதந்திரத்துடன் கூறியுள்ளனர். உரிச் சொல் பற்றி வேறுபட்ட கருத்துக்களைக் கூறும் கட்டுரைகளும் (1, 2, 3, 26, 27) இலக்கணத் தொகுத்து பற்றிய இரண்டு கட்டுரைகளும் (17, 18) இதற்குச் சான்றாய் நிற்கின்றன. ஒரே மொழியியல் உண்மையை வேறுபட்ட கோணங்களில் காண முடியும் என்பதனை இவை காட்டுகின்றன. ஆய்வாளர்கள் நடைச்சுதந்திரத்துடனும் இயங்கியுள்ளனர் என்பதற்கு டாக்டர் காமாட்சிநாதனின் "கருவி மொழியும் கருமொழியும்" என்ற கட்டுரை சான்றாகும்.

## மேற்கோள் முறை

மேற்கோள் நூல்களில் பழந்தமிழ் இலக்கண, இலக்கிய நூலகள் இறுதியில் பொதுவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இலக்கண இலக்கிய மேற்கோள்கள் கட்டுரையின் இடையிலேயே மூதற் குறிப்புடன் தரப்பட்டுள்ளன. சிறப்பாக ஆராய்ச்சி நூல்கள், கட்டுரைகளிலிருந்து எடுத்தாளப்பெற்ற மேற்கோள்கள் அடிக்குறிப்புகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அடிக்குறிப்புக்களில் ஆசிரியர் பெயர், வெளியீட்டு ஆண்டு, பக்கம் ஆகியவை கொடுக்கப்பட்டிருக்கும். அந்நூல் அல்லது கட்டுரையின் பெயர் முதலியன அவ்வக்கட்டுரையின் இறுதியில் ஆசிரியர் பெயர் அகரவரிசைப்படித் தரப்பட்டுள்ளன.

## நன்றியுரை

பலருடைய ஒத்துழைப்பாலும் உருவானது இந்நூல். எங்கள் துறை ஆராய்ச்சி மாணவர்கள் சி. ஏசுதாசன், சி சிவதாணு, எஸ். ஜெயபால், க. இராமசாமி, நடன சபாபதி, ஜீன்லாரன்ஸ் ஆகியோர் உதவி பெரிதாகும். இவர்கட்கும் மற்ற ஆராய்ச்சி மாணவர்கட்கும் எங்கள் நன்றி. கருத்தரங்கில் பங்கு பெற்றும் கட்டுரைகளைத் திருத்தியும், மொழிபெயர்த்தும் காலத்தில் அனுப்பியுதவிய ஆய்வாளர்களுக்கும் எங்கள் உளம்கனிந்த நன்றி உரித்தாகும்.

எங்கள் துறை வளர்ச்சியில் என்றும் ஆர்வம் காட்டி ஒல்லும் வாயெல்லாம் உதவி வருபவர் எங்கள் துணைவேந்தர் டாக்டர் S. P. ஆதிநாராயணு அவர்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி என்றென்றும் உரியது. பல்கலைக்கழக நிதிக் குழுவினருக்கும் இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்ட சிவகாமி அச்சகத்தினர்க்கும் எங்கள் உளம் கனிந்த நன்றி.

ச. அகத்தியலிங்கம்
க. பாலசுப்பிரமணியன்

# முதற்குறிப்பு அகராதி

| | |
|---|---|
| அகம். | அகநானூறு |
| இ. பெ. | இடப்பெயர் |
| இராமானுச. | இராமானுச கவிராயர் உரை |
| இ. கொ. | இலக்கணக் கொத்து |
| இ. வி. | இலக்கண விளக்கம் |
| இளம். | இளம்பூரணம் |
| எ. கா. | எடுத்துக் காட்டு |
| எழுத்து. | எழுத்ததிகாரம் |
| ஐங். | ஐங்குறுநூறு |
| க. | கன்னடம் |
| கல்., கல்லா. | கல்லாடர் உரை |
| கலி. | கலித்தொகை |
| கி. பி. | கிறிஸ்துவுக்குப் பின் |
| கி. மு. | கிறிஸ்துவுக்கு முன் |
| குறள். | திருக்குறள் |
| குறிஞ்சி. | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந்., குறு. | குறுந்தொகை |
| சங்கர. | சங்கர நமச்சிவாயர் |
| சிவஞான. | சிவஞான முனிவர் |
| சேனா. | சேனாவரையம் |
| சொல். | சொல்லதிகாரம் |
| த. | தமிழ் |
| தெ. | தெலுங்கு |

| | |
|---|---|
| தெய்வ. | தெய்வச்சிலையார் உரை |
| தொல். | தொல்காப்பியம் |
| தொ. வி. | தொன்னூல் விளக்கம் |
| நச்சி. | நச்சினார்க்கினியம் |
| நற். | நற்றிணை |
| நன். | நன்னூல் |
| நேமி. | நேமிநாதம் |
| பதிற். | பதிற்றுப்பத்து |
| புறம். | புறநானூறு |
| பெ. தொ. | பெயர்த் தொடர் |
| பெரும்பாண். | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | பேராசிரியம் |
| பொருள். | பொருளதிகாரம் |
| மயிலை. | மயிலைநாதர் |
| மலைபடு. | மலைபடுகடாம் |
| ம. | மலையாளம் |
| முத்து., மு. வீ. | முத்துவீரியம் |
| வி. | வினை |
| வி. அ. | வினை அடை |
| வி. தொ. | வினைத்தொடர் |
| வீர. | வீரசோழியம் |
| Dat | Dative |
| N P | Noun Phrase |
| O B J | Object |
| P N | Pronoun |
| S | Sentence |
| V | Verb |
| V P | Verb Phrase |

# உள்ளுறை

# சார்பெழுத்துக் கொள்கை

க. வெள்ளைவாரணன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

**முதலெழுத்துக்கள்**

அழகிய மாலையினைத் தொடுத்தற்கு ஏற்றவண்ணம் உள்ள தனிமலர்களைப் போன்று மொழியாய்ச் சேர்த்தற்கு ஏற்றவாறு தெரிந்தொலித்தற்குரிய தனியொலியாகிய எழுத்துக்கள் ஒரு மொழிக்குரிய அடிப்படையொலிகளாதலின், இவற்றை முதல் எழுத்துக்கள் எனப் பெயரிட்டு வழங்குதல் மிகவும் பொருத்த முடையதாகும். தமிழில் இவ்வாறு முதலெழுத்துக்களாக அமைந்தவை அகரம் முதல் னகரம் ஈறாகவுள்ள முப்பதெழுத் துக்களாகும். இவை தெரிந்து வேறிசைத்தலாகிய தனித் தொலிக்கும் நிலையிற் போலவே மொழிப்படுத்து ஒலிக்கும் நிலையிலும் தம்மியல்பினின்றும் வேறுபடுதல் இல்லை. இவ்வுண்மை,

> "மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்து வேறிசைப்பினும்
> எழுத்தியல் திரியா என்மனார் புலவர்" (தொல். 53)

எனவும்

"மொழியாய்த் தொடரினும் முன்னனைத் தெழுத்தே"
(நன். 127)

எனவும் வரும் நூற்பாக்களாலும் "எழுத்து சுண்ணத்தின் கண் அரிசன முதலிய போலாது மாலையின்கண் மலர்போல் அவற்றில் நிற்றலின் முன்னனைத்து என்றார்" (நன். சங்கர. ப. 68) என வரும் சங்கரநமச்சிவாயர் உரைவிளக்கத்தாலும் நன்கு விளங்கும்.

**சார்பெழுத்துப்பற்றித் தொல்காப்பியர்**

இவ்வாறு தனிமலர்கள்போல் தெரிந்து இசைக்கப்படுதற்கும் மாலையின்கண் மலர்போல் மொழிப்படுத்து இசைத்தற்கும் உரிய முதலெழுத்துக்களைப் போலன்றி, மொழியைச் சார்ந்து தோன்றுதல் ஒன்றினையே தம்மியல்பாகவுடைய எழுத்தொலிகளும் சிலவுள. அவ்வெழுத்துக்களை மொழியிடை வைத்துணரலாமேயன்றி அவ்வொலிகளை முதலெழுத்துக்களைப் போலத் தனித்து ஒலித்தல் இயலாது. இங்ஙனம் தனித்தொலித்தற்கு ஏற்ற முதலெழுத்தாந் தன்மையில்லாதனவாய் மொழியைச் சார்ந்து தோன்றும் ஒலிகளைச் சார்பெழுத்து என வழங்குதல் தமிழிலக்கண மரபாகும். இங்ஙனம் மொழியினைச் சார்ந்து தோன்றும் சார்பொலிகளாக அமைந்தன குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றுமாகும். முதலும் சார்புமாகிய இவ்விருவகையெழுத்துக்களையும்,

"எழுத்தெனப் படுப
அகரமுதல் னகர விறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே" (தொல். 1)

"அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன" (தொல். 2)

எனவரும் நூற்பாக்களில் தொல்காப்பியர் முப்பத்துமூன்றாகத் தொகுத்துக் கூறினார். முதலெழுத்து முப்பதனோடு சார்பெழுத்து மூன்றினையும் சேர்த்து எண்ணுங்கால் தமிழ் எழுத்துக்கள் முப்பத்துமூன்றாம் என்பது கருத்து. இதன்கண் 'சார்ந்துவரல் மரபின் மூன்று' எனச் சார்பெழுத்துக்களை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளமை காணலாம். எனவே சார்பெழுத்தின் இயல்பாவது தனியொலியாகத் தெரிந்து வேறு ஒலிக்கப் பெறுதலின்றி மொழியைச் சார்ந்து தோற்றும் ஒலித்தன்மையாம். இங்ஙனம் சார்பிற்றோன்றுவதாகிய சார்பெழுத்தொலிகள் மூன்றினையும் தனித்து இசைத்தல் இயலாதென்பதனை,

> "சார்ந்துவரின் அல்லது தமக்கியல் பிலவெனத்
> தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
> தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
> ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும்" (தொல். 101)

எனவரும் பிறப்பியற் சூத்திரத்தில் ஆசிரியர் தெளிவாக விளக்கியுள்ளார்

**இளம்பூரணர் விளக்கம்**

"பிறப்பிடமும் வளியும் ஆகியவற்றைக் 'காட்சி' என்றார். 'ஒத்த காட்சி' என்றதனால், ஆய்தத்திற்குக் குற்றெழுத்துச் சார்பேயெனினும் தலைவளியாற் பிறத்தலின் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துச் சார்பாகவே பிறக்கும் என்று கொள்க" (தொல் எழுத்து. ப. 53) என விளக்கங் கூறுவர் இளம்பூரணர். "காட்சி என்றது நெஞ்சினை" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து-நச்சி. ப. 69). மேற்குறித்த தொல்காப்பிய நூற்பாவையும் இளம்பூரணர் கூறிய உரை விளக்கத்தையும் அடியொற்றி

> "ஆய்தக் கிடந்தலை அங்கா முயற்சி
> சார்பெழுத் தேனவும் தம்முத லனைய" (நன். 87)

எனச் சூத்திரஞ் செய்தார் பவணந்தி முனிவர்.

தொல்காப்பிய இரண்டாஞ் சூத்திரத்தில் குற்றியலிகரம், குற்றியலுகரம் என்னும் இரண்டிடங்களிலும் எண்ணும்மை தொக்கன என்றும் 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்புழி எண்ணும்மை விரிந்துள்ளது என்றும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் விளக்கியுள்ளார்கள். (தொல். எழுத்து-இளம். ப. 13; நச்சி. ப. 20). 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என ஆசிரியர் குறித்தமையால் ஆய்தவெழுத்து மூன்று புள்ளி வடிவினதாகத் தொல்காப்பியர் கால முதற்கொண்டே வரிவடிவில் எழுதப்பெற்று வருதல் புலனும்

"குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தப் புள்ளி யென்றிவை மூன்றும்
சார்பிற் றோற்றத் துரிமையு முளவே"

எனவரும் யாப்பருங்கலவிருத்தி மேற்கோட் சூத்திரமும் (ப. 24) இக்கருத்தினதே.

"ஆய்தம் என்ற ஓசைதான் அடுப்புக் கூட்டுப்போல மூன்று புள்ளி வடிவிற்று என்பது உணர்த்துதற்கு 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்றார். அதனை இக்காலத்தார் நடுவுவாங்கியிட்டெழுதுப. இதற்கு வரிவடிவு கூறினார். ஏனை ஒற்றுக்கள்போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின், எழுத்தியல்தழா ஓசைகள்போலக் கொள்ளினுங் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயாம் என்றார். இதனைப் புள்ளி வடிவிற்றெனவே ஏனையெழுத்துக்கள் எல்லாம் வரிவடிவின வாதல் பெற்றாம்" (தொல். எழுத்து. ப. 20) என நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் இக்கருத்தினை வலியுறுத்துவதாகும்.

**சிவஞான முனிவர் விளக்கம்**

ஒரு மாத்திரையாய் நின்ற குற்றெழுத்துக்களே செயற்கையான் அரை மாத்திரை பெற்றுக் குறுகி நின்றனவோ என மயங்காமைப் பொருட்டு இவை இங்ஙனம் ஆதல் இயல்பு என்

பார், குற்றிகரம், குற்றுகரம் என்று கூறாது குற்றியலிகரம், குற்றியலுகரம் என்றார் எனவும், 'ஆயிருமூன்றே உகரங் குறுகிடன்' (தொல். 410) 'யகரம் வரும்வழி இகரங் குறுகும்' (தொல். 406) என்ற தொடர்களில் 'குறுகும்' என்னும் சொல் அணுகும் என்ற பொருளில் ஆளப்பெற்றது எனவும் கூறி, குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் போல வேறெழுத்தாவனவே யன்றி, ஒரு மாத்திரையாய் நின்ற இகர உகரங்களே மகரக் குறுக்கம் முதலியனபோல ஒரு காரணம்பற்றி அரை மாத்திரையாய் நின்றன அல்ல எனச் சிவஞான முனிவர் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில் (ப. 44) விளக்கியுள்ளார். ஆயினும் ஆயிரு மூன்றே யுகரம் குறுகிடன்' (தொல். 410) என்புழியும் 'யகரம் வரும்வழி இகரம் குறுகும்' (தொல். 406) என்புழியும் வந்த 'குறுகும்' என்ற சொல்லுக்கு முனிவர் கூறுமாறு 'அணுகும்' எனப் பொருள் கொள்ளின் அத்தொடர்கள் முறையே 'அவ்வாறுவகைச் சொல்லும் உகரம் வருமிடம்' எனவும் 'யகரம் முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து அங்கு இகரம் வரும்' எனவும் பொருள்பட்டு அங்ஙனம் வந்த இகரமும் உகரமும் முற்றிகர முற்றுகரங்களே எனத் தவறாகக் கொள்ளப்பட்டுக் குற்றியலிகரம் குற்றியலுகரம் என்னும் சார்பெழுத்துண்மை தெளியப்படாதொழியும். ஆகவே மொழியிடையே யமைந்த அவ் இகர உகரங்கள் மொழியின் இடமும் பற்றுக்கோடும் ஆகிய சார்புபற்றிக் குறுகுதலை இயல்பாக வுடையனவாய் அரை மாத்திரையவாய் ஒலித்து நிற்கும் என்பதே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையதெனத் தெரிகிறது. எனவே குற்றியலிகரம், குற்றியலுகரம் என்பன மொழியின் சார்பினால் குறுகுதலை இயல்பாகப் பெற்றுத் தோன்றும் சார்பெழுத்தாகிய இகர உகரங்கள் எனக் கொள்ளுதலே பொருத்தமுடையதாகும். முதல் எழுத்துக்களாகிய இகரவுகரங்களே மொழியின் சார்பும் பற்றுக்கோடும்பற்றி அரை மாத்திரை யளவினவாய்க் குறுகியிசைத்தலின் சார்பிற்றோற்றத்து ஒலிகளாய் வேறு எண்ணப்பட்டன எனக்கொள்ளுதல் பொருந்தும்.

**ஆய்தமும் விசர்க்கமும் ஒன்று?**

இனி, சார்பெழுத்துக்களுள் ஒன்றாகிய ஆய்தம் என்பது நீண்ட கோடுள்ளது என்னும் பொருளுடைய ஆயதம் அல்லது ஆஸ்ரதம் என்ற வட சொற்களின் திரிபாகுமென்றும் தமிழ் ஆய்தத்திற்கும் வடமொழி விசர்க்கத்திற்கும் ஒலிவடிவும் வரி வடிவும் ஒன்றாகவே ஆசிரியர் காலத்தில் அமைந்திருந்ததென்றும் முப்பாற் புள்ளியினதாக ஆய்தம் எழுதப்பட்டது மிகப் பிற் காலத்தில் என்றும் அறிஞர் மு. இராகவையங்காரவர்கள் கூறுவர்[1]. ஆய்தமும் விசர்க்கமும் ஒன்றே என அவர்கள் கருது வதற்கு பல்லவ சாசனமொன்றில் வெஃகா என்னும் சொல்லின் ஆய்தம் 'வெ⁝கா' என நடுவே வளைத்தெழுதப்பெற்றிருத்தலை யும் பாண்டிய சாசனம் ஒன்றில் வடமொழி விசர்க்கம் (:) ÷ நடுவே கோடிட்டு எழுதப்பெற்றிருத்தலையும் சான்றாகக் காட்டு வர். ஆய்தத்திற்கு முப்பாற்புள்ளியே வரிவடிவம் எனவும் அதனைப் பிற்காலத்தார் நடுவே வாங்கியிட்டு எழுதுவர் எனவும் நச்சினார்க்கினியர் (தொ. எழுத்து. நச்சி. ப. 20) தெளிவாகக் குறிப்பிடுதலால் பல்லவ சாசனத்திற் கண்ட ⁝ வடிவம் பிற் காலத்ததென்பதும் முப்புள்ளி வடிவே தொல்காப்பியர் காலத்து வடிவென்பதும் நன்கு துணியப்படும். அன்றியும் அவர் கூறுமாறு பாண்டியர் சாசனத்திற் கண்டபடி இடையில் நீண்ட கோடுடை யது விசர்க்கமென்பதற்கு வடமொழி ஆதாரமின்மையும் இங்கு நினைத்தற்குரியதாகும். அன்றியும் நீண்ட வடிவத்தைக் குறிக்கும் ஆயதம் என்ற பெயர் வடமொழி விசர்க்கத்துக்கு வழங்கு தலும் அவ்விசர்க்கத்தின் இடையே நீண்ட கோடிட்டு எழுது தலும் வடமொழியாளர்க்கும் தெரியாத புதுக் கற்பனையாகும். இடைக் காலத்துப் பல்லவ சாசனம் ஒன்றில் ஆய்தம் ⁝ என வரையப்பட்டிருத்தலை நீண்ட வடிவாகப் பிறழக்கொண்டு ஆயதம் என வடமொழியாற் குறிப்பிடுதல் பொருந்தாது.

---

1. மு இராகவையங்கார், 1964, ப. 127-31.

இனி, தமிழில் சார்பெழுத்துக்களுள் ஒன்றாகிய ஆய்தம் உயிரே றாது ஓசை விகற்பமாய்க் குற்றெழுத்தின் முன்னும் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்தாறனுள் ஒன்றின்மேலுமாய் அவற்றிடையே வரும் என்பது,

" குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே" (தொல். 38)

என்ற சூத்திரத்தால் விளக்கப்பெற்றது. வடமொழி விசர்க்கமோ உயிரோசையல்லது ஒலியா இயல்பிற்றாய் உயிரையடுத்து அவ் வுயிரோசைத்தாய் நின்று மேற்கூறிய நியதியின்றி இறுதியிலும் நின்றொலிக்கும் இயல்பினது. எனவே ஆய்தம் என்னும் பெயர் ஆஸ்ரதம் அல்லது ஆயதம் என்னும் வடசொல்லின் திரிபன்று என்பதும் வடமொழி விசர்க்கத்திற்கும் ஆய்தத்திற்கும் வடிவா லும் இயல்பாலும் ஒலியாலும் நிலையாலும் வேறுபாடு மிகுதியும் உளவென்பதும் நன்கு விளங்கும். "ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ள தன் நுணுக்கம்" (தொல். 813) என்பர் தொல்காப்பியர். எனவே இச்சொல் ஆய்தல் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்தது ஆய்தம் என்றாகி நுணுகிய ஒலி யினதாகிய எழுத்து என்ற பொருளில் வழங்கியிருத்தல் கூடும் என உய்த்துணரலாம். சார்பெழுத்து மூன்றும் தமிழுக்கே உரிய சிறப் பொலிகளாகும். "குற்றியலுகரந் தமிழ்ச் சிறப்பெழுத்தாகலின் வடமொழியின் வாராதாயிற்று" (சூத்திர விருத்தி-ப. 42) என வரும் சிவஞான முனிவர் கூற்று இவ்வுண்மையை வற்புறுத்துதல் காணலாம்.

**நன்னூலார் கொள்கை**

சார்பெழுத்து மூன்றெனத் தொல்காப்பியர் கூறினாராகப் பின்வந்த நன்னூலார் அவற்றுடன் உயிர்மெய், உயிரளபெடை, ஒற்றளபெடை, ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என்பனவற்றையும் சேர்த்துச் சார் பெழுத்துப் பத்து எனத் தொகை கூறி, அவற்றை மூந்நூற்

றறுபத்தொன்பதாக விரித்துரைத்தார். "முதலெழுத்தாந்தன்மை அவற்றிற்கின்மையானும் சார்பிற்றோன்றுதலானும் இப்பத்துஞ் சார்பாகவே கொள்ள வேண்டும் என்பது" (நன். மயிலை. ப. 20) என மயிலைநாதரும், "உயிர்மெய், உயிருமெய்யுங் கூடிப்பிறத்தலானும் ஆய்தம் உயிர்போல.... அலகுபெற்றும் மெய்போல.... பெறுதும் ஒருபுடையொத்து அவற்றின் இடையே சார்ந்து வருதலானும் சார்பெழுத்தாயின எனக்கொள்க" (நன். சங்கர. ப. 32, 33) எனச் சங்கரநமச்சிவாயரும் நன்னூலார் கொள்கைக்குக் காரணங் கூறினர்.

நன்னூலாரார் சார்பிற் சேர்க்கப்படும் உயிர் மெய்யெழுத்துக்கள், உயிரும் மெய்யும் என வேறு நின்ற இடத்தும் தனியொலியாகிய முதலெழுத்தாய் நிற்றலானும் உயிரும் மெய்யுங் கூடி நிற்றல் மொழியாய்த் தொடர்ந்து பொருளுணர்த்தும் பொருட்டன்றித் தனியே நிற்றலாற்றாத் தன்மைபற்றி அன்றாதலானும் உயிர் மெய் என்பது உயிரும் மெய்யும் என்ற பொருளில் உம்மைத் தொகையாய் நின்று அவையிரண்டும் கூடிய கூட்டத்தினை யுணர்த்திய பெயரேயன்றி முதலெழுத்துக்கள் முப்பதினும் வேறுபட்ட எழுத்தொலிகளை அப்பெயர் குறித்ததென்றல் வழக்கன்மையானும் மெய்யும் உயிரும் கூடுதலாகிய கூட்டம்பற்றி உயிர்மெய் தனியெழுத்தாகக் கொள்ளப்பட்டதெனின் "மெய்யோடியையினும் உயிரியல்திரியா" (தொல். 10) என்றற்றொடக்கத்து விதிகள் வேண்டப்படாமையானும் உயிர் மெய்யை (உயிரேறிய மெய்யை) முதலெழுத்துக்களின் வேறாக வைத்துச் சார்பெழுத்து என்றல் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. உயிரளபெடை நெடிலும் குறிலும் ஆகிய எழுத்துக்களின் கூட்டொலியேயன்றித் தனியே ஓரெழுத்தன்று என்பது தொல்காப்பியர் கருத்தாகும். ஒற்றளபெடைக்கும் இஃது ஒக்கும். எனவே முதலெழுத்துக்களில் இனமுடைய எழுத்துக்களின் வேறாகாத அளபெடைகளைச் சார்பெழுத்தினுள் அடக்குவது பொருந்தாது. எழுத்துக்கள் மொழியாங்கால் அவைநிற்கும்

இடம்பற்றியும் பிறவெழுத்தின் முன்னிலைபற்றியும் மாத்திரை குறைந்தொலிப்பனவாகிய ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம் ஆகியவற்றை அவ்வம் முதலெழுத்துக்களின் வேருன எழுத்துக்கள் எனக் கருதுதற்கிடமில்லை. எனவே தொல் காப்பியர் குறித்த சார்ந்து வரல் மரபின் மூன்றுடன் உயிர் மெய் முதலியவற்றையுஞ் சேர்த்துச் சார்பெழுத்துப் பத்து எனப் பவணந்தியார் கூறியது ஏற்புடையதன்று என்பது புலனுகும்.

**சிவஞானமுனிவர் கருத்து**

"இனி இம்மூன்றுமேயன்றி உயிர்மெய் முதலியவற்றையும் சார்பெழுத்தென்பாரும் உளராலோவெனின்' என வினு எழுப் பிக்கொண்டு, "ஆல் என்புழி உயிர் முன்னும் மெய் பின்னும் நின்று மயங்கினுற்போல, லா என்புழி மெய் முன்னும் உயிர் பின்னும் நின்று மயங்கினவேயல்லாது, உயிரும் மெய்யுமாகிய தம் தன்மை திரிந்து வேருகாமைக்கு, 'மெய்யோ டியையினும் உயிரியல் திரியா' (தொல்-10) என்றற்ருெடக்கத்துச் சூத்திரங்களே சான் ருகலான், உயிர்மெய்யாகிய காலத்தும் குறின்மை, நெடின்மை என்னும் உயிர்த்தன்மையும் வன்மை, மென்மை, இடைமை என் னும் மெய்த்தன்மையும் தன்னியல்பில் திரிபுபடாமையானும், உடல்மேல் உயிர் வந்து ஒன்றுதல் பொன்மணிபோல இயல்பு புணர்ச்சியென்ப வாகலானும்,........ துணங்கை என்பது மெய்ம் முதல் உயிரீறு மெய்ம்மயக்கம் எனவும் வாகு என்பது உயிர்த் தொடர் மொழிக் குற்றியலுகரம் எனவும் கொள்வதன்றி, உயிர் மெய்முதல் உயிர்மெய்யீறு, உயிர்மெய்மயக்கம், உயிர்மெய்த் தொடர்மொழிக் குற்றியலுகரம் எனக் கொள்ளாமையின் ஒற் றுமை நயம் பற்றி ஒன்றென்பதனுல் ஒரு பயனின்மையானும், ....... உயிரொடு கூடிய விடத்து வரிவடிவு வேறுபடுதலின் அது பற்றி, 'புள்ளி யில்லா எல்லா மெய்யும்' (தொல். 17) என மெய்ம் மேல் வைத்துச் சூத்திரஞ் செய்து வடிவெழுத்திலக்கணங் கூறி ஞான்றி ஒலியெழுத்திலக்கணம் வேறுபடக் கூருமையானும்,

அளபெடை சார்பெழுத்தென வேறாகாமை முன்னர்க் காட்டப் பட்டதாகலானும் ஐகாரக் குறுக்கம் முதலியன ஒருகாரணம் பற்றிக் குறுகியவாகலிற் சிறுமரம் பெருத்துழியும் பெருமரஞ்சிறுத் துழியும் வேறொரு மரமாகாதவாறுபோல வேறெழுத்தெனப் படாவாகலானும்........ அது பொருந்தாதென மறுக்க. வன்றொடர் மொழிக் குற்றியலுகரம் வல்லெழுத்து வருவழிக் கால் மாத்திரையாய்க் குறுகுதலின் அதுபற்றி அதனைக் குற்றியலுகரத்தின் வேறென்னுமையின் அவர்க்கும் (பவணந்தியார்க்கும்) அது கருத்தன்று போலுமென்க" (ப. 44, 45) எனச் சிவஞான முனிவர் தொல்காப்பியமுதற் சூத்திர விருத்தியுள் நன்னூலாரது சார்பெழுத்துக் கொள்கையைத் தக்க காரணங்காட்டி மறுத்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அசைக்குறுப்பாம் எழுத்துக்களைப் பகுத்துக்கூறும் அமிதசாகரர், ஐகாரக்குறுக்கம் முதலியவற்றின் வேறாக "சார்பிற்றோன்றும் தன்மைய" (யாப்பருங்கலம்—2.) எனக் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றனையும் சார்பெழுத்தெனப் பிரித்துக் கூறியுள்ளமை தொல்காப்பியனார் கருத்தைத் தழுவியதாகும்.

"ஒருமொழியைச் சார்ந்துவரும் இயல்பன்றித் தனித்தியங்கும் இயல்பு தமக்கு இல என்றலின், அவைதம்மையே எடுத்தோதிக் காட்டலாகாமையின்.... அவற்றிற்கு வேறு வேறு பெயரிட்டு 'அவைதாம் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம்' என்றும் அம்மூன்றும் புள்ளி பெறுதல் பற்றிப் பொதுப் பெயராக 'முப்பாற்புள்ளியும்' என்றும் அவை தனித்து எழுதப் படா ஆயினும் மொழியொடு சார்த்தி எழுதப்படுதலின் எழுத்து என்னும் குறியீட்டிற்கு உரிய என்பார் 'எழுத்தோரன்ன' என்றும் ஓதினார்" (சூத்திர விருத்தி, ப. 39, 40) என்பது சிவஞான முனிவர் தரும் விளக்கமாகும்.

**சார்பெழுத்தின் வரிவடிவம்**

"ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்" (தொல். 2) என்ற தொடர் ஆய்தத்தின் முப்புள்ளியாகிய வரிவடிவையுணர்த்தியது

என்பது இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர் கருத்தாகும் என்பது முன்னர் விளக்கப் பெற்றது. அதுவே தொல்காப்பியர் கருத்துமாகும் என்பது "ஆய்தப்புள்ளி" (தொல். 38) என அவர்மீண்டும் கூறுதலாற் புலனாகும். அங்ஙனமாகவும் "குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றும் புள்ளி பெறுதல் பற்றிப்பொதுப்பெயராக "முப்பாற்புள்ளியும்' என்றார்" (சூத்திரவிருத்தி, ப. 39) எனச் சிவஞான முனிவர் கூறுவர். முனிவர் இவ்வாறு கூறியது அவர் காலத்தில் ஆய்தம் முப்பாற்புள்ளி வடிவினதாக வழங்குதலோடு குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அவற்றின் குறுக்கத்தினைப் புலப்படுத்தும் நிலையில் புள்ளியிட்டு எழுதப்பெறும் வழக்கம் நாட்டில் நிலைபெற்றிருந்தமை கருதியேயெனத் தெரிகிறது.

குற்றியலிகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் புள்ளியிட்டு எழுதும் முறை இளம்பூரணர் காலம்வரை தோன்றவில்லை என்பது, "குற்றியலுகரமும் அற்றென மொழிப" (தொல். 105) என்பதற்கு "ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கும் அத்தன்மைத்தென்று சொல்லுவர்-எ-று இம்மாட்டேறு ஒருபுடைச்சேறலெனவுணர்க" (தொல் எழுத்து-இளம். ப. 58) எனவும் "ஒற்றெழுத்தியற்றே குற்றியலிகரமும்" (தொல். 1265) என்பதற்கு, "குற்றிய லிகரம் ஒற்றெழுத்தின் இயல்பிற்று........எனவே அலகு பெறுதென்றவாறும்" (தொல். பொருள். இளம். ப. 423) எனவும் வரும் இளம்பூரணர் உரைப் பகுதிகளாற் புலனாகும். இவ்வாறாகவும் இவற்றுக்குப் புள்ளியிட்டெழுதும் நிலை எவ்வாறு தோன்றியது என்பது இங்கு நம் சிந்தனைக்குரியதாகும்.

நூன்மரபில் எழுத்தின் வரிவடிவுபற்றிக் கூறவந்த தொல்காப்பியனார், "மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். 15) எனக் கூறி, புள்ளி பெறுதலாகிய அவ்வியல்பினை "எகர ஒகரத்தியற்கையும் அற்றே" (தொல். 16) என்பதனால்

எகர ஒகரத்திற்கும் மாட்டேற்றிக் கூறினர். தனிமெய்க்கும் உயிர்மெய்க்கும் எகர ஒகரமாகிய குறில்களுக்கும் அவற்றின் நெடில்களுக்கும் வரிவடிவில் வேற்றுமை செய்தற்பொருட்டுத் தனி மெய்யும் எகர ஒகரங்களாகிய குறில்களும் புள்ளியிட் டெழுதப் பெறும் என்பது இவ்விரு சூத்திரங்களின் பொருளா கும். தொல்காப்பியர் கூறிய இவ்விரு சூத்திர விதிகளையும்

"தொல்லை வடிவின எல்லா வெழுத்தும் ஆண்டு
எய்தும் எகரம் ஒகரம் மெய் புள்ளி" (நன். 98)

எனப் பவணந்தி முனிவர் தொகுத்துக் கூறியுள்ளார்.

**குற்றியலுகரமும் அற்று என்பதன் விளக்கம்**

இவ்வாறு தனி மெய்கள் புள்ளி பெறுதலை நூன்மரபில் உணர்த்திய தொல்காப்பியர், புணரியலில்

"அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்"
(தொல். 104)

என மற்றொரு சூத்திரஞ் செய்துள்ளார். இச்சூத்திரத்தில் தொல்காப்பியர் உணர்த்திய பொருள் இன்னதெனத் தெளிவா கத் தெரிந்துகொண்டால்தான், இதனை அடுத்துள்ள

"குற்றியலுகரமும் அற்றென மொழிப" (தொல். 105)

என்ற சூத்திரத்தில் தொல்காப்பியர் குறித்த பொருள் இது வென்பதனை உணரமுடியும். "அவற்றுள் மெய்யீறெல்லாம் புள்ளி யொடு நிலையல்" (தொல். 104) என்பது, 'எல்லாமொழிக்கும் இறுதியும் முதலும் எனச் சொல்லப்பட்ட மெய்யும் உயிரும் என்னும் இரண்டனுள் மொழிக்கு ஈறாகிய மெய்யெல்லாம் புள்ளி பெற்று நிற்கும் (எனவே மொழிக்கு முதலாயவை யெல்லாம் புள்ளி யிழந்து நிற்கும்)' எனப் பொருள் தருவதாகும். "மொழி முதல்மெய் புள்ளியொடு நில்லாது என்னாது, ஈறெல்லாம் புள்ளியொடு நிலையல் என ஈற்றின்மேல்

வைத்துக் கூறிய அதனான், அவ்வீற்றின் மெய் உயிர் முதன் மொழி வந்தவிடத்து அஃது ஏற இடங்கொடுக்கும் என்பது பெறப்பட்டது" (தொல். எழுத்து-இளம். ப. 57) எனக் கருத்துரைப்பர் இளம்பூரணர். இச்சூத்திரப் பொருளை மாட்டேற்றியுரைக்கும் நிலையில் அமைந்தது, "குற்றியலுகரமும் அற்றென மொழிப' (தொல். 105) எனவரும் அடுத்த சூத்திரமாதலின், "ஈற்றிற் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங் கொடுக்கும் அத்தன்மைத்தென்று சொல்லுவர் எ-று. இம்மாட்டேறு (புள்ளி பெறுதலை விலக்கினமையின்) ஒரு புடைச்சேறல் என உணர்க" (ப. 58) என்றார் இளம்பூரணர். "அங்ஙனம் உயிரேறுங்காற் குற்றுகரம் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிரேறிற்றென்று கொள்ளற்க; 'நாகரிது' என்புழி முன்னர்க் குற்றுகரவோசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ் விரண்டுங் கூடிநின்றல்லது அப்பொருளுணர்த்தலாகாமையின் இஃது உயிரொடுங் கூடி நிற்குமென்றார்" என விளக்கங் கூறுவர் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து-ப. 73).

எனவே, 'மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல். 104) என்னுஞ் சூத்திரம் மெய்யெழுத்துப் புள்ளி பெறுதலை விதிக்க வந்ததன்று என்பதும் மெய்கள் புள்ளிபெறும் என்ற விதி, "மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். 15) என நூன் மரபில் முன்னரே கூறப்பட்டதாதலின் அதனையே "மெய் யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல். 104) எனப் புணரியலில் மீண்டும் கூறினொன்றால் கூறியது கூறல் என்னுங் குற்றமாமென்பதும் ஈற்றிலுள்ள மெய்யெல்லாம் தமக்கு இயல்பாகிய புள்ளிபுடன் நிற்கும் என்றதன் கருத்து, வருமொழி முதலில் வந்த உயிரேற இடங்கொடுக்கும் என்பதேயாதலின், "குற்றியலுகரமும் அற்று" என்ற மாட்டேறு குற்றியலுகரமும் ஈற்றிற் புள்ளியொடு நின்ற மெய் போன்று வரும் உயிர்க்கு ஏற இடங்கொடுக்கும் என்பதனையே குறிக்கும் என்பதும் நன்கு துணியப்படும்.

**குற்றியலிகரமும் குற்றியலுகரமும் புள்ளிபெறுதல்**

இனி, "மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். 15), "எகர வொகரத் தியற்கையும் அற்றே" (தொல். 16) என்ற மாட்டேறு மாத்திரையிற் குறைந்த எழுத்துக்கள் வரிவடிவிற்புள்ளி பெறுதலை புணர்த்துதல் கண்ட பிற்கால இலக்கண ஆசிரியர்கள், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தம் குறுக்கத்தையறிதற்கு அடையாளமாக வரிவடிவிற் புள்ளியிட்டெழுதப் பெறும் எனப் புதிய விதியொன்றை ஏற்படுத்திக் கொண்டனர். இக்கருத்து யாப்பருங்கல விருத்தியில்தான் முதன்முதற் காணப்படுகின்றது.

"குற்றியலிகரமும் குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்னை?

"குற்றிய லிகரமும் குற்றிய லுகரமும்
மற்றவை தாமே புள்ளி பெறுமே"

என்பது சங்க யாப்பாகலின்" (ப.26) என்பர் யாப்பருங்கல விருத்தி ஆசிரியர். இவர் கருத்தினையொட்டியே செய்யுளியலுரையிற் பேராசிரியரும் (தொல். பொருள்-பேரா. ப.130) தொல்காப்பியச் சூத்திர விருத்தியிற் சிவஞானமுனிவரும் (ப. 39,40) பிற்காலப் புலவர் சிலரும் குற்றியலிகரமும் குற்றியலுகரமுப் புள்ளிபெறும் என்ற கொள்கையை உடன்பட்டுக் கூறினாராதல் வேண்டும். இங்ஙனம் குற்றியலிகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் வரிவடிவிற் புள்ளியிட்டெழுதும் வழக்கின் தொன்மை எதுவாயினும், ஆசிரியர் தொல்காப்பியனாரும் பின்வந்த ஆசிரியர்கள் எல்லோரும் ஆய்தத்தின் வரிவடிவம் முப்பாற்புள்ளியெனக் கொண்டார்கள் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

**மேற்கோள் நூல்**

மு. இராகவையங்கார் 1964. 'தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும்', ஆராய்ச்சித் தொகுதி, பாரிநிலையம், சென்னை-1.

# 2

# குற்றுகரமா, முற்றுகரமா?

**ந. குமாரசாமி ராஜா**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*

*குற்றியலுகரம், முற்றியலுகரம் என வரும் இருவகை உகரங்களுள் முன்னையது இதழ் குவியாது பிறப்பது என்றும் பின்னையது, குவிந்து ஒலிக்கப்பெறுவது என்றும் கொள்ளலாம். குற்றியலுகரம் பொதுவாக மொழியிறுதியில் தோன்றும். இக்குற்றியலுகரம் வல்லின மெய்யை அடுத்து நிற்கும். அவ் வல்லெழுத்துக்கு முன் இன்னொரு வல்லெழுத்தோ, மெல் லெழுத்தோ, இடையெழுத்தோ, ஆய்தமோ, நெட்டுயிரோ இருத்தல் வேண்டும். தனிக் குற்றெழுத்து தவிர்க்கப்பெறும். தனிக் குறிலுக்கு முன்னர் ஓர் ஒற்று நிற்பினும் ஒவ்வாது. மொழியிறுதிக் குற்றியலுகரம் நிற்கும் நிலையைப் பின்வருமாறு சுருங்கிய வாய்பாட்டால் விளக்கலாம் :*

X H u

(ஈண்டு u என்பது உகரத்தையும் H என்பது வல்லெழுத்தையும் குறிக்கும். X என்பது குறில் கொண்ட தனியசை அன்று.)

மொழியிறுதி முற்றியலுகரம் யாதானுமோர் மெய்யூர்ந்து வரும். அம்மெய்க்கு முன் குற்றுயிர் கொண்ட ஓரசையே நிற்கும். வல்லெழுத்தல்லாத ஏனை மெய் முற்றுகரத்துக்கு முன் வருமாயின் ஒன்றுக்கு மேற்பட்ட அசைகளும் வரலாம். குற்றியலுகரமும் முற்றியலுகரமும் புணர்ச்சி வகையான் வேறுபடும். நிலைமொழிக் குற்றியலுகரத்துக்கு முன்னர் உயிர் வரின் அவ்வுகரம் கெடும். யகரம் வரின் உகரம் இகரமாய்த் திரியும்.

'குற்றியல்' உ → $\phi$ / — உயிர்[1]

→ இ / — யகரம்

முற்றியலுகரத்திற்கு முன் உயிர் வரினோ, இடையில் வகர உடம்படுமெய் தோன்றுதலை வரையார்.

'முற்றியல்' உ + உயிர் → 'முற்றியல்' உ — வ் — உயிர்

இதனான், முற்றியலுகரம் உயிர் அடுத்து வரின் குற்றியலுகரம் போல் கெடாது என்பது பெறப்படும்.

முற்றியலுகரம் கெடாது என்ற பொதுவிதிக்குப் புறனடை உண்டு என்பதை பிரைட் (BRIGHT) என்னும் அமெரிக்க மொழியியல் அறிஞர் உணர்த்தி[2], திராவிட மொழியியலில் சிறந்த தொண்டாற்றிய எல். வி. ராமசாமி ஐயர் கூற்றை மேற்கோள்

---

1. இவ்விதியில் பயன்படும் குறியீடுகளின் பொருள்கள் வருமாறு :

→ இக்குறியின் இடப்புறமுள்ள எழுத்து வலப்புறமுள்ள எழுத்தாக மாறும்

$\phi$ மாற்றமடையும் எழுத்துக் கெடும்

/ மாற்றம் நிகழ் சூழல் (Context)

— எடுத்துக்கொண்ட எழுத்து நிற்கும் இடம்

2. Bright, 1972, ப. 31

காட்டுவார் : "புறவு, நறவு, அளவு என்னும் மொழியிறுதி உகரம் முற்ற இதழ் குவிந்த உகரமாம்; அடுத்து உயிர் வரின் இவ்வுகரம் கெடுவதைப் பண்டை இலக்கியங்களிலும் காணலாம்..............."[3] பிரைட் பெருமகனார் ராமசாமி ஐயரின் இக் கருத்தைத் தமது கட்டுரையில் பின் வருமாறு விளக்கிக் கூறுவார் ; "வல்லெழுத்துக்குப் பின் வரும் துணை உயிர் ஒலி இலக்கியத் தமிழில் மற்றோர் உயிர் தொடராவிடத்துத் (அதாவது மொழியிறுதியில் அல்லது மெய்க்கு முன்னர்) தோன்றும் என்று கூறலாம். வலி அல்லாத எழுத்துக்குப் பின்னரும் இத் துணை உயிர் ஒலி தோன்றும் தற்கால நிலைமை இலக்கியத் தமிழிலும் உண்டு என்பதை ஆண்டு வகரத்துக்கும் பின்னர்த் தோன்றும் உகரம் மெய்ப்பிக்கும், அளவ் → அளவு. பழந்தமிழில இத் துணை உயிர் வகரத்தைத் தொடராவிடத்து [ĭ] ஆகவும், வகரத்துக்குப் பின்னர் [u] ஆகவும ஒலிக்கப் பெறும்.[4]

இன்று வழக்கில் இல்லாத இலக்கியத் தமிழில் வகரத்துக்குப்பின் வரும் துணை உயிரின் ஒலித்தன்மையைப் பற்றி ராமசாமி ஐயர் இவ்வளவு அறுதியிட்டுக் கூறுவது விந்தைக்குரியதாக உள்ளது. வலியல்லா மற்றை எழுத்துக்குப் பின்னர் வரும்

3. "Forms like puṛavu (dove), naṛavu (toddy), aḷavu (measurement) according to the rule regarding final u and ĭ, have a fully rounded -u; but before vowels following, this u is invariably elided even in the most ancient texts.........". L. V. Ramaswami Aiyar, 1935.

4. "We may state that, in classical Tamil, the enunciative vowel appeared before a non-vowel (i. e. consonant or pause) when preceded by an obstruent. But the modern tendency to use the enunciative vowel even after non-obstruents was apparently already operative in Classical Tamil after v, aḷav → aḷavu 'measurement'. The phonetic quality of the enunciative was anciently [ĭ] every where except after v, where it was u". Bright 1972, p. 35.

உகரம் முற்றுகரம் என்னும் சில தமிழ் அறிஞர் மதத்தைப் பின்பற்றி முற்றியலுகரம் முற்ற இதழ் குவிந்தொலிக்கும் என்று அவர் கருதுவார்போலும்.

"உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்;
யவ்வரின் இய்யாம்; முற்றும்அற்று ஒரோவழி"

என்ற நன்னூல் 164 ஆம் சூத்திரத்திற்கு உரையெழுதும் சிவஞான சுவாமிகள் (ப. 127) புணர்ச்சியில் குற்றியலுகரம் போலத் தொழிற்படும் முற்றியலுகரத்திற்குப் பின்வரும் உதாரணங்களைக் காட்டுவார் :

கதவு, செலவு; அது, இது

நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவர் இச் சான்றுகளை மனதிற் கொண்டு மேற்கண்ட நூற்பாவை யாத்தனரா என்ற ஐயம் தெளிவாக வேண்டும். நன்னூல் 164-இன் கருத்தைக் கொண்ட தொல்காப்பியச் சூத்திரம் இல்லை. அதாவது, முற்றியலுகரம் குற்றியலுகரம் போலத் தொழிற்படுதல் பற்றித் தொல்காப்பியத்தில் குறிப்பேதும் இல்லை. ஆயின், அளவு, பிரிவு, அறிவு, புறவு போன்று வகரவுகரத்துடன் இறும் சொற்கள் பழந்தமிழில் இல்லாமல் இல்லை. இச் சொற்களின் இறுதி உகரம் குற்றுகரமா, என்று அறுதியிடுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

தமிழ் வினையடிகள் ஏற்கும் கால இடைநிலைகளின் அடிப்படையில் அவற்றை அறுவகையாகப் பகுக்கலாம்.[5]

| | | இறப்பு | எதிர்வு | தொழிற்பெயர் |
|---|---|---|---|---|
| 1. | செய், உண், தின் | –த் | –வ் | –தல் |
| 2. | அறி, ஆள், கொல் | –ந்த் | –வ் | –தல் |
| 3. | அஞ்சு | –இ | –வ் | –தல் |
| 4. | நகு, தொடு, உறு, | (வலித்தல்) | –வ் | –தல் |
| 5. | பார், கேள், கல் | –த்த் | –ப்ப் | –த்தல் |
| 6. | நட, நில் | –ந்த் | –ப்ப் | –த்தல் |

5. பார்க்க: குமாரசாமி ராஜா, 1960.

இவற்றில் 5, 6-ஆம் வகை வினையடிகளுக்குப் பின் வரும் இடைநிலைகளிற் பல இரட்டை வல்லெழுத்து உடையனவாக உள்ளதால் அவ் வினையடிகள் 'வல்வினை' (strong verb)கள் எனப் பெறும். 'மெல்வினை' (weak verb) களை ஊர்ந்து வரும் இடைநிலைகளில் இரட்டை வல்லெழுத்து இல்லாதிருத்தலை நோக்குக. வல்வினைக்குப் பின் வரும் நிகழ்கால இடைநிலை -க்கிற் ஆவதையும் மெல்வினைக்குப் பின் அது -கிற் ஆவதையும் காண்க. வல்வினைக்குப் பின் வரும் காரண ஒட்டு (causative suffix) -ப்பி ஆகும். மெல்வினைக்குப் பின் -வி இரட்டிக்காத தனிப் பகரம் கொண்ட -பி என்பதே ஒலியமைப்பு முறையில் -வி யாக மாறியது என்று கூறலாம். மெல்லெழுத்தில் இறும் மெல்வினைகளுக்குப் பின்னர் -பி தோன்றும் (உதாரணம்: காண் பி) இந்த -பி என்னும் இடைநிலை உயிரெழுத்துக்குப் பின்னரோ இடையெழுத்துக்குப் பின்னரோ தோன்றும்போது -வ ஆவதைக் காணலாம். மெல்வினைக்குப் பின் வரும் எதிர்கால இடைநிலைக்கும் இது பொருந்தும். அவ்வெதிர்கால இடைநிலை -ப் ஆகும். காரண ஒட்டாம் -பி என்பது வி யாக மாறும். அந்த சூழ்நிலையில் எதிர்கால இடைநிலையாம் பகரமும் வகரமாக மாறும். இவ்வாறு பகரம் வகரமாக மாறுவது அதன் முன்னும் பின்னும் உள்ள ஒலிகளின் பாதிப்பால் தான். ஈருயிர்களுக் கிடையிலோ இடையெழுத்துக்கும் உயிருக்கும் இடையிலோ பகரம் ஒலித்தல் அரிது. இச் சூழ்நிலையில் அவ்வெழுத்து இடையெழுத்தாக மாறிவிடுகின்றது. இவ்வாறு இடையெழுத்தாம் வகரத்தை எதிர்பார்க்கும் இடத்தில் பகரம் ஒரோவழித் தோன்றுதல் உண்டு. (சான்று: சார்பு.) அதனை இவ்விதிக்குப் புறனடையாகக் கொள்ளலாம். 'திராவிட மொழிகளின் இனச்சொல் அகராதி' (Dravidian Etymological Dictionary)[6] யில் வுகரத்துடன் முடியும்

6. Burrow and Emeneau, 1961

சொற்கள் ஏறத்தாழ 400 காணப்படுகின்றன. புகரத்தில் முடிவன கிட்டத்தட்ட முப்பதேயாம். இம் முப்பதில் 27 சொற்கள் வுகரத்தில் முடியும் இணையான சொற்களைக் கொண்டுள்ளன. பின்வருவன எடுத்துக்காட்டுக்கள் :

| | |
|---|---|
| அழிபு | அழிவு |
| அளபு | அளவு |
| இயல்பு | இயல்வு |
| இழிபு | இழிவு |
| உயர்பு | உயர்வு |
| உருபு | உருவு |
| ஒடிபு | ஒடிவு |
| ஓர்பு | ஓர்வு |
| சார்பு | சார்வு |
| சேர்பு | சேர்வு |
| திரிபு | திரிவு |
| தீர்பு | தீர்வு |
| தொடர்பு | தொடர்வு |
| தொலைபு | தொலைவு |
| நிகழ்பு 'நிகழ்ச்சி' | நிகழ்வு 'தற்காலம்' |
| நேர்பு | நேர்வு |
| பிரிபு | பிரிவு |
| புலர்பு | புலர்வு |
| போர்பு | போர்வு |
| மலிபு | மலிவு |
| மார்பு | மார்வு |
| முடிபு | முடிவு |
| வள்பு | வள்வு |
| வேர்பு | வேர்வு 'சினம்' |
| வீழ்பு 'விழுது' | வீழ்வு 'வீழ்தல்' |
| வேர்பு | வேர்வு 'வியர்வை' |

வுகரத்தில் முடியும் இணையான சொற்கள் இல்லாத எஞ்சிய மூன்று சொற்கள் சால்பு, மரபு, கவர்பு ஆகியனவாம். சென்னைப் பல்கலைக்கழகத்தார் தொகுத்து வெளியிட்ட 'தமிழ்ப் பேரகராதி' (Tamil Lexicon) யில் கவர்வு என்ற சொல் உண்டு. எனவே எஞ்சியவை சால்பு, மரபு ஆகிய இரு சொற்களே. வல்லெழுத்து அடுக்காமல் ஒரு சொல்லுக்கிடையில் பகரத்துடன் தோன்றும்

இலக்கண உருபு 'செய்பு' வாய்பாட்டு -பு விகுதியாகும். வகரங் கொண்ட சொற்களுக்கும் பகரங் கொண்ட சொற்களுக்கும் பொதுவாகப் பொருள் வேறுபாடு கிடையாது. வேறுபாடு உண்டெனினும் அப்பொருள்கள் தொடர்புடைய பொருள்களே. பகரங் கொண்டியங்கும் அளபு என்ற சொல் இலக்கணத்தில் எழுத்தின் மாத்திரை 'அளவை'க் குறிப்பதாகும். வகரங் கொண்ட அளவு என்பதோ மற்ற எல்லா வகை 'அளவை'யும் குறிக்கும். பழந்தமிழில் **வருவ** என்பதும் **வருப** என்பதும் பொருள் வேறுபாடுடையன. முன்னது அஃறிணை வினை. பின்னது உயர்திணையைக் குறிக்கும். உயர்திணை வினையாம் **வருப** என்பதில் உள்ள பகரம் என்றுமே பகரம் ஆகாது. எனவே வல்லெழுத்து அடுக்காமல் ஒரு சொல்லுக்கிடையில் வரும் பகரமும் வகரமும் வேறுபாடுடையன அல்ல என்பது வெள்ளிடைமலை.

பின்வரும் சொல்லிணைகளைக் காண்க.

| | |
|---|---|
| அசைவு | அசைப்பு |
| அலைவு | அலைப்பு |
| அழிபு/அழிவு | அழிப்பு |
| இடிவு | இடிப்பு |
| இசைவு | இசைப்பு |
| இழிபு/இழிவு | இழிப்பு |
| உருபு | உருப்பு |
| எரிவு | எரிப்பு |
| ஒழிவு | ஒழிப்பு |
| கழிவு | கழிப்பு |
| கிழிவு | கிழிப்பு |
| குறைவு | குறைப்பு |
| செறிவு | செறிப்பு |
| நெளிவு | நெளிப்பு |
| தாழ்வு | தாழ்ப்பு |
| திரிவு | திரிப்பு |
| தீர்பு/தீர்வு | தீர்ப்பு |
| தெரிவு | தெரிப்பு |
| தேய்வு | தேய்ப்பு |
| பதிவு | பதிப்பு |

| | |
|---|---|
| மறைவு | மறைப்பு |
| வடிவு | வடிப்பு |
| விளைவு | விளைப்பு |
| விரிவு | விரிப்பு |

மேலே கண்டனவற்றுள் முதல் வரிசைச் சொற்கள் எல்லாம் 'தன்வினை' யடியாகத் தோன்றியவை. இரண்டாம் வரிசைச் சொற்கள் 'பிறவினை' யடியினின்று பிறந்தவை. இவற்றின் தன் வினைப் பகுதிகளும் பிறவினைப் பகுதிகளும் உருவத்தால் ஒன்றே யாம். தன்வினைப் பகுதிகள் மெல்வினைகளாம். இவ்வாறு அவை கொள்ளும் இறந்த கால இடைநிலை ந்த் ஆகும். பிறவினைப் பகுதிகள் வல்வினைகள். அவை கொள்ளும் இடைநிலை த்த் ஆகும். கால இடைநிலைகளில் தோன்றும் தன்வினை, பிற வினை வேறுபாடு மேலே தொழிற் பெயரிலும் பிரதிபலிக்கக் காணலாம். வல்வினைக்குப் பின் வரும் தொழிற்பெயர் விகுதி -ப்பு என்றும், மெல்வினைக்குப் பின் வரும் விகுதி -பு என்றும் கொள்ளலாம். இவ்வாறு புகரத்தைப் பெயர் விகுதியாகக் கொள்வதற்கு நண்-பு போன்ற சொற்கள் துணைபுரியும்.

தமிழில் தன்வினை, பிறவினை வேறுபாடற்ற பல வினைச் சொற்கள் உண்டு. அவை வுகர விகுதி ஏற்குமாயின் அதனையும் புகரமாகவே கொள்ளவேண்டும். அறி-வு என்பது இதற்கு உதாரணம். இதனை அறி-பு எனக் கருதுவது பிழையாகாது அன்றோ ?

வினையடி கற்பிக்க இயலாத சில பெயர்ச்சொற்கள் -வு விகுதியும், -ப்பு விகுதியும் கொண்டு விளங்கக் காணலாம். காட்டு :

| | |
|---|---|
| விடவு | விடப்பு |
| வலிவு | வலிப்பு |
| முரிவு | முரிப்பு |

இவற்றில் முதல் வரிசைச் சொற்கள் புகரத்தில் முடிவன என்று கொள்ளலாம் இவ்வாறு கொள்ள நண்பு : நட்பு என்னும் இணைச்

சொற்கள் துணைபுரிகின்றன. இவற்றில் முதல் வடிவம் (நண்பு) -பு விகுதியும், இரண்டாவது வடிவம் (நட்பு) -ப்பு விகுதியும் கொண்டவை. **நட்பு** என்பது ***நண்-ப்பு** என்பதன் மாற்று வடிவாகும்[7]. **தோல்வு : தோற்பு** என்னும் இணைச் சொற்கள் இத்தகைய இருவேறு விகுதிகளுக்கு இன்னொரு எடுத்துக் காட்டாகும். அவை முறையே ***தோல்-பு : *தோல்-ப்பு** ஆகிய வற்றின் மாற்று வடிவங்களாம்.

ஆறும் வினைப்பகுப்பைச் சார்ந்த (இறந்தகாலம் **-ந்த்**, எதிர்காலம் **-ப்பு**) வினைகளிற் பெரும்பாலானவை அகரத்தில் முடிவன. இவ் வினைகள் வல்வினைகள் ஆதலின் ஈண்டுத் தொழிற் பெயர் விகுதி -ப்பு ஆதல் வேண்டும். மேற்கண்ட -ப்பு விகுதி யன்றி -பு/-வு விகுதியும் பல வினைகளில் அமைந்து விளங்கக் காணலாம். சான்றுகள் :

| | |
|---|---|
| அளப்பு அளபு | அளவு |
| இரப்பு | இரவு |
| இழப்பு | இழவு |
| இறப்பு | இறவு |
| உவப்பு | உவவு |
| உழப்பு | உழவு |
| கரப்பு | கரவு |
| கலப்பு | கலவு |
| கறப்பு | கறவு |
| சிறப்பு | சிறவு |
| திறப்பு | திறவு |
| துறப்பு | துறவு |
| நலப்பு | நலவு |
| பிளப்பு | பிளவு |
| புரப்பு | புரவு |

மேலே கண்டனவற்றுள் முதல் தொகுதியான **அளப்பு : அளபு : அளவு** என்பது, இவற்றுக்கு இடைவடிவம் **அளபு** என்பதாகும் என்று புலனாக்குகின்றது. அளப்பு என்பது அளவிற் குறுகி

7. விளக்கத்திற்குக் காண்க : குமாரசாமி ராஜா, 1969.

அளபு ஆயிற்றெனலாம். அது நாளடைவில் மெலிந்து அளவு ஆகியிருக்கும். மூன்றாவது வரிசையிலுள்ள வுகரத்தில் முடியும் சொற்கள் எல்லாம் புகர முடிபுடையன எனக் கொள்ளல் தகும்.

புகர வுகர விகுதியேற்று, வினையடியாகவேயன்றி, பெயரடியாகப் பிறந்த பெயர்ச் சொற்களும் உண்டு. பின்வருவன எடுத்துக் காட்டுகள் :

| | | |
|---|---|---|
| மார்பு | மார்வு | <மார் |
| போர்பு | போர்வு | <போர் |
| | கீழ்வு | <கீழ் |
| | சுனைவு | <சுனை |
| | தொறுவு | <தொறு |

வுகரத்தில் முடியும் சில சொற்களோடு பொருள் ஒத்த குகர இறுதிச் சொற்களும் உண்டு. சான்று :

| | |
|---|---|
| அருகு | அருவு |
| சொருகு | சொருவு |
| தரகு | தரவு |
| படகு | படவு |
| விரகு | விரவு |

இன்னும் சில சொற்கள் வுகரத்தில் முடியினும் இவற்றுக் கிணையாகச் சுகரத்தில் முடியும் சொற்கள் ஏனைத் திராவிட மொழிகள் சிலவற்றிலும் தமிழிலும் அமைந்து விளங்கக் காணலாம். எடுத்துக் காட்டுக்கள் :

(தமிழ்) **உணவு** : (துளு) **உணசு**

(தமிழ்) **கடவு** (எருமைக்கடா) : (கோத்தா) **கடுச்**, (கன்னடம்) **கடசு**, (துளு) **கடசு**

(தமிழ்) **கனவு** : (கோத்தா) **கன்சன்**, (கன்னடம்) **கனசு**, (கொடகு) **கனசி** (கோண்டி) **கன்ஸ்க்**

(தமிழ்) அரவு : (தெலுங்கு) த்ராசு, (கோண்டி) தராஷ்- (கொண்டா) சரஸ், (கூஇ) ஸ்ராசு
(தமிழ்) துளவு : துளசி
(தமிழ்) நனவு : (கன்னடம்) நெனசு
(தமிழ்) நுணவு : நுணசு
(தமிழ்) பரவு : பரசு
(தமிழ்) பலவு : (கன்னடம்) பலசு, (கொடகு) பலசி (தெலுங்கு) பனச, (பர்ஜி) பனச் (கோண்டி) பனிஸ்
(தமிழ்) புறவு : (கன்னடம்) ஹொறசு, (கோண்டி) பஒரிஷ், (கொண்டா) பர்ரொஸ்
(தமிழ்) புலவு : புலசு, (தெலுங்கு) பொலசு
(தமிழ்) முரவு : முரசு
(தமிழ்) வயவு : (கன்னடம்) பயசு, (தெலுங்கு) வாசு
(தமிழ்) விரவு : விரசு, (கன்னடம்) பெரசு, (துளு) பெரசு

இதுகாறும் கூறியவற்றால், வுகர இறுதி என்பது ஒரு வல்லொற்றும் உகரமும் சேர்ந்த தொகுதியே என்பது பெறப்பட்டது. எனவே இந்த வுகர இறுதி குற்றுயிர் கொண்ட ஓரசையன்றி மற்று யாதானுமோர் தொடர்மொழிக்குப் பின் வருமாயின் அதன் இறுதி உகரத்தைக் குற்றியலுகரம் எனக் கருதுவதில் தவறில்லை.

உகரத்தில் முடியும் இன்னும் பல சொற்கள் 'பிறழப் பிரித்த (wrong segmentation)லால் தோன்றியவை. அதவு, விளவு போன்ற மரப்பெயர்கள் தொல்காப்பியத்தில் அத, விள என்றே இடம் பெறும் (தொல். 217). குழவியைக் குறிக்கும் சொல் மக என்பதே; மகவு அன்று.* மகவிற்கு என்பதனை மக + இன் + க்கு என்றும், மகவு + இன் + க்கு என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். முதற் புணர்ச்சியில் வகரவுடம்படுமெய் தோன்றும். இரண்டாவதில் இறுதி உகரம் வருமொழி முதல் உயிர்க்கு முன் கெடும். தொல்காப்பியர் நூலில் குழவிப் பெயரின் வடிவத்தை மக

எனக் கொள்வது காணற்குரியது (தொல். 218). நன்னூல் ஆசிரியர்க்கு யாது கருத்தோ அறிகிலேம் ஆயினும், அந்நூலின் உரைகாரர் கருத்துப்படி அது மகவு ஆகும்.

முடிபு : குற்றுயிர் கொண்ட ஓரசை யன்றி மற்று யாதானு மோர் தொடர்மொழிக்குப் பின் வகரம் வருமாயின், அதன் இறுதி உகரம் குற்றியலுகரமே யாகும். தொல்காப்பியர் கூறும் குற்றுகர வாய்பாடு வருமாறு :

$$\left\{\begin{array}{c} \bar{V} \\ \therefore \\ X\,V \\ H \\ S \\ M \end{array}\right\} Hu$$

(ஈண்டு V என்பது உயிரையும் V என்பது நெட்டுயிரையும் H என்பது வல்லெழுத்தையும் S என்பது மெல்லெழுத்தையும் M என்பது இடையெழுத்தையும் u என்பது உகரத்தையும் குறிக்கும். X என்பது குறில் கொண்ட தனியசை அன்று) XVHu என்னும் தொடரில் குற்றுகரத்துக்கு முன் வரும் வல்லெழுத்து க், ச், ட், த், ப், ற் என்னும் இவை ஆறனுள் ஒன்றாக இருக்கலாம். ஆயின் இவை ஆறனுள்ளும் பகரம் ஒன்றே குற்றுகரத்துக்கு முன்னர் அருகி வழங்குவதாகும். யாம் முன்னர்க் குறித்தபடி, பல இடங்களில் இப் பகரம் வகரமாகத் திரிந்துள்ளது. ஈண்டொலிக்கும் வகரம் உண்மையில் பகரமே யாகும். எனவே, "வலியல்லாத எழுத்துக்குப் பின்னரும் இத் துணை உயிர் ஒலி தோன்றும் தற்கால நிலைமை இலக்கியத் தமிழிலும் உண்டு என்பதை ஆண்டு வகரத்திற்குப் பின்னர்த் தோன்றும் உகரம் மெய்ப்பிக்கும்" என்றும், "பழந்தமிழில் இத் துணை உயிர் வகரத்தைத் தொடராவிடத்து [ī] ஆகவும், வகரத்திற்குப் பின்னர் [u] ஆகவும் ஒலிக்கப்பெறும்" என்றும்

பிரைட் என்னும் அறிஞர் கூறுவது ' ஏற்புடையதாகத் தோன்ற வில்லை.

**மேற்கோள் நூல்கள்**

குமாரசாமி ராஜா, ந. 1960. "தமிழ் தெரியாதவர் களுக்கு," பொருள் 2, 1, 30–35, சென்னை.

Kumaraswami Raja, N, 1969. *Post - nasal Voiceless Plosives in Draviadian*, Annamalai University, Annamalai nagar.

Bright, William, 1972. " The Enunciative Vowel,' *IJDL* 1.26-55.

Burrow, T. and Emeneau, M. B. 1971. *A Dravidian Etymological Dictionary*, Oxford.

Ramaswami Aiyar, L. V. 1935. "Dravidic Sandhi (2nd instalment), I: Vowels and Vowels," *QJMS* 26. 91-112.

8. Bright, 1972 ப. 32

# 4

# குறிப்பு வினை

**கா. மீனாட்சிசுந்தரம்**
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை*

குறிப்புவினை ஆய்வு சிக்கல் நிறைந்தது. தெளிவான முடிவு இன்னும் பெறப்படவில்லை. எல்லோரும் ஒத்துக்கொள்ளக் கூடியதாக ஒரு முடிவு காண்பது அருமையாய் உள்ளது. இப்பொழுது தரும் முடிவும் இறுதியானதன்று. ஓர் ஆராய்ச்சியே ஆம்.

முதலில் தற்பொழுது நிலவி வரும் பல கருத்துக்களையும் தொகுத்துக் காண்போம்.

(1) பயனிலையாக வரும் பெயர்களே குறிப்பு வினைகள் எனப்படுகின்றன. அவற்றைப் பெயர்ப் பயனிலைகள் எனலாம்.[1]

(2) குறிப்புவினை என ஒன்று இல்லை, சில பெயர்ச் சொற்களே பயன்வகை நோக்கி அவ்வாறு கொள்ளப்பட்டன.[2]

---

1. மு. வரதராசன், 1944
2. மு. வரதராசன், 1959

(3) குறிப்பு வினையில் காலக் குறிப்பு இல்லை.[3]

(4) பெயர்ச்சொற்கள் வினையாகப் பயன்படும்போது குறிப்பு வினைகள் எனப்படுகின்றன.[4]

(5) குறிப்புவினை ஐம்பால் மூவிடங்களில் பயிலும். அதை நிகழ்காலம் ஒன்றிற்கே உரியது எனலாம். அல்லது காலம் உணர்த்தாதது எனக் கொள்ளலாம்.[5]

(6) சொல்நிலையில் பெயராக மட்டும் கூறுவது இயலாது என்றும் வாக்கிய நிலையிலும் சொல்நிலையிலும் பெயர் போலவும் வினைபோலவும் இடைபோலவும் இயங்குவது என்றும் பெரும்பான்மை இயல்வு நோக்கித் தொல்காப்பியர் சொல்நிலையிலும் வாக்கியநிலையிலும் ஒருவகை வினையாகக் கருதினர் என்பதும் தெளிவாகும்.[6]

இவற்றை நோக்கும்போது இருவிதச் சிக்கல்கள் தெளிவாகின்றன.

(1) குறிப்புவினை என்பது பெயர்ச்சொல்லா? வினைச் சொல்லா?

(2) வினைச்சொல் கட்டாயம் காலத்தை வெளிப்படையாய்க் காட்ட வேண்டுமா?

சொற்களின் நோக்கம் பொருள்குறித்து நிற்பதாம். அதனைச் சொற்கள் இருவகையாகச் செய்யும். சொல் வடிவமே பொருளைத்

---

3. P. S. Subrahmanya Sastri, 1934, ப. 146
4. Beschi, 1955, ப. 475
5. Caldwell, 1956, ப. 475
6. வி. ஐ. சுப்பிரமணியம், 1960

தருவது ஒருவகை, சொல்லின் வடிவத்திற்கு அப்பால் மறைந்து நின்று ஆராயுங்கால் பொருள் உணர்த்துவது ஒருவகை. இதனைச் சொல் குறிப்பால் பொருளுணர்த்தும் எனக்கூறி வருகிறோம். (தொல். 642). எனவே முதலில் சொற்கள் குறிப்பாகப் பொருள் உணர்த்தும் தன்மையுடையவை என்பதை ஏற்றுக்கொள்ளல் நலம். எல்லாச் செய்திகளையும் வெளிப்படையாகத் தெரிவிக்க வேண்டும் என்பதில்லை.

பெயர்ச்சொல் பற்றித் தொல்காப்பியம் கூறுவது என்ன?

1. பெயர்ச் சொற்கள் காலங்காட்டா. சில பெயர்கள் (தொழிற் பெயர்) காலத்தோடுவரும். (தொல். 554)

2. பெயர் மூவகைப்படும். அவை உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர் ஆகியவையாம். (தொல் 645)

ஆனால் அவற்றை விளக்கும்போது அவை இன்ன இன்ன ஈறுகளை (விகுதிகளை)க் கொண்டு வரும் எனத் தொல்காப்பியர் சொல்லாமை இங்கு கூர்ந்து நினைக்கத் தக்கது. ஈறுகளைக்கொண்டு பெயர்களைப் பிரித்துக்காட்டுவது தொல்காப்பியர் நோக்கமில்லை என்பதனைச் சேனாவரையர் அழகாக எடுத்துக் காட்டுகிறார். "வினைச் சொற்போல இன்னவீறு இன்னபாற் குரித்தெனப் பெயர்ச்சொல் ஈறுபற்றி உணர்த்தலாகா (தொல். சொல். சேனா. ப. 108)" தென்பது அவர் கருத்து. கிளவியாக்கத்தில் தொல்காப்பியர் கூறியிருப்பது பொதுவாகச் சொற்களுக்குரிய-சிறப்பாகப் படர்க்கை வினைமுற்றுகளுக்குரிய ஈறுகளேயன்றிப் பெயர்ச் சொற்களுக்குரிய—ஈறுகள் அல்ல. பெயர்ச்சொற்கள் எவ்வீறு கொண்டு வரினும் அவ்வாறு வந்த பெயர்கட்குரிய பொருளுக் கேற்ப வினை கொள்ளும் என்பதும் அவரால் சுட்டப்படுகிறது. (தொல். 494). அப்பொழுது பெயர்களின் ஈறுகட்கு ஏற்ப வினையின் ஈறுகள் அமைவதில்லை என்பது கவனிக்கத் தக்கது.

ஆகவே தொல்காப்பியர் பெயர்களை ஈறுபற்றி உணர்த்தவில்லை என்பது தெளிவு. ஏன் ?

பெயர் என்பது பொருளை உணர்த்துவது. பெயர்ச் சொல்லைப் பிரித்தால் அதன் பொருள் விளங்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. சொல் முழுமையாய் நின்றே பொருளைக் காட்டும். மாடலன், பூனை போன்ற பெயர்ச் சொற்களைப் பிரித்தால் பொருள் உணர்த்தா. சொற்களை முழுமையாக வைத்துக் கொண்டால்தான் பெயர்ப்பொருளை உணர்த்தும். அல்லது பிரித்தாலும் அவற்றின் ஈறுகள் எப்பொழுதும் மாறு நிலையில் நின்று திணை, பால், இடம் உணர்த்துவதில்லை. மேலும் பிரிப்பின், பெரும்பாலும் அவற்றின் பகுதிகள் பெயர்ப்பொருளைக் காட்டுவதில்லை. சில பெயர்கள் பிரிக்கக் கூடிய வடிவம் பெறலாம். அதனாலேயே எல்லாப் பெயர்களும் அவ்வாறான வடிவம் கொண்டவை எனக் கூற இயலாது.

சில எடுத்துக் காட்டுக்களைப் பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| 1. கருடன் | பறந்தது / | பறந்தன |
| அலவன் | ஊர்ந்தது / | ஊர்ந்தன |
| கடுவன் | குதித்தது / | குதித்தன |
| கறையான் | அரித்தது / | அரித்தன |
| ஒலியன் | ஒலிக்கிறது/ | ஒலிக்கின்றன |

இவை "அன்" அல்லது "ஆன்" ஈறுகளைக் கொண்டிருந்தாலும் ஆண்பாலென்று கூற இயலாது. திணையும் சொல்வதற்கில்லை. மேலும் இவை வினைகொள்வதையும் கவனிக்கவும். அஃறிணை ஒருமை வினையும் பன்மை வினையும் கொள்வதைப் பார்க்கலாம். எனவே, திணை, பால், எண் இவற்றை வரும் வினையைக் கொண்டே அறிகிறோம். சொல்வடிவத்தைக் கொண்டு அவைகளை உணர முடியவில்லை என்பதே ஆம். சொல்லின் பொருளைக் கொண்டே உணரலாம். ஈறுகளைக்கொண்டன்று.

| 2. | பெண்பால் | ஒன்றன்பால் | ஆண்பால் |
|---|---|---|---|
| | கண்ணகி | கிளி | கிள்ளி |
| | தலைவி | குருவி | பாரி |
| | சீதை | கழுதை | வில்லவன்கோதை |
| | | | தந்தை |
| | அவள் | திங்கள் | மக்கள் |
| | அக்காள் | வாள் | அழும்பில்வேள் |
| | தாய் | நாய் | ஆய் |

மேலேயுள்ள பட்டியலைக் கவனித்தால் புலப்படுவதென்ன? ஈறுகளை வைத்துக்கொண்டு திணை, பால், எண் உணர்த்த இயலுமா? ஒரு வரையறை உண்டா? ஆனால் இவை வினைகொண்டால் பெயர்ப் பொருளுக்கேற்ப வரையறையான ஈறுகளைக் கொள்கின்றன அல்லவா? முற்றிய நிலையில் அவை அமைகின்றன அல்லவா?

பெயர்கள், பயனிலையாக வரும் பொழுது மூவிடங்களுக்கும் மாறுமல் அப்படியே வரும். பெயரின் ஈறுகள் இடமாறுதலுக்கேற்ப மாறுவதில்லை.

| | பெயர் | குறிப்பு வினைமுற்று |
|---|---|---|
| (அ) | நான் கண்ணகி | நான் கச்சினேன் |
| | நீ கண்ணகி | நீ கச்சினை |
| | அவள் கண்ணகி | அவன் கச்சினன் |

| (ஆ) | எழுவாய் | பயனிலை-பெயர் | பயனிலை-குறிப்பு வினைமுற்று |
|---|---|---|---|
| | அவன் | பாரி | நல்லன் |
| | அவள் | வெள்ளிவீதி | நல்லள் |
| | அது | கிளி | நல்லது |

இங்கு எழுவாய்ப் பொருளுக்கு ஏற்றவாறு பயனிலையின் ஈறுகள் மாறவில்லை என்பது கவனிக்கத் தக்கது. பெயர்கள் பயனிலையாக வரும்போதுதான் இவ்வாறு திணை, பால், இடத்திற்

கேற்ப ஈறுகள் மாறுமல் நிற்கின்றன. ஆனால் குறிப்பு வினை முற்றில் மாறியிருப்பது தெற்றென விளங்குகிறதன்றோ?

எனவே, (1) பெயர்கள் முழுமையாக நின்று பொருள் உணர்த்துபவை; (2) பிரிப்பதால் பயன் தாராதவை; (3) வரையறுக்கப்பட்ட ஈறுகளைக் கொண்டு திணை, பால், எண், இடம் உணர்த்த மாட்டாதவை; (4) பெயரில் உள்ள ஈறுகள் சொல்லின் முழு வடிவத்திற்காகச் சில நேரங்களில் வந்தவையே அல்லாமல் ஒரு இலக்கணக்கூறைக் காட்ட வந்தவை அல்ல.

சிலர் அவன், அவள், அவர், அது, அவை, நான், நீ என்றவற்றை எடுத்துக் காட்டி ஈறுகள் முறையாய் அமைந்திருக்கின்றன எனக் கூறக் கூடும். ஆகவே ஈறுகள் திணை, பால், எண் உணர்த்துகின்றன, தம் அடையாளங்களால், எனப் பேசலாம். ஆனால் இவையெல்லாம் மறுபெயர்கள் (Pronouns) என்பதை மறந்துவிடலாகாது. பெயர்களுக்குப் பதிலாக அமைந்தவையே இவை. பெயர் தம் முழுச் சொல்லால் பெயர்ப் பொருளை உணர்த்திய பின் அப்பொருளுக்கேற்றவாறு ஈறு பெற்று வருவதற்காக அமைத்துக் கொள்ளப்பட்ட மறுபெயர்களே இவை. எனவே இவை சுட்டும் முன்னுள்ள பெயர்களை ஈறுபற்றி அறிய இயலுமா? இயலாதன்றோ?

ஆனால் குறிப்பு வினைமுற்று என்பது பெயர் போன்றதன்று. குறிப்பு வினைமுற்று ஈறுகளைக் கொண்டு திணை, பால், எண் இடம் தெளிவாய்க் காட்டும். இடத்திற்கேற்பக் குறிப்பு வினை முற்று ஈறுகள் மாறும். குறிப்பு வினைமுற்றுக்களைப் பிரித்தால் பகுதியானது ஒரு பொருளையோ பண்பையோ காட்டும். பெயர்கட்கு அங்ஙியதில்லை. பிரித்தால் பல சொற்கள் பொருள் கெட்டுவிடும். நன்னூலாரே பெயர்களை ஈறுபற்றிப் பிரித்தார் (நன். 277-80). பெயர்ச்சொற்களுக்கு வடிவம் தரும் ஈறுகள் என அவற்றைச் சொல்லலாமே அல்லாமல் அவற்றால் பொருட் பயன் இல்லை. தெரிநிலை வினைமுற்றுக்கள் வேற்றுமை உருபை

ஏற்பதற்குரியவாய் தொழிற்பெயர், வினையாலணையும் பெயராவது போல, குறிப்பு வினைமுற்றும் வேற்றுமை உருபை ஏற்பதற்கு உரியதாய் பெயராக வரும். அதன் காரணமாகக் குறிப்பு வினை முற்றைப் பெயர் எனக் கூறுவதற்கில்லை.

வினை காலங் காட்டவேண்டும் என்பது இலக்கணமாயிற்றே? அப்படியாயின் குறிப்பு வினைமுற்றுக்கள் காலம் காட்டுகின்றனவா? இல்லையே. எல்லா வினைகளும் தெளிவாகக் காலங் காட்டவேண்டும் என்பதில்லை. வினையடிகளைக்கொண்டு வரும் வினை முற்றுக்கள் வெளிப்படையாய்க் கால எழுத்துக்கொண்டு காலம் காட்டாமல் இருப்பது உண்டு.

காட்டு - நக்கனன்; பாடுகம்; கூவியது; உண்ணலன்; தாராய்.

இவற்றின் பகுதிகள் வினைகள். ஆனால் இவை காலம் காட்டும் எழுத்துக்களைப் பெறவில்லை. குறிப்பாகவே காலம் காட்டுகின்றன பெயரடியில் தோன்றும் வினைமுற்று 'காதலித்தேன்' என்பது. இது வெளிப்படையாகக் காலம் காட்டுகிறது.

வெளிப்படையாகக் காலம் காட்டுவதாலோ குறிப்பாகக் காலம் காட்டுவதாலோ வினை முற்றுக்களுக்குத் தெரிநிலை வினை முற்று என்றும் குறிப்பு வினைமுற்று என்றும் பெயர் கொடுத்தல் பொருத்தமில்லை. முற்றில் முதனிலை வினையாய் இருந்தால் அது தெரிநிலை வினைமுற்றும். முற்றில் முதனிலை பெயராகவோ பண்பாகவோ இருந்து தொழிலை மறைமுகமாகக் காட்டினால் அம் முற்று குறிப்பு வினைமுற்றாகும். அவை குறிப்பாக வினைப் பொருள் காட்டும். தெரிநிலை வினையில் எச்சம் பிறக்கும். குறிப்பு வினையில் எச்சம் பிறக்காது. எச்சம் வந்து அதன் பின் குறிப்பு வினைமுற்று வரின் அது அப்படியே அமையாமல் ஆக்க வினையினோடு சேர்ந்தே முடியும் (தொல். 915). ஆதலால் காலம் வெளிப்படையாகக் காட்டாமையினாலேயே குறிப்பு வினைமுற்றைப் பெயர் எனச் சொல்ல வேண்டுவதில்லை. குறிப்பு வினை முற்று பெயரிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. அதனால் அதற்கு

ஒரு தனிப்பெயர் தேவைப்படுகிறது. அதேபோலத் தெரிநிலை வினைமுற்றிலிருந்தும் அது வேறுபடுகிறது. ஆகவே அதிலிருந்து பிரித்துக் காட்டக் குறிப்பு வினைமுற்று என்ற பெயர் தேவையாகிறது.

ஒரு வாக்கியத்தில் பயனிலைகள் மூன்று விதமாய் அமையும் தெரிநிலை வினைமுற்று, குறிப்பு வினைமுற்று, பெயர் என்பவை அவை. வினையை முதலாகக்கொண்டு முற்றி நிற்பது தெரிநிலை வினைமுற்று. வினையல்லாத, பண்பு, இடம், ஒப்பு ஆகியவற்றை முதலாகக் கொண்டு இடத்திற்கு ஏற்றவாறு ஈறுகளைக்கொண்டு முற்றி நிற்பது குறிப்பு வினைமுற்று. பிரியாமல் முழுச்சொல்லாய் நின்று பெயர்ப்பொருளை உணர்த்தி நின்று இடத்திற்கேற்றவாறு ஈறுகள் மாறுமல் எழுவாய் கொள்வது பெயர்ப் பயனிலை ஆம். எனவே மூன்றுக்கும் வேறுபாடு உண்டு. அவை அவ்வாறு அமையும்போது காலம் காட்டாமை இருக்கிறதே என்ற ஐயம் எழும். பெயர், வேற்றுமை உருபு ஏற்கும் எனக் கூறின் வேற்றுமை உருபு ஏற்றுல்தான் பெயர் என்பது பொருள் இல்லை வேற்றுமை உருபு ஏற்கும் தன்மையைத் தன்பால் கொண்டது என்பதுதான் பொருள். அதே போல் வினையும் காலம் குறிக்கும் தன்மையது என்பதே அன்றி எல்லா இடங்களிலும் காலம் காட்ட வேண்டும் என்பதில்லை. இதனுல்தான் தொல்காப்பியர் காலங்காட்டும் இடை நிலைகளை வரையறுத்துப் பிரித்துக் கூறவில்லை போலும்.

படர்க்கை ஒன்றன்பால் பலவின்பால் எதிர்கால வினைமுற்றுக்களில் திணைபால் விகுதிகள் இல்லையே என்ற தடை எழுப்பலாம். அவ்வாறு வருவது 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றே. இந்த வினையைப் பிரித்துப் பார்க்கக் கூடாது என்பதே தொல்காப்பியர் கருத்து. இதனை இப்படியே கொள்ள வேண்டும் என்பதனுல்தான் வாய்பாடாகக் கூறியுள்ளார். இதனை மூன்று காலமும் காட்டுவதாகவும் எதிர்காலம் காட்டுவ

தாகவும் அமைக்கிறோம். என்றும் மாறா உண்மைகளை உணர்த்தவும் இவ் வாய்பாடு பயன்படுகிறது. எனவே இந்த ஒரு வினை அமைப்பைக் கொண்டு வினைமுற்றுக்கள் திணை, பால், இடம் காட்ட வேண்டியதில்லை எனச் சொல்ல இயலாது. இந்த வினையும், வேறு என்ற வடிவம் கொண்ட வினையும் தவிர திணை பால் இடம் உணர்த்தாத வினை முற்றுக்கள் உண்டா? (ஏவல், வியங்கோள் ஆகியவற்றை இப்பொழுது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளவில்லை.) இலன், இலள், இலர், இலது, இல; உளன், உளள், உளர், உளது, உள; அல்லன், அல்லள், அல்லர், அல்லது, அல்ல என்பவை காலவட்டத்தில் இல்லை, உண்டு, அல்ல என வந்துள்ளனவே யன்றி முதலில் அவ்வாறுடையவை அல்ல. குறிப்பு வினைமுற்றுக்கள் பின் எவ்வாறு காலம் உணர்த்துகின்றன? தெரிநிலை வினையோ குறிப்பு வினையோ எது ஆயினும் கால எழுத்துப் பெறாமல் வருமாயின் காலத்தை எவ்வாறு கணிப்பது? ஒரு சொல்லின் வடிவத்தைக் கொண்டு அது பெயர்ச் சொல்லா வினைச் சொல்லா எனத் தெரியவில்லையாயின், எவ்வாறு காண்கிறோம்? விளக்கு என்ற சொல் பெயராகவும் வினையாகவும் வரும். அது பெயரா வினையா என்பதைப் பயன்படுத்தும் வகையில் தான் அறியவேண்டும்.

அது விளக்கு. (1) அதை விளக்கு. (2)
(1) – பெயர் (2) – வினை.

பொருள் அமைப்பை எப்படித் தெரிகிறோம்?

இதேபோல வாக்கியங்களில் அமைந்து வரும்போது ஆங்காங்கு கால இடைநிலை பெற்றுவரும் வினைகளைக் கொண்டும் பொருள் போக்கைக் கொண்டும் அறிய முயல்கிறோம்.

'குழந்தை அழுதது. அழுதல் அதற்கு நல்லது. எனவே மருத்துவர் அதனை அழவிடுமாறு கூறினார்''

இத்தொடர் வாக்கியங்கள் மூலம் நல்லது என்பது இறந்த காலம் காட்டுகிறது என உணர்கிறோம். முன் பின் வாக்கியங்கள் இக் குறிப்பு வினைமுற்றின் காலத்தை அறிய உதவுகின்றன. எனவே குறிப்பு வினைமுற்று தனியாக இருக்கும்போதோ தனி வாக்கியத்தில் இருக்கும்போதோ காலத்தைக் காட்டுவதில்லை. பிற வாக்கியங்களுடன் இணையும்போது காலம் காணுமாறு அமைகிறது.

குறிப்பு எனச் சொல்வானேன்? இதிலடங்கியுள்ள குறிப்பு என்ன? குறிப்பு என்பதைக் காலத்தைக் குறிப்பாக உள்ளே கொண்டு இருக்கிறது என்ற காரணத்தால் அமைந்ததாகக் கருதவேண்டும் என்பதில்லை. "குறிப்பினும் வினையினும்" (தொல். 686) எனத் தொல்காப்பியர் கூறுவது குறிப்புப் பொருண்மையும் தொழிற் பொருண்மையும் என்பதே ஆம் என்ன குறிப்புப் பொருண்மை அதிலடங்கியுள்ளது? "கரியன், செய்யன், என்புழித் தொழின்மை தெற்றென விளங்காது குறித்துக் கொள்ளப்படுதலிற் குறிப்பென்றார்" (தொல். சொல். சேனா. ப 129) எனச் சேனாவரையர் எழுதுகிறார். கரியன், செய்யன் என்பவை இயற்பெயராயின் பிரிக்க முடியாதவையாம் இவை வினை முற்றாக அமையும்பொழுது இவற்றுள் குறிப்பாகத் தொழின்மை। பொருள் அடங்கியுள்ளது? இவை இயற்கையாய் அமைந்தவை அல்ல. செயற்கையாய் வந்தவை. "செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்" (தொல். 503) என்பது விதி. அதனால் தான் எச்சங்கள் வருமாயின் இந்தக் குறிப்பு வினை முற்றுக்கள் 'ஆயினன்' என்ற சொல்லினை இறுதியில் சேர்த்துக் கொள்கின்றன. (தொல். 915). எனவே 'ஆகும் தொழில்' அங்கு நடைபெறுகிறது. அந்தத் தொழிற் பொருண்மை அதில் குறிப்பாக அடங்கிக் கிடக்கிறது. ஆகவே நான் அதனைக் குறிப்பு எனக் குறிக்கின்றனர் போலும். கருமையான பண்பை அவன் தன்பால் ஆக்கிக் கொண்டவன் ஆகையால், அவன் கரியன் எனக் குறிக்கப் படுகிறான். அந்த ஆக்கிக் கொள்ளும் தன்மை

வினையே யன்றோ? அவ்வாறு வினை குறிப்பாய் அமைவதால் தான் பெயர்போலாது வினைபோல மூன்றிடங்கட்கும் ஏற்றவாறு விகுதிகளை மாற்றி மாற்றிக் கொள்கிறது. ஆகையால் இதனைக் குறிப்பு வினைமுற்று என்று கூறுவது மிகப் பொருத்தமேயாம்.

இதேபோல, 'கச்சினன்' என்ற சொல் கச்சைத் தனக்கு உடைமையாய் ஆக்கிய தொழிலை உள்ளடக்கிக் கொண்டுள்ளது. 'இல்லத்தான்' என்ற சொல் இல் என்ற இடத்தைத் தனக்கு ஆக்கிக் கொண்ட செயலைத் தன்னிடத்தே மறைத்து வைத்துக் கொண்டுள்ளது. பொன்னன் என்ற சொல், பொன் போன்ற தன்மையைத் தனக்கு ஒப்பாக்கிக்கொண்ட செய்கையை உள்ளே வைத்துள்ளது. ஆனால், இயற்பெயர்கள் இவ்வாறு தொழின்மைக் கருத்தை உள்ளடக்கவில்லை. ஆகவே உடைமைப்பொருள், இடப் பொருள், பண்புப்பொருள், ஒப்புப்பொருள் கொண்டுள்ள சொற் கள் குறிப்பு முற்றாக அமையும் வாய்ப்பைப் பெற்று தெரிநிலை வினை முற்றுப்போல மூவிடத்திற்குரிய ஈறுகளை ஏற்கின்றன.

இவ்வாறின்றிச் சில சொற்கள் காரணம் தெளிவாய்க் காட் டாமல் குறிப்பு வினைமுற்றாக வரும் எனத் தொல்காப்பியர் கூறுகிறார். இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, உள ஆகிய சொற்கள் அஃறிணை வினைக் குறிப்பு முற்றாய் வரும் என அவர் எடுத்துக் காட்டுகிறார். இச் சொற்கள் எல்லாம் பெரும்பாலும் உடன்பாட்டையும் எதிர் மறையையும் காட்டும் குறியீட்டுச் சொற்களாம். எனவே இவற்றைப் பொது விதியின் கண் இணைக்க இயலவில்லை. இவை முன்பின் அமைவதை ஒட் டிக்கொள்ள வேண்டும். ஆகவே இவை குறிப்பாகும்.

எனவே பெயர்வேறு. குறிப்பு வினைமுற்று வேறு. தெரிநிலை வினைமுற்று வேறு. ஒவ்வொன்றும் தத்தமக்குரிய சில தன்மை களைக் கொண்டுள்ளது. ஒவ்வொன்றும் மற்றதினின்று வேறு பட்ட இயல்புகளைக் காட்டுகின்றது. காலம் காட்டுவதையொட்டி பட்டும் தெரிநிலைவினை, குறிப்புவினை, என்ற பாகுபாடு செய்யப்

படவில்லை என்பது தெளிவாகிறது. ஆனால், காலப்போக்கில் சில உரையாசிரியர்களும் நன்னூலாருமே காலத்தைக் குறிப்பு வினையுடன் இணைத்துப் பிரித்துவிட்டனர்.

**மேற்கோள் நூல்கள்**


Fr. Beschi 1917. ***A grammar of the High Tamil***, St. Joseph's Industrial Press, Trichy.

Caldwell, Robert, 1956. *Comparative Grammar of the Dravidian Languages*, Madras University.

Subrahmanya Sastri, P. S. 1934. ***History of Grammatical Theories in Tamil*** Madras-2.

சுப்பிரமணியம், வி. ஐ. 1960 'குறிப்புவினை' செந்தமிழ் தொகுதி 56, பகுதி 1.

வரதராசன், மு. 1944 *The Origin and Development of verb in Tamil* (Unpublished dissertation), Madras University

,, '1959 'குறிப்புவினை' **Tamil Culture** Vol. VIII.

# 5

# முற்றெச்சம்

ஆ. சிவலிங்கனார்
மயிலம்

**முற்றும் எச்சமும்**

ஒரு வினைச்சொல் திணை, பால், எண், இடம் ஆகியவற்றோடு காலத்தையும் உணர்த்துமானால் அது முற்று எனப்படும். ஒரு வினைச்சொல் உணர்த்த வேண்டுவன இவையே. இவற்றை உணர்த்துதற்குரிய விகுதிகள் இடைநிலைகள் யாவும் முடிய நிற்கும் சொல் 'முற்று' எனப்படும். 'உண்டான்' என்பதில், இறுதி 'ஆன்' என்பது உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கை என்பவற்றை யுணர்த்த அஃதூர்ந்த 'ட்' என்பது இறந்த காலத்தை உணர்த்தியது காணலாம்.

'உண்டுவந்தான்' என்றவிடத்து 'உண்டு' என்பதில் திணை, பால், எண், இடம் ஆகியவற்றை யுணர்த்தும் இறுதி யில்லை. ஆனால் இறந்த காலத்தை யுணர்த்தும் 'ட்' என்பது மட்டில் உண்டு. அதனால் சொல் வடிவத்தில் – திணை முதலிய

வற்றை யுணர்த்தும் உறுப்பு இல்லாத இது - அவற்றை எஞ்சி யிருத்தலின் 'எச்சம்' எனப்படும்.

**சொல் தொடர்தல்**

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" (தொல் 640) என்றாலும் சொற்கள் தனித்து நில்லாமல் தொடர்ந்தே வரும். கருதிய பொருளை அறிவிக்கச் சொற்கள் கருவியாகப் பயன் படுதலின் சொற்கள் தொடர்ந்தே வரும். அப்படித் தொடரும் போது எவ்வெச்சொல் எவ்வெச்சொல்லோடு தொடரலாம் என வரையறையுண்டு. அதற்கேற்ப ஒரு முற்று தனித்து நில்லாது ஒரு சொல்லுடன் தொடரும்போது பெயர்ச்சொல்லுடன்தான் தொடரும் என்பது விதி.

"எத்திறத் தானும் பெயர் முடிபினவே" (தொல். 912) என்பது முற்றுக்கு விதிக்கப்பட்ட விதி. 'உண்டான் சாத்தான்' எனக்காணலாம்.

எச்சம் என்பது இருவகை; பெயரெச்சம், வினையெச்சம் என. பெயரெச்சச் சொல் பெயருடன் தொடரும்; வினையெச்சச் சொல் வினையுடன் தொடரும். 'உண்ட சாத்தன்', 'உண்டு வந்தான்' எனக் காணலாம்.

**முற்றெச்சம்**

'எச்சம்' என்பது பெயரையாவது வினையையாவது தொடரும் என்பதால் அதுபற்றி யாதோர் குறையும் நேராது 'முற்று' என்பது தனக்கு விதித்த பெயரோடு தொடராமல் வினையோடு தொடருமானால் அது குறைபாடுடையதாம். வினையோடு தொடரக்கூடாது என்பதற்காகவே ஆசிரியர் தொல்காப்பியர்,

"எத்திறத்தானும் பெயர்முடி பினவே". (தொல். 912) என்றார்.

'சாத்தன் உண்டான் வந்தான்' என்ற தொடரில், 'உண்டான்' என்ற முற்று 'வந்தான்' என்ற வினையொடு தொடர்ந்தது இது விதிக்கு மாறுபட்டது. அதனால் 'உண்டான்' என்பதை முற்று எனக் கொள்வதற்கில்லை. வினையொடு தொடர்தற்குரிய ஒருவினைச் சொல் எச்சமாகத்தான் இருக்கமுடியும். எனவே 'உண்டான்' என்பது முற்றாக இருந்தாலும் எச்சமாகத் திரித்துக் கொள்ளவேண்டும் சொல் நிலையில் முற்றாக இருந்தாலும் பொருள் வகையில் எச்சமாக இருத்தலின் 'முற்று வடிவில் உள்ள எச்சம்' எனக் கொள்ளவேண்டும். இதுவே 'முற்றெச்சம்' எனப்படும். 'உண்டான் வந்தான்' என்பது 'உண்டுவந்தான் எனப் பொருள்படும்.

**தொல்காப்பியர் சொன்னது**

முற்று, எச்சமாகவரும் எனத் தொல்காப்பியர் வெளிப்படையாகத் தனி நூற்பாவில் சொல்லவில்லை. "செய்கு என்னும் தன்மை யொருமை வினைமுற்றுச் சொல் பெயருடன் தொடர்தலே யன்றி வினையுடனும் தொடரும்; தொடர்ந்தாலும் அது முற்று என்ற இயல்பில் திரியாது" என்ற கருத்தில்

"செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்" (தொல். 689)

என்றார். இவ்விடத்துச் சேனாவரையர், "செய்கென் கிளவி அவ்வியல் திரியாதெனவே, 'பெயர்த்தனென் முயங்கயான்' (குறுந். 84) எனவும், 'தங்கினை சென்மோ' (புறம். 320) எனவும், 'மோயினள் உயிர்த்தகாலை', (அகம். 5) எனவும் ஏனை முற்றுச் சொல் வினை கொள்ளுங்கால் அவ்வியல்திரியும் என்பதாம். அவை திரிந்தவழி வினையெச்சமாதல் 'வினையெஞ்சு கிளவியும் வேறு பல்குறிய' (தொல். 940) என்புழிப் பெறப்படும்" (தொல் சொல். சேனா. ப. 133) என எழுதியுள்ளார். சேனாவரையர் எழுத்திலிருந்தும் நாம் வினைமுற்று எச்சமாக வரும் எனத் தொல்காப்பியர் வெளிப் படையாகக் கூறவில்லை என அறியலாம்.

முற்று, எச்சமாக வருவதைக் குறிப்பாகவே கொள்ளவைத்தார், ஆசிரியர் தொல்காப்பியர்.

**முற்றெச்சம் என்பதன் பொருள்**

‘பெயர்த்தனென் முயங்க’ என்ற விடத்துப் ‘பெயர்த்தனென்’ எனபது ‘பெயர்த்தேன்’ என்ற பொருள் தருதலின் முற்றாக இருந்து, ‘பெயர்த்து’ என்ற பொருளில் ஆளப்படுதலின் எச்சமாகத் திரிந்தது. ஆதலின் ‘முற்றெச்சம்’ என்பதற்குப் பொருள், “முற்றானது எச்சப் பொருளில் வருவது” எனக் கூறலாம். சேனாவரையர் இக்கருத்துடையவரே (தொல். சொல். சேனா. ப. 243).

‘பெயர்த்து’ என்றிருக்கவேண்டிய சொல்—அதாவது எச்சமாக இருக்கவேண்டிய சொல் ‘பெயர்த்தனென்’ என முற்றாய் வந்தது என்று உரையாசிரியர் (தொல். சொல் இளம். ப. 208) கருதினர் அவர் கொள்கைப்படி, ‘முற்றெச்சம் என்பது ‘முற்றாகத் திரிந்து வந்த எச்சம்’ என்று பொருள் படும்

எனவே முற்றெச்சம் என்பது, (1) முற்றானது திரிந்த எச்சம் எனவும் (2) முற்றாகத் திரிந்த எச்சம் எனவும் இரு பொருள்படும் என அறியலாம்.

**தொல்காப்பியர் கருத்து யாது?**
**உரையாசிரியர்**

இவ்விருவகைப் பொருளும் பொருந்துமேனும் ஆசிரியர் எதைக் கருதியிருப்பார்? “வினையெச்சத்துக்குக் கூறப்பட்ட இலக்கண முடிபுகளேயன்றி வேறுபட்ட முடிபுகளும் வினையெச்சம் கொள்ளும்” என்ற பொதுவான கருத்தில்

“வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய” (தொல் 940)

என்றார். வினையெச்சமானது வேறுபட்ட இலக்கணம் பெறுதல் என்பது, (1) தனக்கியல்பாகவுரிய ஒரு வாய்பாட்டெச்ச நிலை

யில் திரிந்து வேறு வாய்பாட்டெச்ச நிலையில் வருதலும், (2) தன் எச்சநிலை திரிந்து முற்றுநிலையில் வருதலும் என இரு வகைப்படும் என்பர் உரையாசிரியர் (தொல். சொல். இளம். ப. 208).

(1) "ஊற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய" (குறுந். 232)

(2) "பெயர்த்தனென் முயங்க" (குறுந். 84)

என்பன முறையே அவற்றுக்குக் காட்டுகளாம்.

எனவே வினையெச்சம் வேறுபட்ட இலக்கணத்ததாய் வரும் என்றமையால் முற்றெச்சம் என்பது, எச்சமாக இருப்பதே முற்றாகத் திரிவது என்னும் பொருளுடையதாம் என்னலாம் (முற்றாகத் திரிந்த எச்சம்).

**சேனவரையர்**

'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (தொல். 940) என்ற நூற்பாவுக்குச் சேனவரையர் உரைகூறியபோது "வேறு பட்டபல இலக்கணங்களை வினையெச்சம்கொள்ளும்" எனக்கூறி, அவற்றுள் ஒன்றாக,

"மோயினள் உயிர்த்த காலை" எனவும் (அகம். 5)

"கண்ணியன் வில்லன் வரும்" (கலி )

எனவும் முற்றுச் சொல்லது திரிபாய் வருதலும் கூறினர். எனவே, 'முற்றச் சொல் சொல்லால் திரியாமல் பொருளால் எச்சமாகத் திரிந்து வருவது முற்றெச்சம்' எனக் கொண்டார் அவர் என்னலாம்.

**தொல்காப்பியர்**

வினைமுற்றென்பது, "உயர்திணை, அஃறிணை, விரவுத்திணை ஆகிய மூன்று பொருள்கள் [illegible] [illegible], [illegible]

படர்க்கை என்ற மூவிடங்களில் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்காலம் பற்றித் தெரிநிலை, குறிப்பு என்ற இரண்டுவகையில் வரும்" (தொல். 910) எனக் கூறி

"எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்" (தொல். 911)

என்றும் கூறினர். இந்நூற்பாவின் பொருள், "எவ்விடத்து வினையாயினும்—எல்லாவினையும்—முற்றுச் சொல்லாகவே நிற்கும்" என்பதாம் (வேறு பொருளும் கூறுவர்). இவ்விடத்துச் சேனவரையர், "எல்லாவினையும் முற்றுச் சொல்லாம் எனவே எச்சமாதல் ஒருதலையன்று என்பதாம். ஆகவே, வினைச் சொல்லாதற்குச் சிறந்தன முற்றுச் சொல்லே என்பதாம். எல்லாவினையும் முற்றுச் சொல்லாகவும், கச்சினன், கழலினன், நிலத்தன் புறத்தன் என்னும் தொடக்கத்து வினைக்குறிப்பின் முதனிலை எச்சமாய் நில்லாமையும் வழக்கு நோக்கிக் கண்டு கொள்க" (தொல். சொல். சேன. ப 226–27) என்றெழுதியுள்ளா .

எனவே இயல்பான முற்றுச்சொல்லே காலப்போக்கில் எச்சமாக மாறும் என இது கொண்டு நாம் உணரலாம். அதாவது 'உண்டான்' என்ற சொல்லே சிதைந்து 'உண்டு' என எச்சமாக வந்ததாக அறியலாம் அதனல் 'உண்டான் வந்தான்' என்ற தொடரே 'உண்டு வந்தான்' என ஆகியிருக்கலாம்.

ஒருகாலத்தில் முற்றுக இருந்த சொல்லே காலப் போக்கில் சிதைந்து எச்சமாகத் திரிந்தது என்பதைக் கொண்டு பார்த்தால் முற்றெச்சம் என்பது, 'முற்றுதான் எச்சமாகத் திரிவது' என்ற பொருள்படுதலை அறியலாம். இதற்குத் தொல்காப்பியர் தரும் பிறிதொரு சான்றும் உண்டு.

"செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனர் புலவர்." (தொல். 689)

என்ற நூற்பாவும் சான்றுதரும் 'செய்கு' என்பது தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று பெயரொடு முடியவேண்டும் என்றாராகலின் 'செய்கு யான்' என அது வரும். அவ்வாறின்றி 'செய்கு வந்தேன்' என வினையொடு முடிந்தாலும் அச் 'செய்கு' என்பது வினைமுற்று நிலையில் திரிதல் இல்லை. எனவே மற்றைய வினைமுற்றுகள் வினையொடு முடிந்தால் திரிதல் உண்டு. இது கொண்டு பார்க்குமிடத்து வினைமுற்றே எச்சமாகத் திரியும் என்பது பெறப்படும்.

இத்தெளிவினால்தான் நன்னூலார், "வினைமுற்றே வினையெச்சமாகலும்" (நன். 351) என்றார்.

இதுகாறும் கூறியவாற்றால், 'முற்றெச்சம்' என்பது முற்றுச் சொல்லே எச்சமாகத் திரிவது என்பதறியலாம்.

**சில முற்றெச்சங்கள்**

செய்கு ஒரு வினைமுற்று எச்சமாக வருவது இறந்தகாலப் பொருளிலும் எதிர்காலப் பொருளிலும் ஆகும். அதாவது 'செய்து' என்னும் வாய்பாட்டெச்சமாகவும் 'செய' என்னும் வாய்பாட்டெச்சமாகவும் வரும்.

தன்மை ஒருமை வினை முற்றில் கு' கர விகுதி யேற்ற 'செய்கு' என்னும் வாய்பாட்டு முற்றும் எச்சமாக வரும் தகுதி யுடையதாம்.

'காண்கு வந்தேன்' என்பதன் பொருள், 'காண்பேன் வந்தேன், என்பதும் 'காண வந்தேன்' என்பதும் ஆம். தொல் காப்பியரும் பின்வந்தோரும் 'காண்கு' என்னும் செய்கென் கிளவி வினையொடு வந்தாலும் முற்றாகவே இருக்குமேயன்றி வேறாகத்திரிதல் இல்லை என்றனர்.

"செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்" (தொல். 689)

என்பது தொல்காப்பியம். இந் நூற்பாவில் சேனாவரையர். 'செய்கு' என்னும் முற்று 'செய' என் எச்சமாகத் திரியாது என்ற கருத்துக் கொண்டு பின்வருமாறு எழுதினார்.

"செய்கென் கிளவி வினையெச்சமாய்த் திரிந்ததாயின் செய்தென் எச்சமாதற் கேலாமையின் செயவென் எச்சமாய்த் திரிந்ததெனல் வேண்டும். வேண்டவே செயவென் எச்சத்திற்குரிய வினைமுதல் வினையும் பிறவினையும் அது கொள்வான் செல்லும். வினைமுதல் வினையல்லது கொள்ளாமையின் செய என் எச்சமாய்த் திரிந்தது என்றல் பொருந் தாது. பிறிதாறின்மையின் முற்றுச் சொல்லாய் நின்றதெனவே படும்" (தொல். சொல். சேனா. ப. 133) என்றெழுதிய அவர்க்கே மன அமைதியின்மையால் ஒருகால் 'செய்கு' என்பது 'செய' என் எச்சமாகவும் திரியலாம் என்ற எண்ணத்தால், "அல்லதூஉம் செய்கென் கிளவி சிறுபான்மையல்லது பெயர் கொள்ளாமையின் பெரும்பான்மையாகிய வினைகோடல் அதற் கியல்பேயாம். ஆகவே அது திரிந்து வினைகொள்ளும் எனல் வேண்டாவாம். அதனானும் முற்றாய் நின்று வினைகொண்ட தென்றலே முறையென்றுணர்க" (தொல். சொல். சேனா. ப. 133) என்றும் எழுதினார். 'செய' என் எச்சம் வினைமுதல் வினையும் பிறவினையும் கொள்ளும் என்பதால், 'செய்கு' என்பது திரியும் காலத்தும் அவ்விரு வினையும் கொள்ள வேண்டும் என்றது பொருந்துவதில்லை. 'உண்பேன் வந்தேன்', 'உண்பேன் வருவேன்' என்னும் இடங்களில் 'உண்பேன்' என்பது என்பது 'உண்ண' என்று, 'செய' என் எச்சப் பொருளில் திரியும் காலத்தில் அது வினைமுதல் வினை கொண்டதாம். பிற வினை கொள்ளவில்லை. 'உண்பேன் வந்தான்' என வாராதன்றோ? படர்க்கையிலும் 'உண்டான் வருவான்' என்பது 'உண்ண வரு வான்' எனத் தன்வினை கொள்ளுமேயன்றிப் பிறவினை கொள்ளா

தன்றோ? அதனால் 'காண்கு வந்தேன்' என்பது, 'காண வந்தேன்' என எச்சமாகவும் திரியும் எனலாம்.

அங்ஙனமாயின் செய்கென் கிளவி வினையொடு முடியினும் அவ்வியல் திரியாது என்ற கருத்து யாதாகும் என நினைத்தல் வேண்டும். பிற வினைமுற்றுகள் வினைகொண்டு முடியும் காலத்தில் எச்சமாகத் திரிதலுடன் வினையாலணையும் பெயராகவும் திரியும். 'காண்பேன் வந்தேன்' என்றால், 'காண்பேனாகிய யான் வந்தேன்' எனப் பொருள் தருதல் காணலாம். அப்படியின்றிக் 'காண்கு வந்தேன்' என்றால், 'காண்பேனாகிய யான் வந்தேன்' என வினையாலணையும் பெயராகத்திரிதல் அச் 'செய்கு' என் கிளவிக்கு இல்லை முற்றாகவே நிற்கும். இந்த வகையில் அந் நூற்பாவுக்குப் பொருள் கண்டால் தொல்காப்பியர்க்கும் 'செய்கு' என்னும் முற்றும் எச்சமாக வரும் என்ற கருத்துண்டு எனக் கொள்ளலாம்.

மார் ஈற்றுச் சொல்

'கொண்மார் வந்தார்' என்ற தொடரில் 'கொண்மார்' என்பது முற்று. கொள்ள வந்தார் என்ற பொருள் கொண்டு முற்று எச்சமாயிற்று என்றும் கொள்ளலாம். சேனாவரையர், "மாரைக் கிளவி வினையோடல்லது பெயரோடு முடியாமையின் எச்சமாய்த் திரிந்து வினை கொண்டது எனப்படாமையறிக" (தொல். சொல் சேனா. ப. 135) என்றெழுதினார். "பாடன் மார் எமர்" (புறம். 375) "காணன்மார் எமர்" (நற். 64) என்ற இடங்களில் பெயர் கொண்டதே என்றால் அவை, 'பாடுவார், காண்பார் என்னும் ஆரீற்று முற்றுச் சொல்லின் எதிர் மறையாய் ஒரு மொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன" என்றெழுதி, மார் ஈறாக ஏன் சொல்லக்கூடாது என்பதற்கு, "மார் ஈறாயின் அவை பாடாதொழிவார், காணாதொழிவார் என ஏவற்பொருண்மை புணர்த்துமாறில்லை என்க" (தொல்.

சொல். சேனு. ப. 35) என்றார். அவற்றக்குப் 'பாடுவாரல்ல ராகுக, காணுவாரல்லராகுக' என ஏவற்பொருள் கொண்டார் அவர். 'பாடமாட்டார், காணமாட்டார்' என்றே பொருள் கொள்வதும் உண்டு. ஆதலின் அவர் கொள்கை ஏற்பதற்கில்லை. அதனால் மார் ஈறும் எச்சமாகத் திரியும் என்னலாம். ஆசிரியர் தொல்காப்பியர் செய்கு என் கிளவிக்குக் கூறியது போல மாரைக் கிளவிக்குக் கூறாமையின் இது வினையொடு முடியுங் காலத்தில் எச்சமாகத் திரிதலேயன்றி வினையாலணையும் பெயராகவும் திரியும் எனக் கொள்ளலாம்.

'மாரைக் கிளவி வினையோடல்லது பெயரோடு முடியாது'

எனச் சேனாவரையர் கூறியதும் பொருத்தமில்லை.

'மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியுமென்ப'' (தொல். 692)

என்ற நூற்பாவில், காலக்கிளவியொடு என்று கொள்ளாமல் காலக்கிளவியொடும் என உம்மை யுள்ளதாகக் கொள்ளல் வேண்டும். 'கிளவியொடும்' என்பதன் மகரம் 'முடியும்' என்ற வருமொழி மகரம் நோக்கிக் கொண்டதாகக் கொள்ளவேண்டும்.

**வான், பான்**

'உண்ணுவான் வந்தான்', 'உண்பான் வந்தான்' என்ற இடங்களில் 'உண்ண வந்தான்', எனச் 'செய' என் எச்சமாகத் திரிந்தன. வான், பான் என்ற வடிவத்தில் வந்த முற்றுக்கள் காலப் போக்கில் படர்க்கையில் 'செய' என் எச்சங்களாகத் திரிதல் மட்டுமின்றித் தன்மை, முன்னிலைகளிலும் வந்து திரியலாயின. அதனால் அவ்விரண்டும் முற்று என்ற நிலையிழந்து 'வான்' விகுதி 'பான்' விகுதி எனப்பட்டு வினையெச்ச விகுதிகளாகவே பிற்காலத்தாரால் கொள்ளப்பட்டன. தொல்காப்பியர் காலத்தில் இவ்விரண்டும் 'செயற்கு' என்ற வாய்பாட்டில் அடங்கின. 'உணற்குவந்தான்' என்ற பொருளில் வந்தன.

முடிப்பு

இதுகாறுங் கூறியவாற்றால் 'முற்றெச்சம்' என்பது முற்றே, சொல்திரியாமல் பொருளால் எச்சமாகத் திரிவது என்பதும் 'செய்கு' என்னும் தன்மை ஒருமை வினைமுற்றும் மார் ஈற்று வினைமுற்றும் எச்சங்களாகத் திரியும் என்பதும் எதிர் காலத்தில் படர்க்கைக்கு வந்த வான் (வ் + ஆன்) பான் (ப் + ஆன்) என்பன பிற்காலத்தில் எச்சநிலையில் வந்தன என்பதும் பெறப்படும்.

7

# எச்சங்கள்

சு. தாமோதரன்
*திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி*

தமிழிலக்கணத்தின் ஒரு பகுதியாகிய எச்சங்கள் குறித்துப் பழைய இலக்கணமான தொல்காப்பியம் என்ன தெரிவிக்கின்றது? அதன் சொல்லதிகார உரையாசிரியர் ஐவரும் அதைப்பற்றித் தரும் விளக்கங்களில் உள்ள ஒற்றுமையும் வேற்றுமையும் என்ன? பிற்கால இலக்கண நூல்களும் அவற்றின் உரைகளும் காலப் போக்கிற்கேற்பக் கூறும் கருத்துககளின் வளர்ச்சி எத்தகையது? இன்றைய மொழியியல் கொள்கைகட்கும் அவற்றிற்கும் உள்ள தொடர்பு யாது? என அறிவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பொது

தொல்காப்பியர் சொல்லதிகார வினையியலில், வினையெஞ்சு கிளவி பெயரெஞ்சுகிளவி இரண்டுபற்றியும் அவற்றின் வாய்பாடு கள், அவை கொண்டுமுடியும் சொற்கள், எதிர்மறுத்துக் கூறப் பெறும் தன்மை, அடுக்கி வரும் இயல்பு முதலிய குறித்தும் 12

நூற்பாக்களில் (தொல். 713-24) கூறுகின்றார். பின்னர் எச்ச வியலில் பத்து எஞ்சுபொருட்கிளவியும் அவை முடியுமாற்றை யும் 12 நூற்பாக்களில் (தொல். 913-24) இயம்புகின்றார். இவ்விரண்டும் ஒன்றையே குறிப்பவை? அன்றி வேறு வேறு? என அறிதல் வேண்டும். வினையியலில் கூறப்பெறும் கருத்துக்களில் வேறுபாடு மிகுதியாக இல்லை. ஆனால் எச்சவிய லில் பத்துவகை எச்சங்கள் குறித்து உரையாசிரியர்கள் கூறும் கருத்துக்கள் பெரிதும் வேறுபாடுடையனவாக உள்ளன.

இவற்றை விரிவாக ஆராயுமுன் இன்னொரு கருத்தையும் நினைவுகொள்ளுதல் நலம். ஏறக்குறைய 300 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த சுவாமிநாத தேசிகர் என்பவர் தம் 'இலக்கணக்கொத்து' நூலில் சுட்டும் கருத்துக்களே அவை (இ கொ. 84). அவற்றின் சுருக்கம்: 1) அட்ட சோறு, சொன்னமொழி இவற்றில் வரும் அட்ட, சொன்ன என்பவை அடைகளே. 2) உண்டான் சாத் தன் என்பதே உண்ட சாத்தன் என வந்தது; எனவே முற்றின் விகாரமன்றி எச்சமென்று ஒன்றில்லை. 3) உண்ட, உண்டு எனக் குறைச் சொல்லாய் வருவன வினைச் சொற்களேயாதலின் எச்சம் ஒன்றே. 4) ஆனால் வருமொழி நோக்கின் வினையெச்சம், பெயரெச்சம் என இரண்டு எனலாம். 5) எச்ச வாய்ப்பாடுகள் பல; அவற்றை ஒன்றில் அடக்கி ஒரு எச்சம் எனல் பொருந் தாது. எட்டு உருபுகளும் வினையைக்கொள்ளும் போது அவை வினையெச்சமாகாவா? அவ்வாறே உவம உருபுகளையும் பிற வற்றையும் எச்சமென்னாதது ஏன்? 6) வாய்பாடுபற்றி வரும் எச்சங்களை ஒன்றாக்கியும், வான், பான் முதலிய ஈறுபற்றி வரு வனவற்றை ஒன்றாக்கியும் வினையெச்சம் இரண்டென்பர். இன் னும் இப்படிப் பல. செயற்கு - வினையெச்சம் என்பர் ஒரு சாரார்; செயல் என்னும் தொழிற்பெயர் 'கு' என்னும் உரு பேற்றது என்றும் கொள்ளலாமே – இவ்வாறு கேட்கப்பெறும் கேள்விகள் நம் ஆராய்ச்சிக்கு ஊக்கமளிப்பனவன்றோ?

**தொல்காப்பியம்**

திராவிட மொழியியலின் தந்தை எனத்தக்க தொல்காப்பியர் 2300 ஆண்டுகட்கு முன் தம் அருமை நூலில் கூறிச்சென்ற எச்சங்கள் பற்றிய விளக்கங்களை இனிக் காண்போம்.

**வினையெச்சம்**

வினையியலில் முதலில் வினையெச்சத்திற்கு ஒன்பது வாய்பாடுகள் தரப்பெறுகின்றன.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" (தொல். 713)

அடுத்த நூற்பாவில் பின், முன், கால், கடை, வழி, இடம் என்று முடிவுறும் வினைச்சொல்லாறும் அத்தகையன பிறவும் அவற்றியல்பின என்கின்றார் தொல்காப்பியர். உரையாசிரியர் அத்தகையன என்பதற்கு உண்பான், உண்பாக்கு என்ற இரண்டினையும் காட்டுகின்றார் (தொல். சொல். இளம். ப 115). முன் கூறப்பெறும் ஒன்பது வாய்பாடுகள், பின்வரும் ஆறு ஈற்று எச்சங்கள் இவற்றுள் எல்லாவினையெச்சங்களும் அடங்குமென்பது ஆசிரியர் கருத்தாதல் வேண்டும். ஆனால் அவரே எழுத்ததிகாரத்தில செய்யா என்னும் வினையெஞ்சுகிளவியைக் குறிப்பிடுகின்றார் (தொல். 222). அதனைச் செய்து என்னும் இறந்தகால வாய்பாட்டில் அடங்குமெனக் கொண்டால் வருமிழுக்கென்னை? உரையாசிரியர் 'செய்யூ' என்பதில் அடங்குமென்கின்றார் (தொல். சொல். இளம். ப. 115). மற்றும் தப்பி, ஓடி, பருகி எனவரும் இகர ஈற்று எச்சங்களும் போய், ஆய் என வருவனவும் செய்து வாய்பாட்டில் அடக்கப்பெறுகின்றன. ஏன்? உடன்பாட்டில் உகர ஈறு பெரும்பான்மை; எதிர்மறையில் உகரமே உள்ளது; எனவே உகரம் இகரமாகத் திரிந்ததெனக்

கோடல் பொருத்தமென்பர் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப. 149-50). இகரம், யகரம் இவ்விரண்டும் ஒருதன்மைய வாதலின், அவ் யகர ஈறும் உகர ஈற்றில் அடங்குமென்கின்றார் அவர். நச்சினார்க்கினியர் அதனை ஏற்றுக்கொள்ளாது பொருள் ஒற்றுமையைக் காரணமாக்குவர் (தொல் சொல் நச்சி. ப. 146).

இவ்வாய்பாட்டு வரிசைக்கு அவை உணர்த்தும் காலம் கொண்டு முடியும் வினை, வழக்குப்பயிற்சி இவை காரணமென்பதைக் கல்லாடர் அழகுறக் காட்டுவர் (தொல். சொல் கல். ப 171). **செய்து:** இறந்தகாலம்; **செய்யூ:** இறப்பும் நிகழ்வும்; **செய்பு:** முக்காலமும் என்பர் தெய்வச் சிலையார் (தொல். சொல். தெய்வ. 148) முதலில் அமையும் இம்மூன்றும், தன்வினைமுதல் வினையைக் கொண்டு முடியும். மற்ற ஆறும் தத்தம் வினைமுதல் வினையானும் ஆண்டு வந்து பொருந்தும் பிற வினையானும் வரையறையின்றி இயலுமாற்றான் முடியும். **செய்தென:** மருந்து தின்றெனப் பிணி நீங்கியது-இறப்பு; காரணமும். **செய்யியர், செய்யிய:** எதிர்காலம் உணர்த்தும். **செயின்:** எதிர்காலம்-காரணப் பொருட்டாயும் வரும். இது, செய்தால், செய்தலும் என ஈறு திரிந்தும் வரும் என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 147-149). மழைபெய்யக் குளம் நிறைந்தது - இறந்தகாலம் - காரணப்பொருள். குளம் நிறைய மழை பெய்தது - எதிர்காலம்-காரியப்பொருள். ஞாயிறுபட வந்தான்-நிகழ்காலம்- இது நிகழா நிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டு என்று விளக்குவர் நச்சினார்க்கினியரும் சிவஞான முனிவரும். இதன் மறை கூறாமல், கூறாமை என்பதுபோல் அமையும். **செயற்கு:** உணற்கு வந்தான்; மழை பெய்தற்குக் கடவுள் வாழ்த்துதும் — எதிர்காலம் - இவ்வாய்பாட்டை நன்னூலார் விட்டுவிட்டார் (நன். 343). தொழிற் பெயர் உருபு ஏற்றது என்றால் என்ன என்ற கேள்விக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம்:

உண்டான் + கு — உண்டாற்கு } இவற்றில் எச்சப்பொருள்
உண்டவன் + கு — உண்டவற்கு } தரும் மயக்கம் இல்லை.

உணல் + கு — உணற்கு — உண்டலைச் செய்தற்கு என எச்சப் பொருட்டாயே நிற்கின்றமையின் இஃது எச்சமே; மயக்கம் வேண்டா என்கின்றார் (தொல். சொல். நச்சி. ப. 149). கல்லாடர் "அதுவுமோர் வழக்குண்டு. பெயர்ப்பொருண்மை நோக்கியவழி அதுவாகவும் காலம் நோக்கியவழி வினையெச்சமாகவும் கொள்க" (தொல். சொல். கல். ப. 173) என்பர். இது சில தொகைச்சொற் களை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும் உவமைத் தொகையாகவும் கொள்ளுதலைப் போன்றது எனலாம்

வினையெச்சங்கள் சிலவற்றை வாய்பாட்டாற் கூறிப் பிற வற்றை ஈறுபற்றிக் கூறுவானேன்? பின்னர்க் கூறிய ஆறும் பெயர்த் தன்மையும் உடைமையின் வேறு ஓதினார் என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 150). கால வேறு பாட்டான் வரும் வாய்பாட்டுப் பன்மை யெல்லாம் ஒரு வாய் பாட்டால் தழுவ லாகாமையின் ஈறுபற்றி அடுத்த நூற்பாவில் அமைக்கப்பெற்றன என்பது சேனாவரையர் கருத்து (தொல். சொல். சேனா. ப. 151). செய்தவழி, செய்யாநின்றவழி, செய் கின்றவழி எனவருதல் காண்க. பின், முன் என்பன தனிச் சொற்போலப் பிரிந்து நிற்றலால் வேறு கூறினர் என்பர் பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார்.[1]

செய்பு, செய — இவை தொழிற்பெயர்களின் வடிவங்களே. செய்பியர், செய்யிய இவை ஒரே தன்மையனவாம். செய்வான், உண்பான் என்பன முற்றே எச்சமாக அமைந்தன. உண்பாக்கு என்பதுவும் தொழிற் பெயராதல் கூடும். "வேபாக்கு அறிந்து" (குறள். 1128) என வரும் குறள் காண்க.

**காலம் காட்டுதல்**

கொண்டு முடியும் வினையை ஒட்டி அவை பல்வேறு காலம் காட்டுவனவாக அமைதல் கண் கூடு. செய்து — இறந்தகாலம்.

---

1. சுப்பிரமணிய சாஸ்திரி, 1934, ப. 191

கொடி ஆடித் தோன்றும் — இங்கே அவ்வாய்பாடு நிகழ்காலம் காட்டுகின்றது.

| | |
|---|---|
| உழுது வரும் சாத்தன்<br>உண்டு வரும் சாத்தன் | இனி உழுது, இனி உண்டு எனவரு தலின் எதிர் காலத்திற்கும் ஏற்கும் |

தொல்காப்பிய நூற்பா 724 இக்கருத்தை உணர்த்தும். 'நீ உண்டு வருவாய்' என்பது நாளை உண்டு வருவாய் எனப் பொருள்தந்து உண்டல் தொழில் முன் நிகழ்ந்து ஆண்டும் தன் இறந்தகாலமே உணர்த்திற்று. ஆயினும் எதிர்காலத்தைப் பொருந்தும் இடம் உடைத்து எனக் கொள்க என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. 159). முடிபாய் வரும் வினைச் சொல்லாலுணர்த்தப் படுந் தொழிற்கு அவ்வெச்சத்தாலுணர்த்தப்படுந் தொழில் முன் னிகழ்தலே இறந்தகாலம் என்றது என்பர் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப. 158). செயின் எதிர்காலத்து மட்டுமே வரு கின்றது.

**பெயரெச்சம்**

பெயரெச்சத்திற்குச் செய்யும், செய்த, என்ற இரு வாய் பாடே கூறப்பெறுகின்றது. அவை அறுவகைப் பெயர் கொண்டு முடியும் என்பது சூத்திரம் (தொல். 719). இடம், பொருள், காலம், கருவி, கருத்தா அல்லது வினைமுதல், தொழில் என்ற வகைகளைத் தொல்காப்பியர் குறிக்கின்றார். வினையெச்சம் தன் வினை முதல் வினையையும் பிற வினைமுதல் வினையையும் கொண்டு முடியு மெனக் கூறுவது போன்றது இம் முடிபு எனலாம். இவற்றின் பயன் யாது? எல்லாப்பெயர்களையும் அவ்வறுவகையில் அடக்க முடியாது இடர்ப்பட நேருகின்றது. இன்னதற்கு இதுபயன் என்றவகையிலும் பொருட்டு, தீர்தல் முதலிய பொருள்களிலும் அவை அமைதலை நச்சினார்க்கினியர் காட்டுவர் (தொல். சொல். நச்சி. ப. 155). இவ்வாறு பொருள் முக்கியத்துவம் பெறும் வகையில் சொற்றொடரியல் விளக்கப்பெற்றிருத்தலின் சிறப்பை

மாற்றிலக்கண முறையை ஒட்டிப் பேராசிரியர் ச. அகத்திய லிங்கம் அவர்கள் விளக்கியிருப்பது அறியத்தக்கதாகும்[2].

செய்யும் என்பது எச்சமாகவும் முற்றாகவும் உள்ளமையின் முதலிடம் பெறுகின்றது என்கிறார் உரையாசிரியர் (தொல். சொல் இளம். 118) இருகாலமும் உணர்த்துவதனால் என்னலாமோ? அன்று நிகழ்கால வாய்பாடு தனித்து இல்லை. காலப் போக்கில் அவை தோன்றின. நன்னூலார் 'செய்கின்ற' என்ற வாய்பாடு சேர்க்கின்றார் (நன். 340). கிற, ஆநின்ற என்ற விகுதிகளைப் பெற்று வருவது நிகழ்கால எச்சம் என்கிறது வீர சோழியம் (வீர. 66). அகரத்தை விகுதி என நீக்கின் கிறு, ஆநின்று இடைநிலைகளாம். இவற்றோடு 'கின்று' வையும் கொள்ளு கின்றார் நன்னூலார் (143 . இலக்கணவிளக்கமும் அவ்வாறே (இ. வி. 48).

அறுவகைப் பெயரில் வினைமுதல் கொண்டு முடிந்தால் பின் வினைமுற்றுத் தொடர்ந்து பொருள் முடியுமென்றும் மற்ற ஐவகை முடிபும் முதலில் வினைமுதலைப் பெற்றுப் பின் வினை கொண்டு முடியுமென்றும் காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 154, 55). ஓதும் பார்ப்பான் வந்தான். எனவரும். 'ஓதும் நூல்' எனும் தொடர்க்கு முன் 'கண்ணன்' என்பது போன்று ஏதேனும் ஒரு வினைமுதல் வந்து பின் வினைமுற்றுச் சேர்ந்து பொருள் முடியும். தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப 153) இவ்வெச்சங்களைத் தொடர்மொழிபற்றிக் கூறும் வழிக் கூற வேண்டுமேயன்றிச் சொல்லிலக்கணம் கூறு மிடத்துக் கூறுவானேன் என்ற வினாவை எழுப்பி இவ்வாறு விடை கூறுவர்: ஈண்டு முடிக்குஞ்சொற் கூறப்பெறினும் உண்டு வந்தான் சாத்தன்; உண்ட சாத்தன் வந்தான் எனப் பெயரொ டும் வினையொடும் வந்தாலல்லது அவை முற்றுப் பெறுமையின் இவற்றினைத் தொடர்மொழி எனல் ஆகாது என்றுரைப்பது நோக்கத்தக்கது.

2. அகத்தியலிங்கம், 1969, ப. 12, 13

**எதிர்மறை எச்சம் - பொது**

எச்சங்கட்கு எதிர்மறை எவ்வாறு அமையும் என்று காட்டுவர் உரைகாரர்கள். எதிர் மறுப்பினும் பொருணிலை திரியா என்கிறார் தொல்காப்பியர் (721). கொள்ளாது என்ற எதிர்மறை எச்சம் வினையியல் நூற்பாவிலேயே (தொல். 683) வழங்குகின்றது. எதிர் மறைக்குக் காலமில்லை. இதன் காலம் கொண்டு முடியும் சொல்லைப் பொறுத்ததே. செயப்பாட்டு வினைகளாகவும் அவை அமையலாம்.[3]

**இடைப்பிறவரல்**

பெயர், வினை ஆகிய எஞ்சுபொருட்கிளவி இரண்டிற்கும் பொருந்திய வேறு சொற்கள் இடைவந்து நிற்றலை நீக்கார் என்கிறார் தொல்காப்பியர் (722).

| | | | |
|---|---|---|---|
| கொன்றயானை | — | கொன்ற **காட்டுள்** யானை | (இளம்.) |
| அட்ட சோறு | — | அட்ட **செந்நெற்** சோறு | |
| உழுது வந்தான் | — | உழுது **ஏரோடு** வந்தான் | (நச்சி.) |
| உழுது வந்தான் | — | உழுது **ஓடி** வந்தான் | |

இவ்வாறு வருதல் அண்மை உறுப்பு ஆராய்ச்சியில் இடம் பெறலாம்.

**எச்சவியல் எச்சங்கள்**

தொல்காப்பிய எச்சவியலிற் கூறப்பெறும் பத்துவகை எச்சங்களாவன :—

“பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி” (தொல். 913)

வினையியலுள்ளும் இடையியலுள்ளும் குறித்த எச்சங்கட்கு முடிபு கூறத்தொடங்கி முதலில் எச்சங்களைத் தொகுத்துத்

3. “தோட்கப் படாத செவி” (குறள். 418)

தருகின்றார் இதன்கண். இம் முறைவைப்பிற்கு உரிய காரணத்தை நினைதல் வேண்டும். 1) வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சு கிளவி இரண்டும் வினையியலுள் உணர்த்தப்பெற்றன. 2) பிரிநிலை, ஒழியிசை, எதிர்மறை, உம்மை, என என்ற ஐந்தும் இடையியலில் குறிக்கப் பெற்றவை. 3) சொல், குறிப்பு, இசை மூன்றும் முன் கூறப்பெறாதன. இவற்றுக்கெல்லாம் பொதுப்பட இவ்வியலில் முடிபு கூறுகின்றார் என்பர். முன் ஏழும் எஞ்சுபொருட் கிளவியான் முடிவன. இறுதி மூன்றும் ஒரு தொடர்க்கு ஒழிபாய் எச்சமாயின என்பர் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப. 228)

நன்னூலார் இப்பத்து எச்சங்களையும் இருவகையாகப் பிரித்துக் குறிப்பெச்சம் ஒன்றைத் தனியாகவும், மற்ற ஒன்பதினையும் சொல்லெச்ச மெனப் பெயரிட்டும் பேசுகின்றார் (நன். 360). இவ்வெச்சங்கட்கு விளக்கம் கூறும் வகையில் இருவேறு கொள்கைகள் தொன்றுதொட்டு இருந்து வந்துள்ளன. சில வேறுபாடுகள் இருப்பினும் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலியோர் போக்கு ஒரு தன்மையதென்றும், தெய்வச்சிலையார் போக்கு வேறு என்றும் தெரிகின்றது. நன்னூலுக்கு முதலில் உரைவகுத்த மயிலைநாதர் தம் உரையில் இப்போது கிடைக்காத அவிநய நூலுக்கு இராசபவித்திரப் பல்லவதரையன் என்பவர் எழுதிய உரைபற்றி எழுதுகின்றார் (நன். மயிலை. ப. 189). எச்சங்கள் பற்றியவரையில் அவ்வுரையாசிரியரும் தெய்வச்சிலையாரும் ஒத்த கொள்கையினர் என்பது தெளிவாகின்றது. முன்னவர் கருத்துக்களை முதலிற் காண்போம்.

**பிரிநிலையெச்சம்: ஏ-ஓ**

அவனே கொண்டான்; அவனோ கொண்டான்;—பிரிக்கப்பட்ட பொருளின் வினையாகிய கொண்டான் என்பது முடிபு என்பர் உரையாசிரியர் (தொல். சொல். இளம். ப. 196). சேனாவரையரோ பிறர் கொண்டிலர் என்பது அதன் முடிபு என்கிறார்

(தொல் சொல். சேனா ப. 239). அதனை மறுத்து நச்சினார்க்கினியர் கொண்டான் என்பதே முடிபு; பிறர் கொண்டிலர் என்பது பொருள்; கொண்டான் என்ற முடிபில்லையேல் பிறர் கொண்டிலர் என்ற பொருள் வாராது என்று விளக்குவர். சோற்றைப் பசித்து உண்டான் என்பதிற்போல, அவன் - ஏ- இரண்டிற்கும் முடிபு, கொண்டான் என்பதே, என்பது அவர் கருத்து (தொல் சொல். நச்சி. ப. 251).

**வினையெச்சம்**

இது வினையும் வினைக்குறிப்பும்
வில் சொல்லியதை மீண்டும் சொல்லக் காரணம் வினைக்குறிப்பு ஆக்கமொடு வரும் எனற்காக என்பர். மேலும் முன் சொல்லியது சிறப்பு விதி; இங்கு அமைவது பொது விதி என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 251, 52).

**பெயரெச்சம்**

முன் வினைமுதல், வினை என்று குறித்தது பெயரை மட்டுமே குறிக்கு மென்பது இங்கு உணர்த்தப்பெறுகின்றது. முன் கூறியது பொருள்படுமுறைமை; இங்கு முடிபு கூறுகின்றார். இது பொதுவிதி; முன்னது சிறப்பு விதி என்று மூவரும் முறையே குறிக்கின்றனர் (தொல். சொல். சேனா. ப 230. இளம். ப. 197; நச்சி. ப. 252).

**ஒழியிசையெச்சம் : மன் - தில் - ஓ**

1. கூரிய தோர் வாள்மன் — வாள்கோடிற்று — இற்றது.

2. வருகதில் கொண்கன் — வருக எனப்பட்டானும் கொண்கனும் அவனே.

3. கொளலோ கொண்டான் - கொளலோ எனப்பட்டானைய கொண்டான் என்பது.

இவ்வாறு ஒழியிசைப் பொருள்கொண்டு முடிந்தது என்கிறார் உரையாசிரியர் (தொல். சொல். இளம். ப. 197). நச்சினார்க்கினியர் இக்கருத்தினரே (தொல். சொல். நச்சி. ப. 252-53). சேனாவரையர் இரண்டு மூன்று உதாரணங்களில், வரின் இன்னது செய்வல், கொண்டுய்யப் போமாறறிந்திலன் என ஒழியிசையான் முடிந்தன என்பர் (தொல். சொல். சேனா. ப. 230).

**எதிர்மறை ஓ - ஏ - உம்**

1. யானோ கொண்டேன்
2. நீயே கொண்டாய்
3. வரலும் உரியன்

உரையாசிரியர் கூறுவது தெளிவில்லை (தொல். சொல். இளம் ப 198). நச்சினார்க்கினியர் வினைச்சொற்களின் "எதிர்மறைப் பொருளை உணர்த்தும் சொல்லை முடிபாக உடைய" என்பர் (தொல். சொல். நச்சி. ப. 253). சேனாவரையர் எதிர்மறைச் சொற்களால் முடிந்தன எனக் கொள்கிறார் (தொல். சொல். சேனா. ப. 230).

**உம்மை எச்சம்**

'சாத்தனும் வந்தான்' என்றால் கொற்றனும் வந்தான் அல்லது வரும் என வருதலாகிய ஒன்றிய வினைகொண்டு முடியும் என்பதே பலர் கருத்தும். இவ்வெச்சம் பற்றிய சூத்திரம் கொண்டு மற்ற ஐயப்பாடுகளையும் தெளிவாக்குகிறார் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 253-54).

**என எச்சம்**

இது வினையொடும் முடியும். கொள்ளெனக் கொண்டான் என்று உதாரணம் காட்டுகிறார். (தொல். சொல். இளம். ப. 199). இவர் குறிப்பு, இசை எச்சங்கட்குக் காட்டும் உதாரணங்களையும்

என எச்சத்திற்கே கொள்வர் மற்ற இருவரும். அதுவே பொருந்தும். என எனும் இடைச்சொல் ஆறு பொருளில் வரும். செய்தென என்பதை வினையெச்ச வாய்பாடாகவே தொல்காப்பியர் காட்டுகிறார். எண், பெயர் இவ்விரு பொருளில் வரும் 'என' எச்சம் வினைகொளா என்பதைக் காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 254). மற்ற நான்குமே வினை கொள்வன. இனி, மற்ற மூன்றிற்கும் மேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவி இல. எனினும் சொல்லெச்சத்திற்கு உண்டு என்கிறார் இளம்பூரணர் (தொல். சொல். இளம் ப. 200).

குறிப்பு - இசை

இளம்பூரணர் காட்டுவன (தொல். சொல். இளம். ப. 200) என எச்சத்தில் அடங்கிவிடும். "இளதாக முள்மரம் கொல்க களையுநர், கைகொல்லும் காழ்த்த விடத்து" (குறள். 879). இது தீயாரைக் காலத்தாற் களைக என்ற குறிப்புப்பொருளை வெளிப்படுத்தலின் குறிப்பெச்சம் என்கிறார் சேனாவரையர் (தொல் சொல் சேனா ப. 232-33). அது செய்யுட்கு உரித்து எனக் கூறிக் 'கற்கறிக்க நன்கட்டான்' என்பதனைக் காட்டித் தீங்கட்டான் என்பது குறிப்பு என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல் நச்சி. ப. 255–56).

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு." (குறள். 1)

இங்கு 'அதுபோல' எனவருவது இசை என்று சேனாவரையர் கூறுவதை, (தொல். சொல். சேனா. ப. 232-33) அது உவமத்தின் பாற்படுமென மறுத்து, 'வயிறு மொடு மொடுத்தது' எனின் உண்ண வேண்டா என்ற பொருளைக் குறித்தது இசையெச்சம் என்பர் அவர்.

சொல்லெச்சம்

'பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றாள்' எனச் சொல்லி நின்றாள் அல்லது சொல்ல நின்றாள் என்று முடியும் என்கிறார்

இளம்பூரணர். சொல் என்பது சேர்ப்பதன் முன்னும் சேர்த்த் பின்னும் அது சொல்லெச்சம் என்பர் அவர். 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' (தொல். 484). இதில் என்மனார் ஆசிரியர் என்று பொருள் படுதலால், 'ஆசிரியர்' என்பதுபோல் ஏதேனும்ஒரு சொல் எஞ்சுவது சொல்லெச்சம் என்கிறார் சேனாவரையர்(தொல். சொல். சேனா. ப. 234). மற்ற ஏழு எச்சங்கட்கும் 'முடிபின' எனக் கூறும் தொல்காப்பியர் பின் மூன்றிற்கும் "எஞ்சு பொருட் கிளவி இல" (தொல். 922) எனவும் சொல்லெச்சத்திற்கு "சொல்லள வல்லது எஞ்சுதல் இன்றே" (தொல். 924) எனவும் தெளிவுறக் கூறுவதால் அன்னார் கருத்து சரியெனத் தோன்றவில்லை.

**வேறு கொள்கை**

தெய்வச்சிலையார் எஞ்சுபொருட் கிளவி என்பதற்கு 'சொல்லா தொழிந்த பொருளை இனிது விளக்கும் சொல்' என்று பொருள்கொள்கின்றார். அச்சூத்திரத்து 'நெறிப்படத் தோன்றும்' என்பதற்குத் தொடர்மொழிக்கண் முன்னும் பின்னும் நின்ற சொல்லை நெறிப்படுத்துதற்கு ஆண்டுத் தோன்றும் என்று பொருள் தருகின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 243 44).

| | |
|---|---|
| 1 வினையெச்சம் என்பது ஒரு வினைச்சொல் எஞ்ச நிற்பது | இவை வினையியலுள் உணர்த்தப் பெற்றன அல்ல. |
| 2. பெயரெச்சம் என்பது ஒரு பெயர் எஞ்ச நிற்பது. | |

3 உம்மை கொடுக்க வேண்டும்வழி உம்மை எஞ்சி நிற்பது உம்மையெச்சம்.

4. என என்று சொல்ல வேண்டுங்கால் 'என' என்பது எஞ்சி நிற்பது என எச்சம்.

இந்நான்கிற்கும் தெளிவான முடிபுகள் கூறப்பெற்றுள்ளன. பிரிநிலை, ஒழியிசை, எதிர்மறை மூன்றும் அவ்வம் முடிபினவாம். தொகுப்புச்சூத்திர முறைவைப்பை ஒட்டிச் சொல்லெச்ச விளக்க மும் அதன் பின்வரும் அவையல்கிளவி (தொல். 925-26)

ஈ, தா, கொடு பற்றிய நூற்பாக்கள் குறிப்பெச்சமும் "பெயர்நிலைக் கிளவி" (தொல். 932) என வரும் நூற்பா இசை எச்சமும் உணர்த்துவதாக இவர் கொள்வது பொருத்தம் மிக்கது

இவர் கருத்திற்கும் அபிநய நூலுரைக்கும் மிகுதியான ஒற்றுமை உண்டு எனினும் ஒன்றினைப் பார்த்து ஒன்று எழுதப் பெற்றதாகக் கொள்ள இயலாது. உம்மையெச்சம், எனவென் எச்சம், பெயரெச்சம் இவற்றில் முழு ஒற்றுமை உண்டு. இசையெச்சம், எதிர்மறை எச்சம், ஒழியிசை எச்சம், வினையெச்சம் இவற்றில் ஒருசார் ஒற்றுமை உண்டு. பிரிநிலை, குறிப்பு, சொல் மூன்றுமே மாறுபடுகின்றன இவற்றின் விளக்கத்தினை அட்டவணையில் காணலாம்.[4] தெய்வச்சிலையாரின் சொல்லெச்சமும் அபிநய உரையின் குறிப்பெச்சமும் சேனாவரையர் குறிப்பெச்சமும் ஒன்றே. தெய்வச்சிலையாரின் பெயரெச்சமும் சேனாவரையரின் சொல்லெச்சமும் ஒன்றே.

தெய்வச்சிலையாரின் உரையை அப்படியே ஏற்றுக்கொள்வதற்கு இரு தடைகள் உள 1) ஒரே தொடரை இரு வேறு பொருளில் தொல்காப்பியர் வழங்குவாரா என்பது. 2) உம்மை எச்சம் பற்றிய நூற்பாவிற்கு அடுத்த நூற்பாவில் (தொல். 920) "செஞ்சொல் வருங்காலை" எனவரும் தொடரால் தெய்வச்சிலையார் உம்மை எச்சத்திற்குக் கூறும் பொருளின் பொருத்தமின்மை தோன்றுகிறது. மற்றபடி அவர்தம் உரைப்போக்கு பெரிதும் ஏற்புடையதாகவே உள்ளது பி சா சுப்ரமணிய சாஸ்திரியார் தம் சொல்லதிகாரக் குறிப்பில் இதனைத் தெளிவாக்குகின்றார்.[5] ஒரே தொடரை இரு வேறு பொருள்படத் தொல்காப்பியர் வழங்குவரோ என எழுப்பப்பெறும் தடைக்கு அவர் அவ்வாறு செய்திருப்பதை உணர்த்தவே "பிரிநிலைவினையே" (தொல். 913)

4. அட்டவணை பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.
5. சுப்பிரமணிய சாஸ்திரி, 1930, ப. 207-22.

எனப் பிரிநிலையை முதலில் அமைத்து நூற்பா அமைத்தனர் போலும் என விடை கூறலாம்.

முடிபு

வினையியல், இடையியல் இவற்றில் கூறப்பெறும் எச்சங்கள் வேறு; எச்சவியலில் உணர்த்தப்பெறுவன வேறு எனல் பொருத்தமாகும். ஒன்றே என்பார் இடையியலில் இடைச்சொல் உணர்த்தும் பல்வேறு பொருள்களில் தேற்றம், கழிவிரக்கம், ஐயம், வினா போன்றவற்றை விட்டுவிட்டு ஒழியிசை, எதிர்மறை, பிரிநிலை என்ற மூன்றுபற்றி வருவனவற்றிற்கு மட்டும் முடிவு கூறுவானேன் என்பதற்கு விடையிறுத்தல் வேண்டும். எல்லா வேறுபாடுகளையும் எடுத்துக்கொள்ளாது பெரும்பான்மையாக மிக்கு வரும் பொருள் வேறுபாடுகட்கே தொல்காப்பியர் முடிபு கூறுகின்றார் என ஒருவகையாக அமைதி கூறலாம். பெயரெச்சம், வினையெச்சம் இவற்றிற்குக் கொண்டுமுடியும் சொற்கள் கூறுபவர் வேற்றுமை உருபுகள், உவம உருபுகள் இவற்றுக்கும் முடிவு கூற வேண்டுமன்றோ? அவற்றையும் ஒருவகையில் எச்சமெனல் தகுமேனும் வேற்றுமைப் பொருளும் உவமைப் பொருளும் தரும் சிறப்பு நோக்கி இவற்றுள் இணைக்காது விட்டார் எனலாம். மற்றும், அவற்றிற்கு அவ்வவ்விடங்களில் முடிவு கூறப்பெற்றிருத்தல் உற்றுநோக்கின் உணரலாகும்.

இப்பத்து எச்சங்கள், அவை தொடர்களிலும் செய்யுட்களிலும் அமையுங்கால் நேரும் பொருள் அமைப்பினை விளக்க இம்முடிபுகள் கூறப்பெறுகின்றன என்பதே சால்பு. செய்யுளில் பொருள்கோள் அமையும் முறையை விளக்கும் தொல்காப்பியர்க்கு இம்முடிபு கூறுதல் வேண்டத் தகுவதொன்றே. இப்பத்தில் பெயர், வினை, உம்மை, என என்ற நான்கும் ஒருவகையன. முன்னைய அவ்வச்சொல் எஞ்சவருவன. பின்னவை அப்பொருள்பற்றி முடிவன என்று கோடல் தகும்.

## அட்டவணை

பத்துவகை எச்சங்கள்

| தெய்வச் சிலையார் உரை | மயிலைநாதர் காட்டும் அவிநய உரை |
|---|---|
| **1. பிரிநிலை எச்சம்** | |
| பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்ந்து முடிவுபெறுவது. 'இவன் கல்வியுடையன்'- சொல்லுவான் **இவ்வவையத்தாருள்** எனக் கருதினனாயின் அதுஎஞ்சி நின்றது பிரிநிலை எச்சம். 'இவட்குக் கண்ணழகிது' என்பதுமது. | "அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்.......எஞ்ஞான்றும் பெறுமின் பெரியார் வாய்ச்சொல்"-(நாலடி. 172). **எஞ்ஞான்றும்** என்பதனைப் பிறவழியும் காட்டி முடிக்க வேண்டுதலின் பிரிநிலை எச்சம் இதனை விளக்கு மென்ப (தீவக அணி). |
| **2. வினையெச்சம்** | |
| "அழுக்கா றுடையார்க் கது சாலும் ஒன்னார் வழுக்கியுங் கேடீன் பது" (குறள் 165)-கேடு பயத்தற்கு அழுக்காறு தானே அமையும். பகைவர் கேடு தருதல் தப்பியும் **வரும்**. வரும் என்னும் வினை எஞ்சி நின்றது அற்றார் அழி பசியுமது. | 'காலங்கருதி யிருப்பர் கலங்காது ஞாலங் கருது பவர்'(குறள்.485). **(கொள்ளும்)** காலம் என வினை கொண்டு முடிதலின் வினையெச்சம். வினைக் குறிப்பு, உருபு பெற்ற சொற்கள் இவற்றினையும் இதனுள் சேர்ப்பர் இவர். |
| **3. பெயரெச்சம்** | |
| "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே"(தொல்.484)-என்மனார் **ஆசிரியர்** என வேண்டுதலின் அப்பெயர் எஞ்சிநின்றது பெயரெச்சம். 'மருந்தெனின்' என்பதும் அவ்வாறே. **மக்கு** என்பது அங்கே எஞ்சியது. | 1) 'இணரெரி தோய்வன்ன இன்னாசெயினும்' -(குறள். 308) 2) "எண்ணென்ப ........வாழு முயிர்க்கு (குறள். 392). இவற்றில் **பிறர்** இன்னாசெயினும் எனவும், **உலகத்து**வாழுமுயிர்க்கு எனவும் எஞ்சிய பெயர் கொண்டு முடிந்தது. |
| **4. ஒழியிசை எச்சம்:** | |
| ஒழிந்த சொல்லால் பொருள் முடிவு பெறுவது. 'இவர் கல்வி யாற் குறைவிலர்' என்றால் | "செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை, காணிற் கிழக்காந்தலை (குறள் . 488). |

ஒழுக்கத்தால் அல்லது பொருளால் குறையுடையார் என்று பொருள் பட்டு அத்தொடர் முற்றுப் பெறுவது.

'கிழக்காந்தலை' என்பதன் துணிவு தோன்றுதற்கு ஒழிக்கப் பட்ட அவர் கெடுவர் என்பதைக் கொண்டு முடிதலின் ஒழியிசை எச்சம்.

5. **எதிர்மறை எச்சம்**

மறைப் பொருண்மையை எச்சமாக உடையது. "இம்மைப் பிறப்பிற் **பிரியலம்**" (குறள். 1325)- மறு பிறப்பிற் **பிரிவேம்** என நினைந்து என்று பொருள் உரைக்க வேண்டுதலின் எஞ்சி நின்ற தன் எதிர்மறைப்பொருளோடு முடிந்தவாறு.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி **சேராதார்**" (குறள். 10). **சேர்ந்தார்** நீந்துவர் என எதிர்மறை கொண்டு முடிதலின் எதிர்மறை எச்சம்.

6. **உம்மையெச்சம்**

சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் எனற் பாலனை, சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் என வருவது. 'இருதோள் தோழர்பற்ற' என்ற இடத்தும் தோளும் என்னும் உம்மை எஞ்சி நின்றது (உருபு தொகல், உம்மைத்தொகை, உம்மை எச்சம் இவை வேறுபாடுடையன).

இருகை வீசி- இருதோள்பற்றி- இங்கு உம்மை எஞ்சியது. கையும் தோளும் என உம்மை கொண்டு முடிதலின் உம்மை எச்சம்.

(இரண்டாவது உதாரணம் இருவர்க்கும் பொது)

7. **என எச்சம்**

வினையொடு முடியும் என்பதால் பெயரொடும் முடியுமெனக் கொள்க. முடிதல் - தொடர்தல். "பிரிநிலை வினையே....ஆயீரைந்தும்" (தொல். 913). இதில் என ஆயீரைந்தும் என்று பெயரொடு முடிந்தது. "வீடுணர்ந் தோர்க்கு வியப்பாமால்........... இரும்புலி சேர்ந்த இடம்"-இதில் இடமென, வியப்பாமால் என்று என என்பது எஞ்சி நின்றது வினை கொண்டது.

" எடுத்தலும் படுத்தலும் ஆயிரண்டல்லது நலிதலில்லை என்மரு முளரே", எடுத்தலும் படுத்தலும் என ஆயிரண்டு என்று என என்பதனை கொண்டு முடிதலின் எனவென் எச்சம். அது பெயர்கொண்டு முடிந்தது (மற்றொரு உதாரணம் இருவர்க்கும் பொதுவானது).

**8. சொல்லெச்சம்**

"நெடும் புனலுள் வெல்லு முதலை அடும்புனலின், நீங்கின் அதனைப் பிற" (குறள். 495). தமது நிலத்தில் எளியரும் வலியராவர்; பிறரது நிலத்தில் வலியரும் எளியராவர் என்ற பொருளை இச்சொற்கள் உணர்த்தலின் சொல்லெச்சம்.

"இசையா வொரு பொருள் இல்லென்றதுயார்க்கும் வசையன்று" (நாலடி. 111). இல்லென்றல் — இல்லென்று சொல்லுதல் என்று சொல்லென்பது கொண்டு முடிதலின் சொல்லெச்சம்

**9. 1. அவையல் கிளவி**

(அ) மங்கலம் (ஆ) இடக்கரடக்கல்—இவை வேறொன்றைக் குறித்துக் கூறுதலின் குறிப்பெச்சமாம்.

"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம், சால மிகுத்துப் பெயின்" (குறள். 475).

2. ஈ, தா, கொடு — இச்சொற்கள் தம்மானே இழிந்தோன், ஒப்போன், மிக்கோன் என்னும் பொருள் எஞ்சி நிற்றலின் குறிப்பெச்சமாம்.

மெலியரும் பலர்தொகின் வலியராகுப எனக்குறித்த பொருள் கொண்டு முடிதலின் குறிப்பெச்சம் (நுவலா நுவற்சியுமது).

**10. இசையெச்சம்**

1. பெயர்நிலைக்கிளவி-'வேங்கை' இருபொருள் தரல்
2. திசைநிலைக் கிளவி - 'கரை'- இருபொருள் தரல்
3. தொன்னெறிமொழி - குன்றேறு மா முதலியன
4. மெய்நிலைமயக்கின் ஆகுந - சிலேடைகள்
5. மந்திரப்பொருள் - குழூஉக்குறி, எழுத்துப்பேறு முதலிய, இவை இசையெச்சம்

ஒன்று சொல்ல அச்சொல்லானே வேறுபொருளிசைத்தல்- அதாவது இரட்டுற மொழிதல். "குமரியாட மூப்பொழியும்" எனல். சொன்ன பொருள் ஒழிய வேறு **இசைந்த** பொருள் கொண்டு முடிதலின் இசையெச்சம் (சிலேடை என்ப).

**மேற்கோள் நூல்கள்**

Agesthialingom, S. 1969 'Tolkappiar's treatment of Syntax *A:ra:ycci*, Vol. I, pp. 238-248.

சுப்பிரமணிய சாஸ்திரியார், பி. சா. 1930. **தொல்காப்பிய சொல்லதிகாரக் குறிப்பு**, சென்னை

,, 1934, *History of Grammatical Theories in Tamil*, Madras.

# 8

# வினையெச்சம்

கி. கருணாகரன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1. தமிழ் இலக்கண நூல்களில் ஆராயப்படும் வினையெச்ச வகைகளுள் ஒன்றாகிய செய்தெனெச்சமும் அதன் எதிர்மறையும் தற்கால விளக்க மொழியியல் கொள்கைகளின் அடிப்படையில் **வினையெச்சம்** (verbal participle) என்று சிறப்பாகக் கூறப்பட்டு கீழ்க்கண்ட சொல்லியல் அமைப்பினை (morphological Structure)க் கொண்ட ஒன்றாக விளக்கப்படுகிறது.

| 1 | | 2 | | 3 |
|---|---|---|---|---|
| வினையடி | + | { இறந்தகாலப் பின்னொட்டு, எதிர்மறைப் பின்னொட்டு } | + | வினையெச்சப் பின்னொட்டு |

எ. கா.

| 1 | | 2 | | 3 | | |
|---|---|---|---|---|---|---|
| வா | — | ந்த் | — | உ | > | வந்து |
| சொல் | — | இன் | — | φ | > | சொல்லி |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| படி | — | த்த் | — | உ | > | படித்து |
| ஓடு | — | ஆ | — | து | > | ஓடாது |
| செய் | — | ஆ | — | மல் | > | செய்யாமல் |
| நட | — | ஆ | — | மல் | > | நடக்காமல் |

இவ்வாறு தமிழ் இலக்கணச் சொல்லியல் பகுதியில் (morphology) மிகவும் எளிதானதொரு அமைப்பினைக் கொண்டு விளங்கும் இவ் வினையெச்சம், தொடரியல் (syntax) பகுதியில் அதன் அமைப்பிலும் பொருளிலும் மிகவும் சிக்கல் நிறைந்த ஒரு இலக்கணப் பிரிவாகக் காணப்படுகிறது.[1]

2. தமிழில் இவ்வினையெச்சம் மிகுதியாகப் பயன்படுத்தப் படுகிறது. தமிழில் இவ்வினையெச்ச வாக்கியங்களில் இறுதியில் வந்து நிற்கும் வினைச்சொல் மட்டுமே முற்று வினையாகவும் (finite verb) மற்ற வினைச் சொற்கள் யாவும் எச்ச வினைகளாக வும் (non-finite verbs) இருக்கின்றன. வினையெச்சமும் முற்றுவினை யும் வாக்கியத்தில் அண்மை உறுப்புக (immediate constituents) ளாக அமைந்து பலவகைப்பட்ட இலக்கணத் தொடர்பு (grammatical relation) களைக் கொண்டு வேறுபட்ட பொருள் களில் வருகின்றன. இவ்வகையான இலக்கணத் தொடர்பு களால் ஏற்படும் மாற்றங்களையும் பொருள் மாறுபாடுகளையும் விளக்குவதற்காகத் தற்கால மாற்றிலக்கணக் கொள்கையின் அடிப்படையில் 'அகப்படுக்கும் வாக்கியத்தில்' (embedding sentence) சில 'தனிச் சொல்லியன்கள்' (particles), எடுத்துக் காட்டாக, பின், பிறகு, உடனே, அப்படி போன்றவை இணைக் கப்படுகின்றன.[2] இவ்வாறு தனிச்சொல்லியன்களை இணைத்து அகப்படுக்கும் வாக்கியம், அகப்படும் வாக்கியம் (embedded sentence) ஆகிய இரண்டு வாக்கியங்களின் தொடர்பால் வினை யெச்ச வாக்கியம் பெறப்படுகிறது.[3] அதாவது அகப்படும்

1. Agesthialingom, 1967, ப. 134; 1971, ப. 1-8.
2. Agesthialingom, 1967, ப. 134-65.
3. கோதண்டராமன், இரா. 1971.

வாக்கியத்தில் உள்ள முற்றுவினை, அகப்படுக்கும் வாக்கியத்தினுள்ள தனிச் சொல்லியன் இவற்றின் இணைப்பால் வினையெச்சமானது பெறப்படுகிறது.

கீழே கொடுக்கப்பட்டுள்ள படங்கள் எவ்வாறு அகப்படும் – அகப்படுக்கும் வாக்கியங்கள் ஒன்றினுள் ஒன்று பொதிந்து காணப்படுகின்றன என்பதையும், தேவையான வினையெச்ச வாக்கியங்கள் மாற்றிலக்கண முறைப்படி எவ்வாறு பெறப்படுகின்றன என்பது பற்றியும் தெளிவாக விளக்குகின்றன. இங்கு முற்று வினை – வினையெச்சம் ஆகியவற்றிற்கிடையே காணப்படும் இருவித இலக்கணத்தொடர்புகள் விளக்கப்பட்டுள்ளன.[4]

**முற்றுவினை - வினையெச்சம்: இலக்கணத்தொடர்புகள்**

1. **'அடுத்து வரும்''** (Sequential) **இலக்கணத் தொடர்பு**

**படம்.1**




4. Karunakaran, 1969. ப. 508, 509.

நான் உணவு உண்பேன் (1) (அகப்படும் வாக்கியம்)
நான் பிறகு/பின் வீட்டிற்குப் போவேன் (2) (அகப்படும் வாக்கியம்)
நான் உணவு உண்டு வீட்டிற்குப் போவேன் (3)
(வினையெச்ச வாக்கியம்)

**2. 'மாதிரி' (manner) இலக்கணத் தொடர்பு**

**படம். 2**




நீ நிற்காதே — (4) (அகப்படும் வாக்கியம்)
நீ அப்படிப் போ — (5) (அகப்படுக்கும் வாக்கியம்)
→ நீ நிற்காமல் போ — (6) (வினையெச்ச வாக்கியம்)

3. தற்கால விளக்க மொழியியலார் கூறும் இவ்வினையெச்சத்தை (Verbal participle) தமிழ் இலக்கண நூலார் வினையெச்ச வினை (non-finite verbs) என்னும் பெரும் பிரிவின் துணைப்

பிரிவாகவே கருதியுள்ளனர். செயவெனெச்சம் (infinitive), செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் (Conditional) போன்றவையும் இவற்றுள் அடக்கப்பட்டன (தொல். 713; நன். 343). இவ் வினையெச்சத்தின் சொல்லியல், தொடரியற் கூறுகள் பற்றிய தற்கால விளக்க, மாற்றிலக்கண மொழியியற் கொள்கைகளும் பழந்தமிழ் இலக்கண நூல்களில் கூறப்பட்ட கருத்துக்களும் ஒப்பிடத்தக்கன.

இவ்வினையெச்சம் பால், எண், இடம் ஆகிய அனைத்திற்கும், பொதுவானதாகும்.

"தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச்சம்மே" (நன். 342

என்பது நன்னூல்.

எ. கா.

| | | |
|---|---|---|
| நடந்து | வந்தேன் | வந்தோம் |
| | வந்தாய் | வந்தீர் |
| | வந்தான் | வந்தார் |
| | வந்தாள் | |
| | வந்தது | வந்தன |

இது வினையெச்சத்தின் சொல்லியல் அமைப்பைக் காட்டுகிறது. இது முன் (1) விளக்க மொழியியல் அடிப்படையில் காட்டப்பெற்ற அமைப்பை ஒத்திருப்பதைக் காணலாம்.

மாற்றிலக்கணக் கொள்கையின் அடிப்படையில் அகப்படும் வாக்கியத்திலுள்ள வினைமுற்றே எச்சமாக மாறுகிறது என்பது முன்னர்க் (2) காட்டப்பட்டது. இலக்கணக்கொத்து ஆசிரியர் சுவாமிநாததேசிகர் இக்கருத்தைப் பின்வருமாறு கூறுகிறார்.

" எச்சமென்று ஒன்றில்லை இவையடை என்றும்
வேறெச்சம் என்றிலை விகாரமுற்று என்றும்" (இ. கொ. 84)

இவ்வாறு, எச்சமென்று வேறில்லை; அது முற்றின் விகாரமே எனக்கூறி, "உண்டான் சாத்தன்; உழுதான் வந்தான் என்பன விகாரப்பட்டு உண்ட சாத்தன்; உழுது வந்தான் என நிற்றலால்" (இ. கொ. ப. 82) என உரை கூறுவார். புறநிலை (Surface structure)யில் எச்சமாய் நிற்பவை புதைநிலை (deep structure)யில் முற்றே; மாற்றுவிதி (Transformational rule) களால் எச்சவடிவை எய்துகின்றன என்ற மாற்றிலக்கணக் கொள்கையோடு இக்கருத்தை ஒப்புநோக்கின், மொழியின் இவ்வியல்பை சுவாமிநாத தேசிகர் நன்குணர்ந்து நூல் செய்துள்ளமை புலனாகும்.

4 வினையெச்ச வாய்பாடுகளை,

"செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" (தொல். 713)

என்று கூறிய தொல்காப்பியர்,

"பின்முன் கால்கடை வழிஇடத்து என்னும்
அன்ன மரபின் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே" (தொல். 714)

என்று கூறுகிறார். இவற்றுள் செய்து முதலாய ஒன்பதினையும் தனி வினையெச்சமென்றும் (Simple verbal participles) பெயரெச்சமும், பின்முதலாய ஆறனுள் ஒன்றும் சேர்ந்து வரும் வினையெச்சங்களைக் கூட்டு வினையெச்சம் (Compound verbal participle) என்றும் கூறுவர்.[5] பின்முதலாய தனிச் சொல்லியன்கள் இங்கு பெயரெச்சங்களுடன் கூடி வினையெச்சங்களை உருவாக்கியுள்ளன.

இப் பின் முதலிய ஆறும் வினையெச்ச வாய்பாடுகளாகக் குறிக்கப் பெறினும், அவை காலம், இடம் ஆகிய பொருள்களைத் தரும் தனிச்சொல்லியன்கள் அல்லது பெயர்களாகத் தோன்றுகின்றன. பெயரெச்சத்தை அடுத்து வரும் தன்மையும் நம்

5. அகத்தியலிங்கம், 1972 ப. 214.

ஐயத்தை வலியுறுத்துகின்றது. பெயரெச்சப், பெயர்த்தொடர்களாயிருந்து காலப் போக்கில் அவற்றின் பொருண்மை காரணமாக வினையெச்சமாகத் தொழிற்பட்டிருக்கக் கூடும்.

பெயரெச்சம் + {பெயர்ச்சொல், தனிச் சொல்லியன்கள்}

1. வந்த + பின்
2. வரும் + முன்
3. கற்ற + கால்
4. தானுற்ற + இடத்து
5. உற்ற + வழி
6. உற்ற + கடை

மேலும், இவை ஏழாம்வேற்றுமை இடப்பொருள் உணர்த்தும் உருபுகளாகக் கூறப்பட்டிருப்பதும் (தொல். 566, நன். 302) இங்கு கருத்தில் கொள்ளப்பட வேண்டியதாகும். இச்சொல்லியன்களின் தன்மை மேலும் ஆராயப்பட வேண்டியதொன்றாகும். தொல்காப்பியரே இவ்வாறனையும் செய்து முதலிய ஒன்பதினின்றும் வேறாகக் கூறியிருப்பது கருத்தில் கொள்ள வேண்டியதாகும்.

5. இனி, மேல் ஆராயப்பட்ட வினையெச்சத்துடன் மற்ற வாய்பாட்டு வினையெச்சங்களைத் தொல்காப்பியரைப் பின்பற்றிப் பவணந்தியார் பின்வருமாறு கூறுவார்.

"செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்குஇன வினையெச் சம்பிற
ஐந்தொன்று ஆறுமுக் காலமும் முறைதரும்" (நன். 343)

தொல்காப்பியர் கூறுவனவற்றுள் (தொல். 713) செயற்கு என்னும் எச்சத்தை ஒழித்து, செய்யா என்னும் எச்சத்தையும் வான், பான், பாக்கு என முடியும் மூன்றினையும் சேர்த்து பன்னிரெண்டு எச்சங்கள் கூறுகிறார். தொல்காப்பியர் அடுத்துக்

கூறிய (தொல். 714) பின், முன் முதலாயவற்றை நன்னூலார் கூருதது நோக்கத்தக்கது. பவணந்தியார் இவை காலங்காட்டு மாற்றையும் உணர்த்துகிருர். செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென என்னும் ஐந்தும் இறந்த காலத்தையும் செய வென் எச்சம் நிகழ்காலத்தையும் ஏனைய எதிர் காலத்தையும் காட்டும். இவற்றுள் செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்ற நான்குடன் வான், பான், பாக்கு என்ற மூன்றும் வினை முதலைக் கொண்டு முடியும்; மற்றைய வினைமுதலையும் பிற வற்றையும் கொண்டு முடியும் என்பர் பவணந்தியார் (நன். 344)

**வினைமுதல் கொள்வன**

"வாளொடு கனையிருள் வந்து தோன்றினன்" (சீவக. 320)

"புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்த" (புறம். 33)

"கல்லாக் கழிப்பர் தலையாயார்" (நாலடி. 366)

"படுமகன் கிடக்கைகாணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தன்னே" (புறம். 278)

"கொல்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்"
(பு. வெண்பா. 99)

"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்"
(நான்மணி. 28)

"புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றுன்"

**பிறவும் கொள்வன**

"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் யானைக் கோடுகொடுத் துண்ணும்"
(குறுந். 100

"கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" (புறம். 70)

"தாம் வேண்டின் நல்குவர் காதலர் யாம் வேண்டும்
கௌவை எடுக்கும் இவ் வூர்" (குறள். 1150)

" மாணிழை அரிவை காணிய ஒருநாள்
பூண்க மாளநின் புனைவினை நெடுந்தேர்" (பதிற். 81)
" பசலை உண்ணியர் வேண்டும்" (குறுந். 27)

நன்னூலார் வினைமுற்று எச்சப் பொருளில் வருவது பற்றிப் பேசுகிறார்.

" வினைமுற் றேவினை எச்சம் ஆகலும்
குறிப்புமுற்று ஈரெச்சம் ஆகலும் உளவே" நன். 351)

இது, " மோயினள் உயிர்த்த காலை " (அகம். 5) போன்ற தொடர்களில் எச்சப்பொருளில் வரும் முற்றெச்சங்களைப்பற்றிப் பேசுகின்றது. இது எச்சமானது முற்றின் விகாரமே எனக் கூறும் இலக்கணக் கொத்தின் கருத்திலிருந்து (இ. கொ. 54) மாறுபட்டதாகும்.

(நன்றி: இக்கட்டுரையினை எழுதும் போது பல நல்ல கருத்துக்களைச் சொல்லியுதவிய திரு. க. பாலசுப்பிரமணியன், டாக்டர் பொன். கோதண்டராமன் ஆகியோர்க்கும் கருத்தரங்கில் கலந்துரையாடலில் பல அரிய கருத்துக்களைத் தெரிவித்த அனைவர்க்கும் என் நன்றி.)

**மேற்கோள் நூல்கள்**

A gesthialingom, S. 1967. *A Generative Gramnar of Tamil* Annamalainagar.

" 1971 'திருக்குறளில் செயவென் எச்சம்', ஆய்வுக்கோவை, அண்ணாமலைநகர்.

" 1972, 'வினையெச்சம்பற்றித் தொல்காப்பியர்', தொல்காப்பிய மொழியியல், (பதிப்பு) அகத்தியலிங்கம். ச; முருகையன், க., அண்ணாமலைநகர், ப. 207-232

Karunakaran, K. 1969, *A Descriptive Grammar of the Dialect of the Kollimali Tamil*, Ph. D. dissertation, Annamalai University, Annamalainagar.

கோதண்டராமன், இரா. 1971 'முற்றெச்சங்கள்', செந்தமிழ், மதுரை.

# 9

# உரிச்சொல்

ச. சாம்பசிவன்
செந்தமிழ்க் கல்லூரி, மதுரை

**முன்னுரை**

உரிச்சொல்லின் இலக்கணம் உணர்த்துவது "உரியியல்" ஆகும். தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம் முதலான நூல்களில் உரிச்சொல்லின் இலக்கணம் இயம்பப்படுகின்றது. இதுபற்றி ஈண்டுச் சிறிது ஆராய்வோம்.

**உரையாசிரியர்கள் உரைத்திறம்**

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை" (782) எனும் தொல்காப்பிய நூற்பா, இவ்வுரிச்சொல்லின் பொதுவிலக்கணத்தை எடுத்துரைக்கிறது. இதற்கு உரையாசிரியர் பலரும் பலவிதமாக உரை கூறிப்போந்தனர். உரிச்சொல், பெயர்பற்றியும் வினைபற்றியும் வருமிடத்து, ஒருசொல் பல்பொருட்கு உரிமைப் பட்டுத் தடுமாறுதலும், பலசொல் ஒரு பொருட்கு உரிமைப்

பட்டுத் தடுமாறுதலும் உரிச்சொல் இலக்கணமாம் என்பர் உரையாசிரியர் இளம்பூரணர் (தொல். சொல். இளம். ப. 144).

"உரிச்சொல் என்பது யாதோ எனின், ஒருவாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்குத் தானும் உரித்தாகி வருவது. அதனானேயன்றே, 'ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும், பல சொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்' என ஓதுவாராயினர். எழுத்ததிகாரத்துள் இதனைக் 'குறைச்சொற் கிளவி' என்று ஓதினமையால் (482) வடநூலாசிரியர் தாது என்று குறியிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும், அவையும் குறைச்சொல் ஆகலான்" என்பர் தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப. 190)

"மெய்தடுமாறுதலும் ஒருசொல் பல பொருட்கு உரிமையும் பலசொல் ஒருபொருட்கு உரிமையும் உரிச்சொற்கு உண்மையான் ஓதினாரேனும் உரிச்சொற்கு இலக்கணமாவது இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருட்கு உரியவாய் வருதலேயாம்" என்பர் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப. 185).

"தமக்கு இயல்பு இல்லா இடைச்சொல் போலாது, இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருள்கட்கு உரியவாய் வருதலின் உரிச்சொல் ஒத்து என்னும் பெயர்த்தாயிற்று. ஈறுபற்றிப் பல பொருள் விளக்கலும் உருபு ஏற்றலும் இன்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து பொருட்குணத்தை விளக்கலின் உரிச்சொல் பெயரின் வேறு என்று உணர்க" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 190).

**நன்னூல் நயவுரை**

"பல்வகைப் பண்பும் பகர்பெயராகி" (நன். 442) என்னும் நன்னூல் நூற்பாவும், இவ்வுரிச் சொல்லின் இலக்கணம் பேசுகிறது. "பல்வகைப் பண்பென்றது தொழிற் பண்பும் தழுவுதற்கு என்க. ஆயின் இருவகைப் பண்பும் பகர் பெயராகி

என்று சூத்திரம் செய்யாது வைத்து ஞாபகமாகக் கூறவேண்டு வது என்னையோ எனின், தொழிற் பெயர் எல்லாம் உரிச் சொல்லெனப்படா ஆதலின் செய்யுட்கே ஏற்று வருவன சில கோடற்கும் தொழில் கருவியாற் பெறப்படுதலால் ஏனைப் பண்புகள் போல ஒருதலையான ஒற்றுமைச் சிறப்பின அல்ல என்பது அறிவித்தற்கும் எனக்கொள்க" என்பர் மயிலைநாதர் (நன் மயிலை. ப. 240).

"குணப்பண்பும் தொழிற் பண்புமாகிய இரண்டனுள் அடங் கும் பல வேறுவகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெய ராகி, அங்ஙனம் உணர்த்துழி, ஒரு சொல் ஒரு குணத்தை உணர்த் துவனவும் பல குணத்தை உணர்த்துவனவுமாய், ஏனைப் பெயர் வினைகளைவிட்டு நீங்காமையின் வேறுபடுத்தப்பட்டன வென்பதூஉம் செய்யுட்கு உரியனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்குறி போந்ததென்பதூஉம் இவற்றின் இலக்கணம் கூறிய முகத்தால் உணர்த்தியவாறு காண்க என்பர் சங்கரநமச்சிவாயர் (நன். சங்கர. ப. 361, 62).

" நால்வகைச் சொற்களும் செய்யுட்குரியனவாய் வருதலின் இவர் (பவணந்தியார்) செய்யுட்குரியன உரிச்சொல் என்றது பொருந்தாதென்பதும், இசையும் குறிப்பும் பண்புமாகிய மூவ கைப் பொருளுக்கும் உரித்தாய் வருதலின் உரிச்சொல் என்பது பொருந்து மென்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார், 'உரிச்சொற் கிளவி விரிக்குங்காலை' (782) எனக் கூறிய இச் சூத்திரத்தால் உய்த்துணர்ந்து கொள்க" என்பர் முகவை இராமானுசக் கவி ராயர் (நன். இராமானுச. ப. 346, 47).

**இலக்கண விளக்கவுரை**

இனி, 'இலக்கண விளக்க' நூலில் "குறிப்பும் பண்பும் இசை யும் தோன்றி" (280) என்ற நூற்பா வாயிலாக ஆசிரியர் வைத்தியநாத தேசிகர் கூறும் உரிச்சொல்லின் பொதுவிலக் கணம் வருமாறு :—

'குறிப்பும் பண்பும் இசையும் ஆகிய மூன்று பொருண்மையும் உணர்த்திப், பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் போலத் தம்மைக் காட்டி, அவ்விருகூற்று மொழிக்கும் முதல் நிலையுமாய், அவற்றின்கண், முன்னாகப் பின்னாகத் தாம் நிற்றற்கு உரிய நிலைக்களங்களில் நின்று, பலசொல் ஒரு பொருட்கு உரிய ஆதலையும், ஒருசொல் ஒருபொருட்கு உரித்தாதலே அன்றிப், பல பொருட்கு உரித்தாதலையும் உடையவாகி, பெயர் வினை போல ஈறுபற்றிப் பொருள் உணர்த்தலாகாமையின், பயிற்சி இன்மையான் கேட்போரால் பொருள் உணரப்படாத சொற்களைப் பயிற்சி உண்மையால் பொருள் உணரப்பட்ட சொற்களொடு சார்த்தி உணரப்படுவன, முற்கூறிப் போந்த உரிச் சொற்களாம்" (இ. வி. ப. 349).

**ஒப்ப முடிந்த முடிபு**

மேற்காட்டிய நூற்பாக் கருத்துக்களாலும் உரையாசிரியர் கூற்றுக்களாலும் உரிச்சொல் இலக்கணம்பற்றி ஒப்பமுடிந்தனவாகப் பின்கண்டவாறு வகைப்படுத்தலாம்

1. இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருட்கு உரியவாய் வரும்.
2. பெயரையும், வினையையும் சார்ந்து வரும்.
3. ஒரு சொல் பல்பொருட்கு உரிமையாய் வரும்
4. பல சொல் ஒரு பொருட்கு உரிமையாய் வரும்.
5. வழக்கின்கண் பயிலாத சொற்களைப், பயின்ற சொற்களோடு சார்த்தி உரைக்கப்படும்.
6. 'உரிச்சொல்' என்பது காரணம்பற்றி வந்த ஒரு பெயர்.

இவற்றை அடிப்படையாகக் கொண்டே உரையாசிரியர்கள், தத்தம் நுண்மாண் நுழைபுலத்தால், பல்வேறுபட்ட கருத்துக்களைப் பகர்வாராயினர்.

**உரிச்சொல்லின் பெயர்க்காரணம்**

(அ) இசை என்பது ஓசை; அது, செவியான் உணரப் படுவது. குறிப்பு என்பது மனத்தால், குறித்து உணரப்படுவது. பண்பு என்பது குணம்; அது, பொறியான் உணரப்படுவது. இம் மூன்று பொருட்குத் தாமே உரியவாதலின் உரிச்சொல் ஆயிற்று. (ஆ) ஒருசொல், பல்பொருட்கும்; பலசொல், ஒரு பொருட்கும் உரிமைப்பட்டு வருதலால் உரிச்சொல் ஆயிற்று. (இ) ஒரு வாய்பாட்டான் சொல்லப்படும் பொருட்டுத் தானும் உரித்தாகி வருவதால் உரிச்சொல் ஆயிற்று. எனவே, பொருட்கு உரிமைபூண்டமையானும் செய்யுட்கு உரிமை பூண்டமையானும் உரிச்சொல் எனப்பட்டதாதலின் இது காரணப்பெயராயிற்று. இனி உரிச்சொல் என்பது, உரிமை ஆகிய சொல் என விரியுமாதலின் பண்புத்தொகையுமாம்.

நன்னூலார், "செய்யுட்குரியன உரிச் சொல்' (நன். 442) என்று கூறும் கருத்தை, அதன் விருத்தியுரைகாரராம் முகவை இராமானுசக் கவிராயர் மறுப்பர். 'நால்வகைச் சொற்களும் செய்யுட்குரியனவாய் வருதலின், செய்யுட்குரியன உரிச்சொல் என்றது பொருந்ாது" (நன். இராமானுச. ப. 346) என்று காரணம் காட்டுவர் அவர். தொல்காப்பியனார் "இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி" என்றார் (தொல். 782). இவற் றுள் இசையும் குறிப்பும் பண்பின் பகுதியாய் அதன்கண் அடங்கு மேனும் விளக்குதற் பொருட்டு வேறு ஓதினார். அவ்வாறே நால் வகைச்சொற்களும் செய்யுட்கு உரியனவாய் வருமேனும், சிறப் புப்பற்றிச் 'செய்யுட்குரியன உரிச்சொல்' எனக் கூறுதல் இழுக்கன்றாம்.

அன்றியும்,

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (தொல். 880)

எனச் செய்யுளுக்குரிய சொற்களுள் திரிசொல்லையும் கூறியுள் ளார் தொல்காப்பியர். திரிசொல்லாவது, "ஒருபொருள் குறித்த வேறு சொல்லாகியும் வேறுபொருள் குறித்த ஒருசொல்லாகி யும்" (தொல். 882) வரும். பெயர், வினை, இடை முதலாயின திரிசொற்களாக வருமாயினும், உரிச்சொல்லுக்கு இவ்விலக்க ணம் முற்றிலும் பொருந்துவதாயுள்ளது. "ஒருசொல் பல பொருட்குரிமை தோன்றினும் பலசொல் ஒரு பொருட்குரிமை தோன்றினும்" (தொல். 782) என உரிச்சொல்லுக்கு இவரே கூறும் இலக்கணத்தான் இவ்வுண்மை புலனாகும்.

இனி, "ஒருசொல்லின் தோற்றத்திற்கு அடிப்படையா யிருப்பதை வேர்ச்சொல் (root) என்றும் பகுதி என்றும் அழைப்பர். தொல்காப்பியர் 'குறைச்சொற் கிளவி' என்பர் (தொல். 936). உரிச்சொல் என்று கூறப்படுவதும் அவ்வேர்ச் சொல்லே உரிச்சொல் என்றால் செய்யுளுக்கு உரியசொல் என்ற னர் பிற்கால உரையாசிரியர்கள். அவ்வாறு கூறுவதைவிடச் சொல் பிறப்பதற்கு உரிய சொல் என்பது மிகப் பொருத்தமானதாகும்" என்றும் கூறுவர்.[1]

பெயர்ச்சொல் உள்ளிட்ட எல்லாச் சொற்களின் பகுதிகளும் உரிச்சொல்லே என்பதும் அவ்வடிப்படையில் 'சொல் பிறப்ப தற்கு உரிய சொல் ஆதலின் உரிச்சொல் எனப்பட்டது' என் பதும் ஆய்வுக்குரியன. ஆனால் "உரிச்சொல்லென்பன வினையும் குறிப்புமாகிய சொற்களுக்கெல்லாம் பகுதியாகிய வேர்ச்சொற்கள் என்பதும் குறைச் சொற்களாகிய இவற்றை முதனிலையாகக் கொண்டே எவ்வகை வினைச் சொற்களும் தோன்றுவன வென்ப தும் இனிது புலனாதல் காண்க" எனப் பேராசிரியர் திரு. க. வெள்ளைவாரணனார் கூறும் கூற்று கருத்திற் கொள்ளத் தக்கது.[2]

---

1. இலக்குவனார், 1961, ப. 108-109
2. வெள்ளைவாரணன், 1970, ப. 66

குணப் பண்பு, தொழிற் பண்பு எனப் பண்பு இருவகைப் படும். நடந்தான். வந்தான் முதலான வினைச் சொற்களின் முதனிலைகளாகிய நட, வா என்பன, தொழிற் பண்பை உணர்த் தும் சொற்களாம். "பண்பினும் தோன்றி" (தொல். 782) என உரிச்சொல்லிலக்கணம் ஓதிமையால் நட, வா முதலான முத னிலைகளும் உரிச்சொற்களென்றே கொள்ளப்படும். எனவே வினைச்சொற்களின் பகுதிகளை உரிச்சொற்கள் எனக் கொள்ளு வது சாலப் பொருத்தமாகும். சில உரிச்சொற்களைப் பகுதி யாகக் கொண்டு சில பெயர்ச்சொற்கள் தோன்றலாம். ஆனால் பெயர்ச்சொற்களின் பகுதிகள் அனைத்துமே உரிச்சொல் எனல் பொருந்துமா என்பது ஆராய்வதற்குரித்து.

**பெயரா, அன்று?**

இனி, "உரிச்சொல் பெயரின் வேறென்று உணர்க" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 190). காரணம், பெயரானது ஈறுபற்றிப் பல பொருள் விளக்கும்; உருபும் ஏற் கும். ஆனால் உரிச்சொல்லோ அங்ஙனமின்றிப் பெயரையும் வினை யையும் சார்ந்து பொருட்குணத்தை விளக்கும் என்பதாம். ஆனால் நன்னூலாரோ "பல்வகைப் பண்பும் பகர்பெயராக" (நன். 442) என்றார் இதற்குச் சங்கரநமச்சிவாயர், "இவையும் பண்புப் பெய ராயினும் வினைப் பெயர் வினைகளைவிட்டு நீங்காமையின் வேறோதப் பட்டனவென்பதூஉம் செய்யுட்கு உரியனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்குறி போந்ததென்பதூஉம் இவற்றின் இலக்கணம் கூறியமுகத்தால் உணர்த்தியவாறு காண்க" என உரை விளக்கம் தருகின்றார் (நன். சங்கர. ப. 361-62).

இவ்விரண்டு நூல்களையும் உணர்ந்த இலக்கண விளக்க உரையாசிரியர், "பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் போலத் தம்மைக் காட்டி" என்கிறார். கறுப்பு, சிவப்பு என்பன பெயர் போல வழங்குவனவாதலின் இவை பெயர்ப் போலி ஆகும் என்பர் அவர் (இ. வி. ப. 349)

**தொல்காப்பியர் வழியில் நன்னூலார்**

"இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி" (தொல். 782) எனத் தொல்காப்பியர் கூறியதை அடியொற்றி நன்னூலார் 'பல்வகைப் பண்பும் பகர் பெயராகி' (நன்.442) என்றார். இனி இப் பண்பாவது இத்தன்மைத்து என விளக்குமுகத்தான், உயிர்ப் பொருள் உயிரல் பொருள் என இரண்டாகப் பகுத்து, உயிர்ப் பொருளின் குணப்பண்பு, உயிர்ப் பொருளின் தொழிற்பண்பு, உயிரல் பொருளின் குணப்பண்பு, இருவகைப் பொருளின் தொழிற் பண்பு என வகைப் படுத்துகின்றார் (நன்.443-55). அறிவு அருள், ஆசை முதலான முப்பத்திரண்டும் பிறவும் உடலோடு கூடிய உயிரின் குணப்பண்புகள் (நன். 452). துய்த்தல் முத லான ஐந்தும் பிறவும், உடலோடு கூடிய உயிரின் தொழிற் பண்புகள் (நன். 453). பல்வகை வடிவு முதலாயின உயிரல் பொருளின் குணப் பண்புகள் (நன். 454) தோன்றல் முதலான ஒன்பதும் பிறவும் இருவகைப் பொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற்பண்புகள் (நன். 455). தொல்காப்பியனார் மரபியலிற் கூறும் (தொல் 1526–32) ஓரறிவு முதல் ஆறறிவுயிர்வரையுண் டான பகுப்பு முறையை நன்னூலார் உரியியலிற் கூறுகின்றார்.

**பொருண்மை நிலை**

இவ்வுரிச்சொல்லின் இலக்கணமுணர்த்த வந்த தொல்காப் பியர், "ஒருசொற் பல பொருட்குரிமை தோன்றினும், பலசொல் லொருபொருட் குரிமைதோன்றினும்" (தொல்.982) என்று குறிப் பிடுகிறார். இவ்வகையில் உரிச்சொல்லின் பொருண்மை நிலையை இருவகையாகப் பிரிக்கலாம். அதாவது (1) ஒரு சொல்லுக்குப் பல பொருள் 'கடி' என் கிளவிக்கு வரைவு, கூர்மை முதலான 12 பொருள்கள் உண்டு (2) பல சொல்லுக்கு ஒரு பொருள் உறு, தவ, நனி எனும் மூன்று சொற்களுக்கும் 'மிகுதி' என்ற ஓரே பொருளாம் என்பதாம். ஆனால், நூற்பாக்களை உற்று நோக்குங்கால் (3) 'ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்' என்ற

நிலையும் காணப்படும். "உரு உட்காகும், புரை உயர்பாகும்" (தொல். 785), "மல்லல் வளனே ஏ பெற்றாகும்" (தொல். 788) முதலான நூற்பாக்கள் இதற்குச் சான்று. மொழிநூலாசிரியரோ (4) "உறழ்வு நிலையில் வைத்து அரிய சொற்களை விளக்குதல்" என மற்றொரு நிலையும் உண்டு என்பர்.[3]

| | | |
|---|---|---|
| உகப்பு – உயர்வு | பயப்பு – பயன் | இயைபு – புணர்ச்சி |
| உவப்பு – உவகை | பசப்பு – நிறன் | இசைப்பு– இசை |

எனச் சான்று காட்டுவர் அவர். எனவே உரிச்சொற் பொருண்மை நிலையை நால்வகையாகவும் கொள்ளலாம். மேலும் இதனை, ஒரு சொல்லுக்குப் பல பொருள், பலசொல்லுக்கு ஒரு பொருள் என்ற நிலையில் குறிப்பு, பண்பு, இசை எனும் இம் மூன்றனொடும் உறழ அறுவகைப்படும் என்பர் இலக்கணவிளக்க நூலார் (இ. வி. 281–86)

**உரிச்சொற்கள்**

தொல்காப்பியர், உறு முதல் எறுழ் முடிய 120 உரிச்சொற்களை எடுத்துக்காட்டி, அவற்றிற்குப் பொருளும் தந்துள்ளார் (தொல். 748-871). இவற்றுள், ஒருசொல்லுக்கு ஒரு பொருள் முதற்கொண்டு, பன்னிரண்டு பொருள்கள் ஈறாகப் பல வகைச் சொற்களை எடுத்துரைக்கின்றார். கடி என்ற ஓர் உரிச்சொல்லுக்குப் பன்னிரண்டு பொருள்கள் கூறுவதினின்றும் (தொல். 866) அச்சொல் அவர்காலத்தில் மிகுதியான ஆட்சி பெற்றிருந்தமை புலனாகும்.

நன்னூலாரோ சால முதல் ஆர்ப்பு முடிய 45 உரிச்சொற்களே காட்டுகின்றார் (நன். 456-59). "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" (நன். 462) என்பதற்கேற்பத் தொல்காப்பியனார் கூறிய சொற்களில் அலமரல், அமர்தல், ஆய்தல், இன்னல், இயைபு முதலான சொற்களைக்

3. இர. சீனிவாசன், ..., ப, 241

கூறுதவிட்டும் அவர் கூறுதனவாகிய சால, செப்பு, நுவற்சி, பகர்ச்சி முதலான சொற்களைத் தாம் கூறியும், இங்ஙனம் சில மாற்றங்கள் செய்துள்ளார். இத்தகைய மாற்றங்கள் மொழியில் ஏற்படலாம் என்பதை நன்குணர்ந்தே தொல்காப்பியர் "அன்ன பிறவும் கிளந்த வல்ல" (தொல். 879) என்ற நற்பாவால், "இவைபோன்ற பிற உரிச் சொற்களும் உள; அவற்றை வரையறுத்து உணரும் எல்லை தமக்கு இல்லையாதலின் முழுவதும் எடுத்துரைத்தல் அரிது எனவே 'இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப் பெயரினும், வினையினும் மெய் தடுமாறி' எனச்சொல்லப்பட்ட வழிகளை நெகிழாமற் கடைப்பிடித்து உணர்க" எனத் தெளிவு படுத்தியுள்ளமை, இவரது மொழிநூற் புலமைக்குச் சான்றாயுள்ளது

உரிச்சொற்களின் எண்ணிக்கை இத்துணைதாமோ என எண்ணிவிடுதல் கூடாது. அவற்றை ஆராயப் புகுந்தால் வரம்பிலவாய் முடியுமாதலின், தம்காலத்து அரிதின் உணரத்தக்க திரிசொற்களையே எடுத்துக்காட்டினார் தொல்காப்பியனார் எனக் கொள்ள வேண்டும் (தொல். 783). இம்முறையைப் பின்பற்றியே நன்னூலாரும் உரியியலை, மிகச் சுருங்கிய முறையில் அமைப்பாராயினர். மேலும் நன்னூலார் காலத்தில், பிங்கலம் முதலான நிகண்டுகள் இருந்தமையின் உரிச்சொற் பட்டியலை விரித்துரைக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்படவில்லை. எனவே தான் அவர்,

> "இன்ன தின்னுழி யின்னண மியலும்
> என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
> சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
> நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே" (நன். 460)

என்று, இவ்வியலுக்குப் புறநடையும் தந்தார்.

**தமிழ் நிகண்டு**

சொற்களுக்குப் பொருள் கூறும் நிலை, உரியியலில் காணப் படுவதால், இவ்வுரியியலைத் 'தமிழ் நிகண்டு' எனலாம். தொல்

காப்பியத்துள் வரும் உரியியல், காலப் பழமை சான்றமையால், இதனை முதல் தமிழ் நிகண்டு எனலாம். இதன்கண் அமைந்த சொற்கள் அகரவரிசையிலமைந்திருக்குமாயின் இதனையே முதற் றமிழ் அகராதி என்றும் கூறலாம். பிற்காலத்தில் நிகண்டுகள் தோன்றுதற்கு இவ்வுரியியலே அடிப்படையாயிற்று. நிகண்டுகளுக்கு உரிச்சொல் என்ற பெயரே வழங்கப்பட்டதுண்டு. நிகண்டு நூல்களை 'உரிச்சொல் பனுவல்' என்றழைத்தனர் பின்னர் நிகண்டு நூல்களைத் துணையாகக் கொண்டு, அகர வரிசையில் பொருள் கூறும் அகராதிகள் தோன்றலாயின.

**முடிவுரை**

இக்கட்டுரையின் வாயிலாக உரிச்சொல்லின் இலக்கணமும் இயல்பும் ஒருவாறு கண்டோம். இவ்விலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு, உரிச்சொற்களை ஆராய்ந்தால், இன்றைக்குத் தாய்மொழிப் பயிற்சிக்குத் தேவையான - பலப்பல புதிய சொற்களைத் தமிழ் மரபுக்கேற்றவாறு படைத்தல் கூடும். இதனை உணர்ந்த நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் பின்வருமாறு பகர்கின்றார்.

"முன் அறியாத பொருள்களும் கருத்தும் எழுங்கால், பழைய நம் மொழிகளில் ஓதுவதற்குரிய புதிய சொற்களைப் படைத்தல் வேண்டும். இதுவரை இல்லாப் புதுக் கருத்தும், கலைகளும் உலகில் நிலவுகின்றன. பூத பௌதிகர்களும், தனிப் பொருள் கூட்டுப் பொருள்களும், நாள்தோறும் நாட்டில் எண்ணவும் பண்ணவும் ஏற்படுகின்றன. அவற்றிற்கெல்லாம் பழைய நம் மொழிகளில், உரிச்சொல் முதனிலை உள்ளன கொண்டு, புதிய சொற்களைப் புனைய இயலுமேல் அவ்வாறு அவற்றை அமைத்துக்கொள்ளலாம்" [4]

---

4, சோமசுந்தர பாரதியார், ..., ப. 158

எனவே உரிச்சொல்லின் துணைகொண்டு கலைச் சொல்லாக்கப் பணிபுரியத் தமிழ்ப் புலவருலகு முன்வரின், தமிழ்நிலை மேலும் உயரும்.

**எடுத்தாளப் பெற்ற நூல்கள் :**

1. தொல்காப்பியம் : சொல்லதிகாரம் : இளம்பூரணம்
2. ,, ,, : சேனாவரையம்
3. ,, ,, : நச்சினார்க்கினியம்
4. ,, ,, : தெய்வச்சிலையார் உரை.
5. நன்னூல் : மயிலைநாதர் உரை.
6. ,, சங்கரநமச்சிவாயர் உரை
7. ,, சிவஞான முனிவர் விருத்தி
8 ,, இராமாநுசக் கவிராயர் விருத்தி
9. இலக்கண விளக்கம் : சொல்லதிகாரம் (சரசுவதி மகால் வெளியீடு)

**மேற்கோள் நூல்கள்**

இலக்குவனார், சி. 1961, தொல்காப்பிய ஆராய்ச்சி, புதுக்கோட்டை.

சீனிவாசன், இரா. ........ தொல்காப்பியமும் நன்னூலும்,

சோமசுந்தர பாரதியார், ச. ........ தமிழும் தமிழரும், மதுரை

வெள்ளைவாரணன், க. 1970, தொல்காப்பியம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

11

# தொகைநிலைக் கொள்கை

ஆபிரகாம் அருளப்பன்
திருநெல்வேலி—2

தமிழ்மொழிச் சொற்கள் வெளிப்படை நிலையாகவும் குறிப்பு நிலையாகவும் பொருளைப் புலப்படுத்தி நிற்கும் முறைபற்றிச் சொல்லிலக்கணங் காணப்படும். சொல்லிலக்கண அடிப்படையில் தொடர்மொழி யிலக்கணம் அறியப்படும்.

தொடர்மொழியானது தொகைநிலைத் தொடர், தொகா நிலைத் தொடர் என இருவகைப்படும். "ஒருசொல்முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும் தொகாநிலை வகையான் வருதலும் என இரண்டல்லது இல்லை" (தொல். சொல். தெய்வ. ப. 8) என்பார் தெய்வச்சிலையார்.

"பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
யொழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்மொழி"

(நன். 360)

பெயர்ச் சொல்லொடு பெயர்ச்சொல்லும், பெயர்ச் சொல்லொடு வினைச்சொல்லும், வினைச்சொல்லொடு பெயர்ச்சொல்லும் வேற்றுமை வழிப் பொருளினும் வேற்றுமையல்வழியாகிய பண்பு, உம்மை, உவமம், வினைப்பொருள்களினும் தழுவிவர அவற்றிடைப் பொருள் நன்கு தெளிவாதற் பொருட்டுத் தோன்றி நிற்றற்குரிய உருபு, பயன் என்னும் இடைச் சொற்கள் தோன்றுமற் போக, இரண்டோ மற்றும் பலவோ தொடர்ந்து நின்று ஒருமொழிபோல் இலக்கணம் அமைய நடப்பன தொகைநிலைத் தொடர்மொழி எனப்படும்.

"நுணங்கிடையும் நெடுங்கண்ணும் மதிமுகமும் உடைப் பேதை பொற்றொடி அணிந்தாள்', என்பது தொகை நிலைகள் கொண்டதொரு வாக்கியம். இது, "நுணங்கிய இடையையும் நெடுமையாகிய கண்ணையும் மதிபோன்ற முகத்தையும் உடைய பேதை பொன்னாலாய தொடியை அணிந்தாள்'',எனத் தொகாநிலையாம். நுணங்கு + இடை: வினையொடு பெயர்; நெடுமை + கண், மதி + முகம், பொன் + தொடி: பெயரொடு பெயர், தொடி + அணிந்தாள்: பெயரொடு வினை.

செய்யுட்குச் சிறப்பாவது தொகைநிலை; உரைநடைக்குச் சிறப்பாவது தொகாநிலை.

ஒன்றை யொன்று தழுவி நிற்கும் இருமொழித் தொடரில் அது பொருள்பட்டு நிற்கும் முறைக்கேற்பத் தொகைநிலை இலக்கணம் நாடிப் பொருளை நன்கு தெளிதல் மரபு.

வேற்றுமைத் தொகைநிலையாவது பெயரொடு பெயரும் பெயரொடு வினையும் நிலைமொழி வருமொழியாய்த் தொடருங்கால் அவற்றிடை ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் பெயரிய வேற்றுமை உருபுகள், சிலவிடத்துத் தம் பயனொடும் தோன்றாமல் நடப்பது.

அல்வழித் தொகைநிலைகளுள் பண்புத்தொகை பண்புருபு தோன்றாமலும், உவமத் தொகை உவமவுருபு தோன்றாமலும் உம்மைத் தொகை எண்ணும்மை தோன்றாமலும் வினைத்தொகை யானது வினைப் பகுதி நிற்க அதன் காலங்காட்டும் இடைநிலையும் பெயரெச்ச விகுதியுந் தோன்றாமலும் நடப்பனவாகும்.

அன்மொழித் தொகையாவது வேற்றுமைவழித் தொகை அல்வழித் தொகைகளின் இடையே தொக்க உருபுகளே யல்லாமல் அவற்றின் ஈற்றில் பொருளுணர்தற்கு வேண்டுவன வாகிய பிற மொழிகளுந் தொக்கு நிற்பது.

"வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே
வினையின் றொகையே பண்பின் றொகையே
யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே." (தொல். 895)

"வேற்றுமை வினைபண் புவமை யும்மை
யன்மொழி யெனவத் தொகையா றாகும்" (நன். 361)

"ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி" (நன். 369)

**1. வேற்றுமைத்தொகை**

1) மேகலை பூங்குழல் முடித்தாள். பூங்குழல் : பூவையுடைய குழல் : 'ஐ' யுருபும் அதன் பயனாகிய உடைய என்பதும் உடன் றொக்கன. (2) கண்ணகி பொற்றொடி களைந்தாள். பொற்றொடி : பொன்னால் ஆகிய தொடி : 'ஆல்' உருபும் அதன் பயனாகிய ஆகிய என்பதும் உடன்றொக்கன. (3) சேந்தன் செய்யுளிலக்கணம் படிக்கிறான். செய்யுளிலக்கணம் : செய்யுட்கு இலக்கணம் : 'கு' உருபு தொக்கது. (4) இம்மலையருவி சிறியது: மலையருவி: மலையின் விழும் அருவி : 'இன்' உருபும் அதன்பயனாகிய விழும் என்பதுந் தொக்கன. (5) யானைக் கோடு விலைமிக்கது. யானைக் கோடு: யானையது கோடு : 'அது' உருபு தொக்கது. (6) குன்றக்

கூகை பறந்தது. **குன்றக்கூகை** குன்றிலுள்ள கூகை: 'இல்' உருபும் அதன் பயனாகிய உள்ள என்பதும் உடன்றொக்கன[1]

"எல்லாத் தொகையு மொருசொன் னடைய" (தொல். 903)

பெயரோடு வினை வந்து நடப்பன அல்லாத பிறவெல்லாம் பெயர்ச் சொல்லைப் போல எல்லா வேற்றுமைகளையும் ஏற்று நடக்கும்.

**2. உவமத் தொகை**

மான்விழிக் கண்ணகி துடியிடை நுடங்க நடந்தாள்:

1) **மான்விழி:** மான் போலும் விழி: போலும் என்னும் உவமவுருபு தொக்கது.

2) **துடியிடை:** துடி போலும் இடை போலும் என்னும் உவமவுருபு தொக்கது.

இத்தொகைநிலைகளை மானைப் போலும் விழி, துடியைப் போலும் இடை என விரித்து வேற்றுமைத் தொகை எனல் மரபன்று, வேற்றுமைப் பொருளன்றி உவமப் பொருளே சிறந்து நிற்றலின்

**3. வினைத் தொகை**

1) புலிகொல்யானை மலையிடை மறைந்தது: **கொல்யானை:** (புலியைக்) கொன்ற யானை; கொன்ற என்னும் பெயரெச்ச வினை காலங்கரந்து நின்றது. (2) புலிகொல்யானை அதோ கிடக்கின்றது. **கொல்யானை:** (புலியானது) கொன்ற யானை:

1. நிலங் கடந்தான்; குன்றத் திருந்தான் எனப் பெயரொடு வினைதொடரும் தொகைநிலைகள், கடந்தான் நிலம்; இருந்தான் குன்றத்து என மாறி நிற்பின், முன்பின்னாகக் கொண்டுகூட்டில் பொருள் காண்டலன்றி மற்றுத் தொடரிலக்கணங் காணும் மாபில்லை. ஆனால் முன்றில், வாயில் போன்றன, இல்முன் இல்வாய் என முன் பின்னாகப் பிரித்துக் கூட்டித் தொடரிலக்கணங் காணப்படும்.

இது தழாத் தொடராம். (3) பொழில் நுழை குயில்; குயில் நுழை பொழில். **நுழைகுயில்:** தழுவு தொடராய வினைத்தொகை. நுழை பொழில்: தழாத் தொடராய வினைத் தொகை.

### 4. பண்புத் தொகை

1) கருங்குதிரை யுடையவன் காரி. **கருங்குதிரை :** கருமை யாகிய குதிரை : ஆகிய என்னும் பண்புருபு தொக்கது (2) சாரைப்பாம்பு ஓடிற்று. **சாரைப் பாம்பு :** சாரையாகிய பாம்பு : ஆகிய என்னும் பண்புருபு தொக்கது.[2]

### 5. உம்மைத்தொகை

1) கபில பரணர் பாடினர். **கபிலபரணர்: கபிலனும் பரணனும்:** எண்ணும்மைத் தொக்கன. (2) மருத்துவர் சுக்கு மிளகு இடித்தனர். **சுக்கு மிளகு :** சுக்கையும் மிளகையும் என விரியு மிடத்தும் உம்மைத் தொகை யெனவே தொடரிலக்கணம் காணுதல் மரபு

### அன்மொழித்தொகை

தொகைநிலைத் தொடர் மொழி வகைகளை எடுத்துக் கூறி 'என்ப' என முடித்து (தொல். 895) முன்னூலோர் கொள்கை யாகக் காட்டிய தொல்காப்பியர், அன்மொழித் தொகைக்கு நிலைக் களனுவன,

"பண்பு தொகவரூஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே
(தொல். 901)

2. கருமை குதிரை : கருங்குதிரை: சிறுமை இல் : சிற்றில்; பசுமை பொழில் : பைம்பொழில். இவ்வாறு கருமை, சிறுமை, பசுமை முதலிய மையீற்றுப் பண்படிப் பண்புப் பெயர்கள் புணர்ச்சியிற் பெறும் விகார வகைகளை இலக்கணங்களிலும் இலக்கியங்களிலும் நுணுகி ஆய்ந்து கண்ட பவணந்தி முனிவர் நுனித்தகு புலமையோடு

எனத் தம் கருத்தாக மூன்று தொகைநிலைகளை மட்டுங் கூறிச் சென்றதேன்?

இளம்பூரணர், "மற்றுத் தொகையதிகாரத்தில் முன்வைக்கப்பட்ட நூஉம் சிறப்புடையதூஉம் வேற்றுமைத் தொகையாகலின் ஈண்டு இதனை முற்கூறுது பண்புத் தொகையை முற்கூறியது என்னை யெனின், ...........ஒழிந்து நின்ற உவமத் தொகையும் வினைத் தொகையும் பற்றிப் பிறக்கும் அன்மொழித் தொகை என்பது", (தொல். சொல். இளம். ப. 187) என்கின்றார்.

தெய்வச்சிலையார், "வினைத்தொகைப் புறத்தும் உவமத் தொகைப் புறத்தும் பொருளொற்றுமைப் படாது அன்மொழித் தொகையாகிச் சான்றோர் செய்யுளகத்து வரின் இச்சூத்திரத் திடமாக அமைத்துக் கொள்க", (தொல். சொல். தெய்வ.262) எனச் "செய்யுண் மருங்கினும்', என்னும் நூற்பா (தொல். 946) உரையிற் கூறுகின்றார்.

சேனாவரையர், "வேற்றுமைத் தொகைநிலைக் களத்துப் பிறத்தலின் உம்மைத் தொகைநிலைக் களத்துப் பிறத்தல் சிறுபான்மையாயினும் ஒரு பயன் நோக்கி அதனை அதன்முன் வைத்தார். யாதோ பயனெனின், சிறுபான்மை உவமத் தொகை நிலைக் களத்தும் வினைத்தொகை நிலைக் களத்தும் அன்மொழித் தொகை பிறக்குமென்பது உணர்த்த (தொல். சொல். சேனா. ப.220) என்கிறார்.

---

ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே (நன். 136)

என விதி அமைத்தமை மிக மிகப் பாராட்டுதற் குரியதாம்.

நச்சினார்க்கினியர், "பெரும்பான்மை வரும் பண்புத் தொகைப் பின்னர் அங்ஙனம் வரும் வேற்றுமைத் தொகையை வையாது முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றான் உவமத்தொகைக் கண்ணும் வினைத் தொகைக் கண்ணும் அன்மொழித் தொகை வருதல் கொள்க" (தொல். சொல். நச்சி. ப. 242), என்றார்.

இராமாநுச கவிராயர், "ஆசிரியர் தொல்காப்பியனார்........ இம்முத்தொகையீற்றும் நின்றியலும் அன்மொழித் தொகையெனக் கூறினார்........அவர் எதிரது தழீஇ எண்ணிநின்ற எச்சவும்மைகளால் உவமத் தொகை, வினைத்தொகையீற்றும் நின்றியலும் அன்மொழியெனத் தழீஇயினர்" (நன். இராமாநுச. ப. 395), என்கின்றார்.

மற்றும் உவமத்தொகையை 5-ம் வேற்றுமைப் பொருஉப் பொருளாய்க் கொள்ளலாம் என்பதாலும் வினைத்தொகைக்கு இரு பெயரொட்டாகும் இயல்புஇன்மையானும் இவ்விரு தொகைகளையும் தொல்காப்பியர் வேற்றுமை, பண்பு, உம்மைத்தொகைகளோடு சேர்த்துக் கூறாது போயினர் போலும்.

**அ. வேற்றுமைத்தொகை அன்மொழி**

(1) பூங்குழல் இயம்பினள். **பூங்குழல்:** பூவையணிந்த குழலையுடையவள்: பூ, குழல் என்னும் பெயர்களிடை ஐ, அணிந்த என்னும் உருபும் பயனும் உடன்தொக்கு ஈற்றில் ஐ, உடையவள் என்பவும் தொக்கன. (2) பிகிரார் பொற்குடம் ஆவார். **பொற்குடம்:** பொன்னாலாகிய குடத்தைப் போலும் பண்புடையவர்: பொன், குடம் என்னும் பெயர்களிடை ஆல், ஆகிய என்னும் உருபும் பயனும் உடன்தொக்கு ஈற்றில் ஐ, போலும் பண்புடையவர் என்பவும் தொக்கன. (3) வைரன் செய்யுளிலக்கணம் வாங்கினான். **செய்யுளிலக்கணம்:** செய்யுளுக்கு இலக்கணம் கூறும் நூல்: செய்யுள், இலக்கணம் என்னும் பெயர்களிடை கு என்னுமுருபு தொக்கு ஈற்றில் கூறும் நூல்

என்பவும் தொக்கன. (4) மலையருவி பாண்டிநாட்டின் நீங்கினர். **மலையருவி**: மலையின் விழும் அருவியைப் போன்றவர்: மலை அருவி என்னும் பெயர்களிடை இன், விழும் என்னும் உருபும் பயனும் உடன்தொக்கு ஈற்றில் ஐ, போன்றவர் என்பவுந் தொக்கன. (5) திறவோர் காட்சியைக் கற்றுத் தெளிந்தனம். **திறவோர் காட்சி**: திறவோரது காட்சிப் பயனாகிய நூல்: திறவோர், காட்சி என்னும் பெயர்களிடை அது உருபு தொக்கு, ஈற்றில் பயனாகிய நூல் என்பவும் தொக்கன. (6) குணாளனுக்குக் குன்றக்கூகை வாய்த்தாள். **குன்றக்கூகை**: குன்றிலுள்ள கூகையைப் போன்றவள்: குன்று, கூகை என்னும் பெயர்களிடை இல், உள்ள என்னும் உருபும் பயனுந் தொக்கு, ஈற்றில் ஐ, போன்றவள் என்பவுந் தொக்கன.

**ஆ பண்புத்தொகை அன்மொழி**

(1) வெள்ளாடை அழுதாள். **வெள்ளாடை**: வெண்மையாகிய ஆடையை உடுத்தவள்: வெண்மை ஆடை என்னும் பெயர்களிடை ஆகிய என்னும் பண்புருபு தொக்கு, ஈற்றில் ஐ உடுத்தவள் என்பவுந் தொக்கன. (2) அருந்திறல் அயோத்தி நீங்கினன். **அருந்திறல்**: அருமையாகிய திறலையுடையவன்: அருமை, திறல் என்னும் பெயர்களிடை ஆகிய என்னும் பண்புருபு தொக்கு, ஈற்றில் ஐ உடையவன் என்பவும் தொக்கன.

**இ உம்மைத்தொகை அன்மொழி**

(1) முருகன் தகரஞாழல் பூசினன். **தகரஞாழல்**: தகரமும் ஞாழலுங் கூட்டிச் செய்த சாந்து: தகரம், ஞாழல் என்னும் பெயர்களைச் சார்ந்த எண்ணும்மைகள் தொக்கு, ஈற்றில் கூட்டிச் செய்த சாந்து என்பவுந் தொக்கன. (2) சாத்தன் சுக்குமிளகு குடித்தான். **சுக்குமிளகு**: சுக்கும் மிளகுங் கூட்டிச் செய்த மருந்து: சுக்கு, மிளகு என்னும் பெயர்களைச் சார்ந்த எண்ணும்மைகள் தொக்கு, ஈற்றில் கூட்டிச்செய்த மருந்து என்பவும் தொக்கன.

ஈ. **உவமத்தொகை அன்மொழி**

(1) துடியிடை ஆடினாள். **துடியிடை :** துடிபோலும் இடையுடையாள்: துடி, இடை என்னும் பெயர்களிடை போலும் என்னும் உவமவுருபு தொக்கு, ஈற்றில் உடையாள் என்பதும் தொக்கது. (2) பவழவாய் பாடினாள். **பவழவாய் :** பவழம் போலும் வாய் உடையவள் : பவழம், வாய் என்னும் பெயர் களிடை போலும் என்னும் உவம வுருபு தொக்கு, ஈற்றில் உடையவள் என்பதும் தொக்கது.

உ. **வினைத்தொகை அன்மொழி**

(1) ஓங்குநிலை மிக உயர்ந்தது. **ஓங்குநிலை:** ஓங்கிய நிலையையுடைய கோபுரம் : ஓங்கிய என்னும் பெயரெச்சவினை காலங் கரந்து, நிலை என்னும் பெயரைத் தழுவிநிற்க, ஈற்றில் உடைய, கோபுரம் என்பன தொக்கன. (2) ஆர்நீர் முழங்கியது. **ஆர்நீர் :** ஆர்ந்த நீரையுடைய கடல்: ஆர்ந்த என்னும் பெயரெச்சவினை காலங் கரந்து நீர் என்னும் பெயரைத் தழுவி நிற்க, ஈற்றில் ஐ, உடைய, கடல் என்பன தொக்கன. (3) தாழ்குழல் கலங்கினாள். **தாழ்குழல்:** தாழ்ந்த குழலுடையவள் : தாழ்ந்த என்னும் பெயரெச்சவினை காலங் கரந்து குழல் என்னும் பெயரைத்தழுவி நிற்க, ஈற்றில் உடையவள் என்பது தொக்கது.

வினைத்தொகை அன்மொழி இருபெயரொட்டாகாமை பற்றி வினைத்தொகைநிலையை அன்மொழித் தொகைக்குப் பிறப்பிடமாகத் தொல்காப்பியர் எடுத்துக் கூறவில்லை போலும். 'இளந்த வல்ல' (தொல். 602) என்பதன் உரையில், " தாழ்குழல், திரிதாடி என்பனவற்றையும் இரு பெயரொட்டன்மையின் ஈண்டே கொள்க " (தொல். சொல் கல். 103) என்னும் கல்லாடனார் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கதாகும்.

**தொகைநிலை ஆகுபெயர்**

அன்மொழித் தொகைநிலைத் தொடர் மொழிகளெல்லாம் சொல்லிலக்கண வகையால் ஆகுபெயர்களே. அவை இருபெய

ரொட்டாகுபெயர், இருபெயரொட்டு அடைபடுத்தவாகு பெயர் வினைப்பெயரொட்டாகுபெயர் என மூவகையாம்.

வேற்றுமை, பண்பு, உம்மை, உவமத் தொகைநிலைகளைப் பற்றிப் பிறக்கும் அன்மொழித் தொகைகள், நிலைமொழி வருமொழியைப் பொருளாலுந் தழுவி நடப்பன எல்லாம் இருபெயரொட்டாகு பெயர்களாம்: பொற்றொடியுங் கருங்குழலும் நுணங்கிடையும் மதிமுகமும் தகரஞாழல் பூசிக் களித்தனர். இங்குப் பொற்றொடி, கருங்குழல், நுணங்கிடை, மதிமுகம், தகரஞாழல் என்பன அன்மொழித் தொகை நிலைகள். அவை இருபெயரொட்டாகு பெயராய்த் தகரஞாழல் என்பது பூசி என்னும் வினையெச்சத்துக்கும், மற்றவை களித்தனர் என்னும் வினைமுற்றுக்கும் வினைமுதலாய் நிற்றல் காணலாம்

வேற்றுமை மயங்கியல், "வினையே செய்வது"(தொல்.596) எனத்தொடங்கும் நூற்பா உரையில் சேனாவரையர், "அன்மொழிப் பொருண்மேல் நின்ற இருபெயரொட்டும்.... ஆகுபெயர் என்றவாறு.... பொற்றொடி வந்தாள் என இருபெயரொட்டு அன்மொழிப் பொருண்மேலும்.... வந்தவாறு கண்டு கொள்க" (தொல். சொல். சேனா. ப. 90), எனக் கூறினர். ஆனால் நச்சினார்க்கினியர், "அன்மொழிப் பொருண்மேல் நில்லாத இருபெயரொட்டும்", எனவும், 'பொற்றொடி என்பது அன்மொழி; ஆகுபெயரன்மை யுணர்க" (தொல். சொல். நச்சி. 82), எனவுங் கூறித் தாம் தெளியாததைப் பிறரும் தெளியாதவாறு உரைத்துச் சென்றமை காரணமாக, அன்மொழித் தொகைகள் எல்லாம் ஆகுபெயர்களே என்பது தற்காலம்வரைத் தெளிவு பெறாமல் நின்றது.

கல்லாடனார், "இருபெயரொட்டு பொற்றொடி என்பது. இஃது அன்மொழித்தொகை அன்றோ எனின், படுத்தலோசை பட்டவழி அன்மொழித் தொகையாம்; எடுத்தலோசை பட்ட

வழி, ஈண்டு ஆகு பெயராம் என்பது” என்கிறார் (தொல் சொல். கல். ப. 100, 101).

அன்மொழித் தொகையெல்லாம் ஆகுபெயராய் நிற்றலன்றி வேறில்லாதபோது இக்கருத்து அமையுமாறு எங்ஙனம்?

இளம்பூரணர் உரையால், வேற்றுமை முதலிய ஐந்து தொகைகளும் நிறைமொழி ஓசை உடையன; அவைபற்றிப் பிறக்கும் அன்மொழித்தொகைகள் பிறிதோர் மொழி ஓசை பட்டுப் பொருள்கொள்ளும் ஆகலான் அம்மொழி அன்மொழி ஆயிற்று எனப்புலப்படும் கருத்து (தொல். சொல். இளம். ப. 187)கொள்ளத்தக்கது

இருபெயரொட்டு அன்மொழித் தொகைகளுள் நிலைமொழி வருமொழியைப் பொருளால் தழுவாது நடப்பனவெல்லாம் இரு பெயரொட்டு அடையடுத்த வாகு பெயர்களாம்.

1 வேற்காளை வென்றான். **வேற்காளை :** வேலையுடைய காளை போன்றவன்: வேல் காளையைத்தழுவாது காளை போன்ற வனைத் தழுவுகிறது. ஆதலின் அடையடுத்தவாகு பெயர்.

2. குலப்பாவை பாடினாள். **குலப்பாவை:** குலத்திற் பிறந்த பாவை போன்றவள். குலம் பாவையைத் தழுவாமல் பாவை போன்றவளைத் தழுவுகிறது. ஆதலின் அடையடுத்தவாகு பெயர்.

3. வெற்றிலை நட்டான். **வெற்றிலை :** வெறுமையாகிய இலையை உடைய கொடி. வெறுமை இலையைத் தழுவாமல் கொடியைத் தழுவுகிறது (பூ, காய் ஆகிய பயன்தாராதலின்). வினைத் தொகை பற்றிப் பிறக்கும் அன்மொழித்தொகையெல்லாம் வினைப்பெயரொட்டாகு பெயர்களாம்.

**சில இலக்கணக் கிளவிகள்**

1. தொகைநிலை: தொகையாகிய நிலையைக் கொண்ட தொடர்மொழி: பண்புத்தொகை அன்மொழி.

2. தொகைநிலைக் கொள்கை: தொகைநிலையைப் பற்றிய கொள்கையை விளக்குங் கட்டுரை: வேற்றுமைத் தொகை அன்மொழி.

3. எழுவாய்: எழுகின்ற வாயாகிய சொல்: வினைத்தொகைப் பற்றிப் பிறந்த அன்மொழித் தொகை.

4. பயனிலை: பயனுக்கு நிலையாகுஞ் சொல்: வேற்றுமைத் தொகைபற்றிப் பிறந்த அன்மொழி.

5. பெயரெச்சம்: பெயரை எச்சமாகக் கொண்ட சொல்: வேற்றுமைத் தொகை யன்மொழி.

6. வினையெச்சம்: வினையை எச்சமாகக் கொண்ட சொல்: வேற்றுமைத் தொகை யன்மொழி.

# 12

# வினைத்தொகை

பொன். கோதண்டராமன்
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை*

1. நமது தமிழிலக்கண அறிஞர்கள் ஆராய்ந்த அறுவகைத் தொகைகளில் ஒன்றாகிய வினைத்தொகை பற்றிய சிக்கல்களைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் தலையாய நோக்கம்.[1] வினைத்தொகை பற்றி ஆராயப் புகும் முன் தொகை என்றால் என்ன என்று விளங்கிக் கொள்வது இன்றியமையாதது. தொகைக்கு இருவகையான விளக்கங்கள் கூறப்படுகின்றன: (1) ஒரு தொடரில் உருபோ அல்லது உருபோடு ஒப்பவைத்து எண்ணத்தக்க கிளவியோ மறைந்து நின்றால் அந்தத் தொடர் ஒரு தொகை. அதாவது உருபோ பிற கிளவியோ ஒரு தொடரில் தொக்கு நின்றால் அது தொகை. இங்கே தொகு என்ற சொல் 'மறைந்து நிற்றல்' என்ற பொரு

1. தொல்காப்பியர், நன்னூலார் முதலாய இலக்கணப் பெரும்புலவர்கள் வினைத்தொகையையும் சேர்த்துத் தொகைகளை அறுவகையாகப் பிரித்துள்ளனர்.

ளில் நிற்கிறது. (2) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பெயர்கள் ஒரு குறிப்பிட்ட இலக்கண உறவில் ஒன்றி நிற்கும் போது அந்தப் பெயர்த்தொடர் ஒரு சொல் நீர்மை பெற்று ஒரே பெயர்போல நிற்கிறது. இத்தகைய பெயர்த் தொடர்கள் தொகை என்று குறிக்கப்படுகின்றன. இங்கே தொகு என்ற சொல் 'ஒருங்கு சேர்த்தல்' என்ற பொருளில் நிற்கிறது. நச்சினார்க்கினியரும் வேறு சில உரையாசிரியர்களும் (தொல். சொல். நச்சி. ப. 233, 34; இளம். ப. 183-88) முதல் கொள்கை யினர். சேனாவரையர், தெய்வச்சிலையார் போன்றோர் இரண்டா வது கொள்கையினர் (தொல். சொல். சேனா. ப. 214, 15; தெய்வ. ப. 229- 2).

1.1 நச்சினார்க்கினியர் கொள்கைப்படி பார்த்தால் தொகைகள் பெயர்களால் மட்டுமே அமைய வேண்டுமென்ப தில்லை. பெயருக்கும் வினைக்கும் இடையில் ஒரு உருபோ பிற கிளவியோ தொக்கு நின்றால் அந்தத்தொடரும் அவர் கருத்துப் படி தொகையில் அடங்கும். (தொல். சொல் நச்சி. 234. 35) பிற்கால இலக்கணப் புலவர் நன்னூலார்க்கும் இக்கருத்து உடன்பாடே (நன். 363) நச்சினார்க்கினியர் கருத்தை நாம் ஏற்பதாக இருந்தால் ஊர் சென்றான், பணம் கொடுத்தான் முதலிய தொடர்களையும் நாம் தொகை என்றே ஏற்கவேண்டும், மேலும், ஊர்சென்ற, ஊர்சென்று, ஊர்செல்ல, ஊர்சென்றால் முதலிய தொடர்களையும் கூட அவர் கருத்துப்படி, தொகை என்றே கொள்ள நேரும். ஏனெனில் ஊர் சென்ற முதலாய தொடர்களில் 'கு' உருபு தொக்கு நிற்கிறது. எல்லோரும் ஒப்புகின்ற தொகைகளை அடக்குவதோடு நில்லாமல், நச்சினார்க் கினியரின் கொள்கை யாரும் எளிதில் இது தொகையல்ல என்று ஒதுக்குகிற வேறு பல தொடர்களையும் தன்னுள் அடக் குகிறது. ஆனால், தொகைபற்றிச் சேனாவரையர் கூறும் விளக் கம் பொருத்தமானதாகவும் நாம் சிறந்ததென விரும்பி ஏற்கத்தக் கதாகவும் உள்ளது.

**1.2.** சேனாவரையர் கொள்கைப் படி, தொகை என்பது பெயர்களால் ஆகிய தொடர் இது நமக்கு உடன்பாடான கருத்து. கண்டபடி எவ்விதத் தொடர்பும் இல்லாமல் பெயர்களைச் சேர்த்துத் தொகையை உருவாக்க இயலாது என்ற உண்மையை அவர் உணர்ந்திருக்கிறார் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது (தொல். சொல். சேனா. ப. 215). தேன் போன்ற மொழி என்ற பொருளில் தேன்மொழி என்றும் பால் போன்ற மொழி என்ற பொருளில் பால்மொழி என்றும் நாம் தொகைகளை அமைக்க லாம். ஆனால் மயில் போன்ற மாதர் என்ற பொருளில் மயில் மாதர் என்றோ புலிபோன்ற சாத்தன் என்ற பொருளில் புலிச் சாத்தன் என்றோ தொகைகளை அமைக்க இயலாது (தொல். சொல். சேனா. ப 215, 16). தொகைகள் அமைவதிலுள்ள எல்லா நியதிகளையும் அவர் கண்டறிந்து கூறவில்லை எனினும் சில குறிப்பிட்ட பெயர்கள் வேறுசில குறிப்பிட்ட பெயர்களோடு சேரும்போது, அவை 'தொகையாற்றல்' பெற்றுக் குறிப்பிட்ட பொருள்களைத் தருகின்றன என்று கூறிச் செல்கிறார். பெயர்கள் தொகும்போது ஏற்படுகின்ற பொருள் விளக்குதிறனை இவர் தொகையாற்றல் என்று குறிக்கிறார் (தொல். சொல். சேனா. ப. 215, 16).

**1.3. மரபுவழித் தொகையும், மரபுவழியல்லாத் தொகையும்** தொகைகளைப்பற்றி ஆராயும்போது அவற்றை மரபுவழித் தொகை, மரபுவழியல்லாத் தொகை என வேறுபடுத்திக் கொள்வது இன்றியமையாததாகிறது மரபுவழித்தொகைகள் எண்ணிக்கைக்குட்பட்டவை; பிரிக்கக் கூடாதவை; வண்ணனை இலக்கணப்படி ஒருசொல் நீர்மை பெற்று ஒரே பெயர்போல நிற்பவை. ஊறுகாய், மரக்கால், செங்கல் போன்ற தொகை கள் இவ்வகையில் அடங்கும். இப்படிப்பட்ட தொகைகளில் உள்ள பெயர்கட்குரிய தனிப் பொருள்கள் வேறு வேறு பொருள்களாக நில்லாமல் காலப் போக்கில் கலந்து ஒருநிலை பெற்று ஒரு புதிய பொருளாகவே உருப்பெறுகின்றன. அதா

வது ஊறுகாய் என்பது 'ஊறுதல்', 'காய்' என்ற தனிப் பொருள்களாக நில்லாமல் ஊறுகாய் என்ற ஒரு குறிப்பிட்ட உணவுத் துணையைக் குறிக்கிறது இன்னும் விளக்கமாகச் சொன்னால் ஊறுகாய் என்பது நீரிலோ பிற திரவத்திலோ ஊறுகிற எல்லாக்காயையும் குறிக்காமல் ஊறுகாய் என்ற ஒரு குறிப்பிட்ட உணவுத்துணையைக் குறிக்கிறது. இவ்வாறே மற்ற மரபுவழித் தொகைகளையும் மரபுவழியல்லாத் தொகைகளி லிருந்து எளிதாக வேறுபடுத்திக் கொள்ளலாம். இனி மரபுவழி யல்லாத் தொகைகளை எடுத்துக்கொண்டால், அவை எண்ணற் றவை; நாம் விரும்பும்போது உருவாக்கத்தக்கவை; வண்ணனை இலக்கணப்படி பிரித்து விளக்கத்தக்கவை மரக்கிளை மரப் பட்டை, மரவேர் போன்ற தொகைகள் இவ்வகையில் அடங் கும் வினைத்தொகையிலும் இவ் விருவகைத் தொகைகளும் உண்டு. இந்தச் செய்திகளையெல்லாம் மனத்திற்கொண்டு வினைத்தொகையை ஆராய்ந்தால், வினைத்தொகையில் உள்ள சிக்கலை நாம் நன்றாக உணர்ந்து கொள்ள முடியும். அந்தச் சிக் கலைத் தீர்க்கத்தக்க ஏதாவது ஒரு வழியைக் காணவும் முடியும்.

2. **வினைத்தொகை** வினைத்தொகையின் முதல் உறுப்பு பெயரெச்சம் என்பது சில அறிஞர்களின் கருத்து (தொல். சொல். இளம் 184 ப. தெய்வ 234; நச்சி. ப. 237, 38; நன். 364). வேறு சில அறிஞர்கள் அதை வினைவேர் (verb root ) என்று கருதுகிறார்கள் (தொல். சொல். சேனா. ப. 216).[2] இன்னும் சிலர் அது ஒருவகைவினைப்பெயர் என்னும் கொள்கை யினர் (தொல் சொல். சேனா. ப. 217). இந்த மூவகைக் கருத்துக்களையும் ஆராய்ந்து பார்ப்போம்.

2.1. **பெயரெச்சமா?** இளம்பூரணர் முதலாய அறிஞர்கள் வினைத்தொகையின் முதல் உறுப்பைப் பெயரெச்சம் என்று

---

2. இக்கால வண்ணனை மொழியியலார் பலரும் வினைத்தொகையின் முதலுறுப்பை வினைவேர் என்றோ அல்லது வினையடி என்றோ கொள்வர்.

கொள்கின்றனர். அவர்கள் கொல்யானை என்ற வினைத்தொகையைக் கொன்றயானை, கொல்லும் யானை என விரித்து விளக்கம் கூறுவர். பவணந்தியாரும் வினைத்தொகையின் முதலுறுப்பு காலம் கரந்த பெயரெச்சம் என்று கூறுகின்றார் (நன். 364)

இந்தக் கருத்துக்கு எதிராக எழுகின்ற முதன்மையான தடை வினைத்தொகையில் உள்ள இன்றியமையாத ஒரு பொருட் கூறுபாடே. அதாவது, கொல்யானை என்ற தொகை யாரோ ஒருவரைக் கொன்ற யானையையோ அல்லது இனி யாராவது ஒருவரைக் கொல்லப்போகின்ற யானையையோ குறிக்கும் என்பது பொருத்தமில்லை. கொல்யானை என்ற தொகையிலுள்ள கொல் என்ற அடை கொல்லும் இயல்பையோ அல்லது கொல்லும் வல்லமையையோ குறித்து நிற்கிறதே தவிர கொன்ற நிகழ்ச்சியையும் கொல்லப்போகிற செய்தியையும் குறித்து நிற்கவில்லை என்ற உண்மை இதைச் சற்று ஊன்றிப் பார்த்தால் தெளிவாகப் பளிச்செனப் புலப்படும். கொல் யானை என்ற தொகையில் ஒரு குறிப்பிட்ட கால இடைநிலையை ஏற்றினால் இந்தத் தொகையிலுள்ள இன்றியமையாத ஒருபொருட்கூறுபாடு சிதைந்து மறைந்து போகிறது. எதிர்பாராத வகையில், சந்தர்ப்பவசமாக, தவறுதலாக, தன்னையறியாமல், கால்இடறி யாரோ ஒருவரை அல்லது ஒரு குழந்தையைக் கொன்றுவிட்ட ஒரு யானையைக் கொல்யானை என்ற சொல் குறிக்காது. அப்படிக் குறிப்பது வழக்குமில்லை. இனி ஒருவரை கொல்லப் போகிறது என்பதனால் அந்த யானையைக் கொல்யானை என்று குறிப்பதும் வழக்கல்ல. கொல்யானை என்பது கொல்லவல்ல யானை அல்லது கொல்லும் இயல்பினை உடைய யானை என்றே பொருள்படுமேயன்றி, கொன்ற யானை என்றோ கொல்லும் யானை என்றோ பொருள்படாது என்பது இங்கு நன்கு வலியுறுத்த வேண்டிய செய்தி. கொல்லும் யானை என்பதில் கொல்லவல்ல யானை, கொல்லும் இயல்பை உடைய யானை என்ற பொருளின் குறிப்பு இருப்பதால் கொல்லும் யானை என்ற விளக்கம் சரிபோலத் தோன்றலாம். கொல் என்ற

அடைகொல்லும் இயல்பு என்றும் கொல்லும் வல்லமை என்றும் பொருள்படுவதாகக் கொண்டால் அங்கே எதிர்காலம் என்ற கருத்துக்கு இடமில்லை. எனவே செரல் என்பது பெயரெச்சமல்ல. அன்றியும், யானை என்பது கொல்யானை என்று தொகைப் பட்டது என்று கொண்டால் நடக்கும் யானை என்பது நட யானை என்று தொகைப்பட இயலாமற்போனது ஏன்?[3] எனவே கொல்லும் யானை என்பது கொல்யானை என்றாயிற்று என்பதும் பொருந்தாது. வினைத்தொகையின் முதலுறுப்பு பெயரெச்சமல்ல என்பதும் ஒருவகையில் அது செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் போலத் தோன்றினும் உண்மையில் அது பெயரெச்சமே அல்ல என்பதும் இப்போது தெளிவாக விளங்கும்.

**2.2. வினைவேரா?** மிகப்பல வினைத்தொகைகளில் அவற்றின் முதலுறுப்பு வினை வேர்களை ஒத்திருப்பது உண்மையே. ஆனால், வினைத்தொகையை அமைக்கும் முதலுறுப்புகளில் வேர்கள் அல்லாதனவும் உண்டு என்பது ஒருபுறமிருக்க வினைத் தொகையின் முதலுறுப்பாக அமைய முடியாத வேர்களும் உண்டு.[4] வருந்து தொழில், பயிற்று திறன் முதலாய தொகைகள் மொழியில் நடைமுறையில் அமையத்தக்கனவும் ஒப்பத்தக்கனவும் ஆம். இங்கே வருத்து, பயிற்று முதலிய சொற்கள் வேர்களல்ல என்பதும் அவை வினைத்தொகையின் முதலுறுப்பாக வந்துள்ளன, என்பதும் நம் கருத்தில் இருத்தத் தக்க செய்தி. முன்பே குறிப்பிட்டது போல, போ, பார்

---

3. பொதுவாகப் பார்த்தால், கேள், கல், பார், நட ஆகிய வாய்பாடுகட்குரிய வினைகள் வினைத்தொகையை அமைப்பதில்லை. அடிமாடு, குடிதண்ணீர் முதலாய ஒருசில தொகைகளே இதற்கு விதிவிலக்காக உள்ளன.

4. சா, பார் முதலாய வினைவேர்கள் வினைத்தொகைகளை அமைப்பதில்லை. ஆனால், உணர்த்து (உணர் + த்து), வருத்து (வருந் + த்து) முதலாய சொற்கள் வினைவேர்களல்ல எனினும் வினைத் தொகைகளை அமைக்கவல்லன.

முதலாய வினைவேர்கள் வினைத்தொகையின் முதலுறுப்பாக வந்து வினைத்தொகைகளை அமைப்பதில்லை. எனவே, வினைத்தொகையின் முதலுறுப்பு வினைவேர்களே என்ற[5] இரண்டாவது கொள்கையும் நிறைவுடைய கொள்கையாகாது. இந்தக் கொள்கை உட்படுத்தவேண்டிய எல்லாவற்றையும் உட்படுத்தாமலும் விலக்க வேண்டிய எல்லாவற்றையும் விலக்காமலும் வழுவிக் குறைப் பட்டுக் கிடக்கிறது.

வினைத்தொகையின் முதலுறுப்புக்களை வினைவேர் என்னுமல் வினையடி என்று கொண்டால் என்ன குறை என்று இங்கு ஒரு வினா எழலாம். செய்வி, செய்விப்பி, நடப்பி, நடத்துவி முதலாய சொற்களும் வினையடிகளாக வரத்தக்கன. இத்தகைய வினையடிகள் வினைத்தொகை அமைய இடந்தருவதில்லை. எனவே வினையடிகளே வினைத்தொகையின் முதலுறுப்புகளாக வந்தன என்று கொள்வதும் பொருந்தாது.

**2.3 ஒருவகை வினைப்பெயரா?** வினைத் தொகையின் முதலுறுப்பு ஒருவகை வினைப்பெயர் என்னும் கருத்தினர் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப. 217)- இக்கருத்து சற்று ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. தொடக்கத்தில் நாம் முன்பே குறிப்பிட்டது போல, நமது இலக்கணப் புலவர் வினைத்தொகை உட்படத் தொகைகளை ஆறுவகையாகப் பிரித்திருக்கிறார்கள் (தொல். 895; நன். 362). வினைத்தொகை தவிர ஏனைய ஐந்து தொகைகளி லும் உள்ள தொகையுறுப்புகள் யாவும் பெயர்களாகவே உள்ளன. எனவே வினைத்தொகையின் முதலுறுப்பும் பெயரே என்பது பொருத்தமற்ற கூற்றாகாது. "வரிபுனைபந்து" (நற். 12) போன்ற தொடர்களையும் நாம் இலக்கியங்களில் காண்கிறோம். இதிலுள்ள வரி, புனை ஆகிய சொற்களைப் பெயர்கள் என்றே கொள்ள வேண்டி உள்ளது. வந்த, சென்ற, பையன் என இரண்டு பெயரெச்சங்கள் இணைந்து வருவது தமிழ் வழக்

5. பார்க்க, குறிப்பு 3.

கிற்கு ஒவ்வாதாதலால் வரி புனை என்பவற்றைப் பெயரெச்சம் என்று கொள்ள இயலாது. ஆனால் பெயர்கள் எத்துணைப் பெயர்களாயினும் தம்முள் இணைந்து தொகையாக வரலாமாதலால், வரிபுனைபந்து என்பதில் வரி, புனை ஆகிய பெயர்கள் இணைந்து, பந்து என்பதோடும் சேர்ந்து, மூன்று பெயர்களும் ஒருதொகையாக அமைந்துள்ளன.

3. பண்புத் தொகையும் வினைத்தொகையும் தம்முள் பல வகையில் ஒத்த இயல்பினவாக உள்ளன. இவற்றை இங்கு ஒப்பிட்டுச் சிந்திப்பதும் நம் ஆய்வுக்கு உதவியாக உள்ளது இவ்விரு தொகைகளிலுமுள்ள ஒரு நிகர் தன்மையினால்தான் உயர்திணை என்ற தொகை வினைத்தொகையா? பண்புத் தொகையா என்பதில் உரையாசிரியர்களிடையே கருத்து மாறுபாடு தோன்றியுள்ளது (தொல். சொல். இளம். ப 2; நச்சி. ப. 4; தெய்வ. ப. 8). இத்தகைய கருத்து மாறுபாட்டுக்கு அமைதி காண நுண்மாண் நுழைபுலனோடு தொகைகளின் பொருட்கூறுபாட்டை ஆராய்வது இன்றியமையாததாகிறது உயர்திணை என்ற தொகையில் உயர் என்ற சொல் வினையைக் குறிக்குமானால் அது வினைத்தொகை; அச்சொல் வினைநிகழ்ச்சியைக் குறிக்காமல் பண்பைக் குறிக்குமானால் அது பண்புத்தொகை. வினைப் பெயரை முதலுறுப்பாகக் கொண்டு வருவது வினைத்தொகை; பண்புப் பெயரை முதலுறுப்பாகக் கொண்டு வருவது பண்புத் தொகை. ஒருவகையில் பார்த்தால் வினையும் ஒரு பண்புதானே? வினையையும் பண்பையும் எப்படி வேறுபடுத்திக் காண்பது? இலக்கண நெறியில் இதற்குக் கீழ்க்காணுமாறு விடைகூறலாம். வினைத்தொகையா பண்புத்தொகையா என்று ஐயத்துக்குரிய தொகையின் முதலுறுப்பாக நிற்கும் சொல் கால இடைநிலையையும் எதிர்மறை இடைநிலையையும் ஏற்கவல்லதாயின் அது வினை என்றும் அந்த இடைநிலைகளை ஏற்க இயலாததாயின் அது பண்பு என்றும் வேறுபடுத்தி உணரவேண்டும். பண்புக்கும் வினைக்கும்

உள்ள இத்தகைய நுண்ணிய வேறுபாட்டினையும் ஒருநிகர் தன்மையையும் எண்ணிப்பார்த்துத்தான் நம் இலக்கணப் புலவர்கள் குறிப்புவினை, தெரிநிலைவினை என்று ஒரு அரிய இன்றியமையாத பாகுபாட்டை இலக்கணத்தில் அமைத்திருக்கிறார்கள். மேலும் உயர்குணம், உயர்குலம் முதலாய தொகைகளில் உள்ள உயர் என்ற சொல்லுக்கு உரிய எதிர்மறை தாழ், இழி என்பன. உயர்குணம் என்பதற்கு எதிர்மறை ஆவது தாழ்குணம் அல்லது இழிகுணம் என்பனவேயன்றி உயராத குணம் என்பது அதற்கு எதிர்மறையாகாது. ஆகவே உயர்குணம், உயர்குடி முதலாயின பண்புத் தொகைகளே. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழறிஞர்களிடையே பொதுவாக உள்ள தமிழ்பற்றிய உள்ளுணர்வு அல்லது "தமிழ்மொழிப்புலம்" மேற்கூறிய கருத்தைப் பெரிதும் ஆதரித்து உறுதிப் படுத்துகிறது. பண்பு, வினைபற்றிய ஆய்வில் இப்போது இதற்குமேல் என்னால் உட்புகுந்து விளக்க இயலவில்லை.

4 பண்புகுறித்து நின்று குறிப்புவினையை உருவாக்கவல்ல நல், வல் முதலாய சொற்களை நல்வினை, வல்வினை முதலாய தொகைகளில் பெயர்களாகக் கொள்ளும்போது வினை அல்லது செயல்குறித்து நின்று இன்னொருவகை வினையாகிய தெரிநிலை வினையை உருவாக்கவல்ல கொல், வெல் முதலாய சொற்களையும் கொல்யானை, வெல்படை முதலாய தொகைகளில் பெயர்களாகவே கொண்டால் அதில் எதும் குறைபாடோ முரண்பாடோ குழப்பமோ இருப்பதாகத் தெரியவில்லை; மாறாக வினைத்தொகைச் சிக்கலுக்கு ஓரளவுக்காவது தீர்வும் தெளிவும் விளக்கமும் கிடைக்கிறது. தொடரியல் அடிப்படையில் பார்த்தால் வினையிலிருந்து பிறக்கும் பெயர்களை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.[6] பாட்டு, மலர் முதலாய பெயர்கள் முதல்வகை

6. இந்த மூன்று பெரும்பிரிவுகளையும் மேலும் வகைப்படுத்தலாமெனினும் அத்தகைய வகைப்பாடு வினைத்தொகை ஆய்வுக்குத் தேவையில்லை.

யைச் சாரும். இவை நல்ல, தீய முதலாய குறிப்புப் பெயரெச்சங்களையும் படித்த, பார்த்த முதலாய தெரிநிலைப் பெயரெச்சங்களையும் ஏற்பதோடு வேற்றுமை விகுதிகளையும் ஏற்கும். வரல், வருவது முதலாய பெயர்கள் இரண்டாம் வகையைச்சாரும். இவை இருவகைப் பெயரெச்சங்களில் எதையும் ஏற்பதில்லை; ஆனால் அவை நீ வரல், நீ வருவது என எழுவாயும் வரற்கு, வருவதற்கு என வேற்றுமை விகுதியையும் ஏற்கும் வினைத்தொகையின் முதலுறுப்பாக வரும் பெயர்கள் மூன்றும் வகையைச்சாரும். இவைஇருவகை எச்சங்களில் எதையும் ஏற்பதில்லை; வேற்றுமை விகுதிகளையும் ஏற்பதில்லை. ஆனால், இவை பெயர்கட்கு அடைகளாக மட்டும் வரும். இவை பண்புத்தொகையின் முதலுறுப்போடு ஒப்பவைத்து எண்ணத்தக்கன. இவை வேற்றுமை உருபை ஏற்பதில்லையாதலால் இவற்றை நம் இலக்கணப் புலவர்கள் வேற்றுமைத் தொகையில் அடக்கவில்லை. பண்புத்தொகைக்கும் வினைத்தொகைக்கும் உள்ள தனிப்பட்ட இலக்கண இயல்பினால்தான் நமது இலக்கண மரபில் இவை தனிப்பட்ட இருவேறு தொகைகளாகக் கொள்ளப் பட்டுள்ளன. இவற்றை இரண்டாகப் பிரித்து வேறுபடுத்தியதன் அடிப்படை வினைத்தொகை, பண்புத்தொகை என்ற குறியீடுகளிலேயே குறிப்பாக உணரக் கிடக்கிறது.

5 பல்லாற்றானும் நன்கு அலசிப்பார்க்கும்போது வினைத்தொகையின் முதலுறுப்பை ஒருவகை வினைப்பெயர் என்று கொள்வதே பொருத்தமென்று தோன்றுகிறது.[7] தொகுத்துச்

---

யாதலால் வினைப்பெயர்களை மூன்று பெரும் பிரிவுகளாக மட்டும் பிரித்துக்கொண்டோம். வினைப்பெயர்கள் பற்றிய வகைப்பாட்டில் அக்கறையுள்ளவர்கள் **இலக்கண உலகில் புதிய பார்வை** (பக். 47 — 59) பார்க்க.

7. அன்றியும், யானை கொல்வது என்ற சொற்றொடரிலிருந்து கொல்யானை என்ற தொகையை வருவிக்கலாம் என்று தோன்றுகிறது இவை தவிரவும், வினைததொகைக்கு இன்னொரு புதிய விளக்கமும் தரலாம் என்று தோன்றுகிறது. அதாவது, கொலை, நடிப்பு முதலாய வினைப்

சொன்னால் (1) வினைத்தொகையும் ஏனைய தொகைகளைப் போலப் பெயர்களால் ஆகிய ஒரு தொகையே; (2) வினைத் தொகையின் முதலுறுப்பு ஒருவகை வினைப்பெயரே; (3) வினைத் தொகையும் பண்புத் தொகையும் ஒப்பவைத்து எண்ணத்தக்கன.

(எனது பேராசிரியர் டாக்டர் ச. அகத்தியலிங்கனார், திரு ந. குமாரசாமி ராஜா, டாக்டர் செ. வை. சண்முகம் ஆகியோருடனும் எனது நண்பர் டாக்டர் இராம. சுந்தரம் அவர்களுடனும் வினைத்தொகை பற்றிக் கலந்து பேசி ஆராய எனக்கு இவர்கள் வாய்ப்பு நல்கினார்கள். இவர்கட்கு என் அன்பு நிறைந்த நன்றி.)

**மேற்கோள் நூல்**

கோதண்டராமன், பொன். 1973 **இலக்கண உலகில் புதிய பார்வை**, சென்னை.

---

பெயர்களை முதலுறுப்புகளாகக் கொண்டு அமைந்துள்ள கொல்வினை, நடிப்புக்கலை முதலாய தொகைகளே வினைத்தொகை என்று கூறவும் வாய்ப்பு உண்டு. எப்படியும் இதுபற்றி இன்னும் ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்பது வெளிப்படை.

# 13

# வழுவமைதியா, மயக்கமா?

வ. சுப. மாணிக்கம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

இலக்கணத்தில் வழுவமைதி என்ற குறியீடும் பிழை; வழுவை நீக்கிக் காத்தல் என்ற கோட்பாடும் பிழை என்ற என் அண்மைக் கருத்தை ஓராற்றால் வெளிப்படுத்த எழுந்ததே இந்த ஆயுரை. எவ்வளவு உரைகளோடும் எவ்வளவு உரைவிளக்கங்களோடும் எவ்வளவு வழிவழிச் சிந்தனைகளோடும் என் ஆயுரை மோதி முட்ட வேண்டி வரும் என்று எண்ணுங்கால், மனம் அழுங்குகின்றது. இதுவரை வந்த சிந்தனை அறியாமையா, என் சிந்தனை அறியாமையா, என்று மெய்ப்பொருளாளர் காண்பாராக எனப் பற்றற்று எழுதுங்கால மனம் தளிர்க்கின்றது.

## 1. தொல்காப்பியம் கூறுவது

"வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே" (தொல். 476)

என்பது தொல்காப்பியம். உரையாசிரியர்கள் வேறு வேறு வகையில் மாறுபட்டிருந்தாலும் சொல்லிவைத்தாற்போல இந்நூற்பா ஒன்றின்கீழ்த்தான் வழுவமைதி பற்றிய குறிப்புக்களை முதற்கண் எழுதியிருக்கின்றனர் என்ற ஒப்புமை நினையத்தகும். வழுக்களின் பெயர்கள், அவற்றின் எண்ணிக்கை, எடுத்துக் காட்டுக்கள் இன்னபிற இவ்வுரைப்பகுதி தோறும் விரிவாக இடம் பெற்றுள. பின் உரைவிளக்கங்கட்கு இப்பகுதியுரை முன்னுரையாகும்.

> " திணைபால் மரபு வினச்செப் பிடஞ்சொல்
> இணையா வழுத்தொகையோ டெச்சம் - அணையாக்
> கவினையபார் வேற்றுமையும் காலமயக்குங் கொண்டு
> அவிநயனர் ஆராய்ந்தார் சொல் " (வீர. ப. 88)

என்ற வீரசோழிய உரை மேற்கோள் பாடல் அவிநயனர் கொண்ட வழுவெண்ணிக்கையைத் தொகுத்துக் காட்டுகின்றது.

> " திணையே பாலிடம் பொழுது வினவிடை
> மரபாம் ஏழும் மயங்கினும் வழுவே "

என்பது நன்னூற்பா (நன். 375). இது வழுக்களுக்கு வரிசையும் எண்ணிக்கையும் கூறுகின்றது. வழு ஏழு என்பது எல்லா உரையாசிரியர்க்கும் உடன்பாடே. இவரெல்லாம் ஏழு என்று தொகை சொல்லியதுபோலத் தொல்காப்பியர் கூறவில்லை. நன்னூலார் மேலை நூற்பாவில் தொகுத்த கிடக்கை முறைப்படி ஒவ்வொன்றையும் வகுத்து நிரல்பட விளக்கிச் செல்வர். தொல்காப்பியம் வழுக்களிவை என ஓரிடத்துத் தொகுக்கவும் இல்லை; பின்னர் வகுத்துரைக்கவும் இல்லை. இதனை உணர்ந்த கல்லாடனர் " அவ்வழுக்களது பெயரும் முறையும் தொகையும் ஓரிடத்தும் கூறிற்றிலரேயாயினும் உரையிற் கோடல் என்பதனான் இச்சூத்திரத்து (வினையிற்றோன்றும்) உரையிற் கொள்ளப்படும் " (தொல் சொல். கல். ப. 14), என்று ஓர் உண்மையை வெளிப்படுத்துவார் ஆயினர். தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல் என்ற உத்தி முறைகளைத் தொல்காப்பியர் அறியாதவர் அல்லர். வேற்றுமையியலில்,

"வேற்றுமை தாமே எழென மொழிப" (தொல். 546)

"விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே" (தொல். 547)

என்று தொகுத்துச் சொல்லியதையும் பின் நிரல்பட வகுத்து மொழிந்ததையும் அறிவோம். இவ்வுத்தியைப் பல இடங்களில் பயன்கொண்ட ஆசிரியர் வழு இலக்கணம் பற்றித் தொகை வகைப்படுத்தவில்லை என்பது குறிக்கொள்ளத்தகும். ஏன் செய்ய வில்லை என்று கேட்பீராயின், கருவே இல்லாதபோது பால்வகை சொல்ல முடியுமா? கையே இல்லாதபோது விரல் எண்ணிக் கைக்கு இடமுண்டோ? தொல்காப்பியர் வழு என்பதான ஓர் இலக்கணக் கோட்பாட்டையே கொண்டிராத நிலையில், வழு எத்தனை? அவற்றின் பெயர்கள் என்ன? நிரல் முறைகள் யாவை? என்று கேட்பதிற் பொருளில்லை. ஆதலின் மேற்காட்டிய உரைக் காட்டில் கல்லாடனார், தொல்காப்பியனார் வழுக்களைக் கூறியது போலவும் அவற்றின் பெயர், முறை, தொகைகளைத் தான் கூறாது விடுத்தது போலவும் அதனால் உரையிற்கோடல் ஏற் பட்டது போலவும் எல்லாம் எழுதியிருப்பது கானல்நீரைப் பருகினேன் என்பதுபோல அடிப்படையற்ற ஊகம் என்பது தெளிவு.

## 2. தொல்காப்பியம் கூறுவது

தொல்காப்பியம், இலக்கணத்தின் ஒரு கூறாகச் சொல்வன வெல்லாம் மயக்கங்களேயன்றி வழுக்கள் அல்ல. மயக்கம் என்பது பண்டை இலக்கணக் குறியீடு. கலத்தல்-சேர்ந்து நிற்றல்-புணர்தல் என்பது அதன் பொருள். கலத்தல் என்ற இம்மயக்க இலக்கணம் எழுத்து, சொல், பொருள், என்ற மூன்று அதிகாரத் தும் உண்டு. யிர் மயங்கியல், புள்ளிமயங்கியல், என்ற தலைப் புக்கள் பெருஞ்சான்று.

"மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை" (தொல். 22)

"மெய்ந்நிலை மயக்கம் மான மில்லை" (தொல். 47)

"நெரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த" (தொல். 82)

"முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் **தெள்ளிது** என்ப" (தொல். 572)

"குத்தொக வரூஉம் கொடையெதிர் கிளவி
அப்பொருள் ஆறற்கு **உரித்தும்** ஆகும்" (தொல். 583)

"இருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாம்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே" (தொல். 585)

வேற்றுமை மயக்கங்கள் வழுவற்றவை, வருதற்கு உரிமையுடையவை, திரிபற்றவை, தெளிவானவை என்று ஆசிரியர் ஐயமின்றி முடித்திருப்பதைக் காண்க.

எழுத்ததிகாரத்தில், புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல் எனவரும் இறுதி இயல் எல்லாம் புணர்ச்சிமேல் எழுந்தன என்பதனை அறிவோம். ஆதலின் மயங்கியல் என்பதற்குப் புணரியல் என்பதே பொருள். உயிரீற்றுப்புணரியல், மெய்யீற்றுப் புணரியல் என்ற நன்னூல் தலைப்புக கொண்டும் தெளியலாம். மயக்கம் என்பது வழு என்று ஒரு தவறான பொருளுணர்ச்சிக்கு இடங்கொடுத்தவர் உரையாசிரியரான இளம்பூரணர். 'வினையிற் றோன்றும்' என்ற நூற்பாவில் "**மயக்கம் எனினும் வழு எனினும் ஒக்கும்**" (தொல். சொல். இளம் ப. 8) என இவர் எழுதியது முதற்பிழை. பின்னர் பெருக்கல் வாய்பாடு ஆயிற்று. பெரும்பாலும் உரையாசிரியர்தம் உரைப்பகுதியை நூற்பா உருவாக்கியவர் பவணந்தியார்.

"திணையே பாலிடம் பொழுது வினாவிடை
மரபாம் எழும் மயங்கினும் வழுவே" (நன். 375)

என்ற நன்னூற் சூத்திரத்து 'மயங்கின் ஆம் வழு' என்ற தொடர் சிந்தனைக்கு உரியது. "மயங்கின் வழு ஆம் எனவே மயங்காது வருதல் வழாநிலையாம்" என்பர் மயிலைநாதர். மயக்கம் என்பதற்குக் குற்றம் என்றே பொருள் கொண்டபின், தொல்காப்பியத்துக்கும் பின் நூல்கட்கும் கருத்து வேற்றுமை அகன்று

செல்கின்றது. நெருக்கத்துக்கு இடமில்லை. புணர்ச்சி நக்கது, என்று கொண்ட அகத்திணை இலக்கியங்கட்கும், அது குற்றம், வீடுபேற்றுக்குத்தடை, என்று கொண்ட பிற்கால இலக்கியங் கட்கும் உள்ள நிலையோடு இதனை ஒப்பிட்டுக் கொள்ளலாம்.

**3. என் கருத்து**

எழுத்ததிகாரத்தில் உயிர்வழுவமைதி, புள்ளிவழுவமைதி, குற்றியலுகர வழுவமைதி என்று கூறாததுபோல், பொருளதி காரத்தில் திணைப்பொருள் வழுவமைதி, கருப்பொருள் வழு வமைதி, உரிப்பொருள் வழுவமைதி என்று கூறாததுபோல, சொல்லதிகாரத்தும் வேற்றுமை வழுவமைதி என்று கூறாதது போல, திணைவழுவமைதி, பால் வழுவமைதி, இடவழுவமைதி, காலவழுவமைதி, செப்புவழுவமைதி, வினாவழுவமைதி, மரபு வழுவமைதி என்று கூறாமலிருப்பதே தகும். இவையெல்லாம் தொல்காப்பியத்து ஒன்றுபோல் மயக்கம் என்ற குறியீடு பெறுவன.

> "மயங்கல் கூடா தம்மர பினவே" (தொல். 494)
>
> "அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை" (தொல். 509)
>
> "இறப்பே யெதிர்வே யாயிரு காலமும்
> சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி" (தொல். 732)
>
> "ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்" (தொல். 733)

என இவ்வாறு ஏனையிடங்களிற் போல மயங்குதல் என்ற சொல்லாட்சி வருதலை நினைவு கொள்க.

**4. வழுவமைதிகளா ?**

இனி உரையாசிரியர்களும் நன்னூலாரும் வழுவமைதிகள் என்று எழுதியவற்றை அவை வழுவமைதிகள்தாமா என்று ஆராய்வோம்.

(அ) பால்மயக் குற்ற ஐயக் கிளவி
தானறி பொருள் வயிற் பன்மை கூறல்" (தொல். 506)

'ஆண்மகன் கொல்லோ பெண்மகள் கொல்லோ இஃதோ தோன்றுவார்' என்பது பால் வழுவமைதிக்கு எடுத்துக்காட்டு. வழு என ஒன்றிருந்தால் அதனை வழாநிலையாகச் சொல்லவும் ஒருவழி இருக்க வேண்டும். 'அவன் வந்தது' வழு. அவன் வந்தான் என்றோ அது வந்தது என்றோ வழாநிலை சொல்லிக் காட்டலாம்.

i. ஆண் மகனோ பெண் மகளோ தோன்றுவான் ? - பால்வழு
ii. ஆண் மகனோ பெண் மகளோ தோன்றுவாள் ? - பால்வழு
iii. ஆண்மகனோ பெண் மகளோ தோன்றுவார் ? - பால் வழுவமைதி

முன்னிரண்டும் வழு; மூன்றாவது வழுவமைதி என்றால் வழா நிலையாகக் கூற வேண்டும் என்று நான் நினைக்கின்றேன். வழுப் படாத தூய்மையான ஒரு தொடரைச் சொல்லுங்கள். தோன்று வார் என்ற தொடர் என் வழுவமைதியாயிற்று என்ற வினாவைச் சேனாவரையர் தாமே எழுப்பிக் கொண்டு, "ஒருமையாற் கூறின் வழுப்படுதல் நோக்கிப் பன்மை கூறலென வழாநிலை போலக் கூறினாரேனும் ஒருமையைப் பன்மையாற் கூறுதலும் வழுவாதலின் இவ்வாறு வழுவமைத்தவாறாயிற்று' (தொல், சொல். சேனா. ப. 20) என்று அமைதி கூறுவர். மீண்டும் கேட்கின்றேன் வழாநிலையாகச் சொல்ல ஒரு வழி கூறுங்கள் என்று. மொழியில் அங்ஙனம் சொல்லிக்காட்ட ஒரு தொடர் இல்லாதபோது வழுவுக்கோ வழுவமைதிக்கோ இடமில்லைகாண். அவ்வாறு கூறப்புகின் மொழிவழு என்று ஆகுமேயன்றிப் பால் வழு என்று ஆகாது. இதனைச் சிறிது எண்ணிப் பார்த்திருக் கின்றார் கல்லாடனார். "இவ் ஐயத்துக்கு இலக்கண வழக்கினை வேறு காணாமையின் இதுதான் இலக்கணம் ஆகற்பாற்று எனின், வேறு வழக்கில்லை எனினும் இது பொருள்வகை தொக்க வழுவே எனப்படும்" (தொல். சொல். கல். ப. 26), என்பது இவர் தம் குறிப்பு.

(ஆ) "முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்"
(தொல். 725)

மலை நிற்கும், தீச்சுடும், யாறு ஒழுகும் என்பன எடுத்துக் காட்டுக்கள். இவற்றைக் காலவழுவமைதிகள் என்பர் உரையாசிரியர்கள். வழு என்பதற்கோ வழுவமைதி என்பதற்கோ நூற்பாப் போக்கில் இடமில்லை. "குற்றியலுகரம் நிற்றல் வேண்டும்" (தொல். 34) என்பது போலவும் 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்" என்பது போலவும் (தொல். 608) "மெய்ந்நிலைப் பொதுச் சொற் கிளத்தல் வேண்டும்' என்று தெளிவுபடுத்துவர் ஆசிரியர். செய்யும் என்னும் உண்மை காட்டுகின்ற பொதுச் சொல்லாற் சொல்ல வேண்டும் என்று நூற்பித்திருத்தலின் குறைபாடின்மை பெறப்படும். மலை நின்றது என இறந்த காலத்திற் கூறினும் வழு; மலைநிற்பது என எதிர்காலத்திற் கூறினும் வழு; மலைநிற்கும் என நிகழ் காலத்திற் கூறினும் வழு என்று சொல்லிவிட்டு, வழாநிலையாகக் கூறுதற்கு வேறு வழியும் இல்லை என்று சொன்னால், முன் கூறியபடி மொழிக் குற்றமாக அன்றோ முடியும்? போகாத ஊருக்கு வழி காட்டுவது போலவும், குற்றப்படுத்தியல்லது போகவிடமாட்டார்கள் போலிருக்கிறதே என்பதாகவும் அல்லவாபடும் ?

## 4. தொடருறவுகள் - கரண்டியுவமை

அடுக்களையில் சோற்றுக்கு ஒரு கரண்டி; குழம்புக்கு ஒரு கரண்டி; மோருக்கு ஒரு கரண்டி என மூன்று கரண்டிகள். மிளகுநீருக்கும் பச்சடிகிச்சடிகளுக்கோ, பாயசத்துக்கோ தனித் தனிக் கரண்டிகள் நம்மிடம் இல்லை. என்செய்வோம்? குழம்புக் கரண்டியை மிளகுநீருக்கும் பயன்படுத்துவோம். வேறு கரண்டிகளை மற்றவற்றுக்குப் பயன்படுத்துவோம். மூன்றே

உள்ள நிலையில் ஏனையவற்றுக்குப் பயன்படுத்தும்போது அஃதாவது, உள்ளவற்றுள் ஒன்றினை ஒன்றுக்குமேல் பயன்படச் செய்யும்போது மயக்கம்-கலத்தல் எனப் பெயர் பெறும். சோற்றுக் கரண்டியை மிளகுநீரிற் போடுவதைக் காட்டிலும் குழம்புக் கரண்டியை மிளகுநீரில் போடுவதற்குப் பொருத்தம் உண்டல்லவா?

வாழ்க்கையில் ஒரு சில பொருள்களை வைத்துக்கொண்டு பலவற்றுக்குப் பயன்படுத்துகின்றோம். மூன்று சீட்டுக்களை வைத்துக்கொண்டு கால முழுதும் சீட்டாடவில்லையா? நூறு அட்டைகளை வைத்துக்கொண்டு எல்லார்க்கும் நடுத்தெருவில் சோதிடம் கூறவில்லையா? ஒரு பொருளுக்கு ஒன்று, ஒன்றுக்கு ஒரு பொருள் என்பது உலக வழக்கில்லை. வழக்காக ஆகவும் முடியாது மொழியும் இவ்விதிக்கு உட்பட்டதே. கையின் தொழிலை வாய் செய்யின் வழுவாகும். காலின் தொழிலைக் கை செய்யின் வழுவாகும். காலால் நடக்கலாம்; ஓடலாம்; குதிக்கலாம்; தாண்டலாம். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கால் வேண்டுமா? காலங்கள் தம்முள் ஒரு பொருளைக் கூடுதலாகக் காட்டுவது, பால்கள் வேறுபால்களையும் காட்டப் பயன்படுத்துவது, என்பன இனமயக்கம், இனக்கலப்பு, இனப்புணர்ச்சி எனப்படுமன்றி வழு எனப்படாது. திணையும் பாலும் இடமும் காலமும் பிறவும் தம்முட் சேர்ந்தால் அஃதாவது திணையொடு காலமும் காலத்தோடு திணையும் சேர்ந்தாற்றான் வழுவாகும் இருதிணை தம்முள்ளும் ஒருதிணைப் பால்கள் தம்முள்ளும் முக்காலம் தம்முள்ளும் செப்புக்கள் தம்முள்ளும் கொடுத்து வாங்கிக் கொள்ளுதல் ஒருமொழிக் குடும்பத்துள் வழுவில்லை. 'போக்கின்று",(505) 'புகரின்று '(369) "வரைநிலையின்று" (478) "கடிநிலையின்று", (389 "ஒல்வழியறிதல்", (246) "கோக்கோரனைய", (576) "சிறப்பத்தோன்றும் மயங்கு மொழிக் கிளவி" (732) என்று நூல் முழுதும் வரும் தொல்காப்பியத்

தொடர்களால் இவ்வுறவு மொழிக்குள் இயல்பானது என்பதனை விளங்கிக் கொள்ளலாம்.

மயக்கம் என்பது கூடுதலான உறவுகள், கூடுதலான பயன் கோள்கள் என்ற தொல்காப்பிய மொழியியத்தைத் தெளிந்து கொள்வோமாயின், 'சுற்றி கொல்லோ மகன் கொல்லோ தோன்று நின்ற உரு' என்பதனைத் திணைவழுவமைதியாகக் கொள்ளோம். உண்டு வருவான், என்ற செய்தென் எச்சத்தைக் கால வழு வமைதியாகக் கொள்ளோம். உரிய ஒரு பொருளைப் புலப்படுத்து வதற்கு வழாநிலையான ஒரு தொடரை உரையாசிரியர்கள் எடுத்துக் காட்ட இயலாதபோது, உள்ள தொடரை வழுவமைதி யென ஏன் இவர்கள் கூறவேண்டும்? இது அடிப்படையில் மொழிக்குற்றம் ஆகாதா? என்பது என் வினா. மொழியின் இயற்கைக்கு உட்பட்டதாக அன்றி அப்பாற்பட்டதாக இருந்த வின் அவர்களின் வழுவமைதி ஏற்றுக்கொள்ள இடலாதது என்பது என்விடை.

5. பொதுவினை - மணையுவமை

உரையாசிரியர் காட்டிய வேறு சில வழுவமைதிகளை எடுத்து ஆய்வோம்.

"வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்"
(தொல். 528)

இதற்கு 'ஆவும் ஆயனும் செல்க' என்பது எடுத்துக்காட்டு. எல்லா உரையாசிரியர்களும் இதனைத் திணை வழுவமைதி என்பர். 'ஆவும் ஆயனும்' என, இனம் அல்லதனோடு எண்ணின மையின் வழுவாயிற்று (தொல். சொல். இளம். ப. 25) என்பது இளம்பூரணர் விளக்கம். இவரை மறுத்து இவை இனந்தான் என்றாலும், செல்க என்பது இருதிணைக்கும் உரிய பொது வினைதான் என்றாலும் ஒரு தொடர்க் கண்ணே இருதிணையும் உணர்த்த வருவது வழுவமைதியாம் என்பர் சேனா வரையர் (தொல். சொல். சேனா. ப. 37). "செல்க என்ற

அஃறிணை ஏவற்றொழிலை முற்றமுடியாமை கருதி வழுவமைத்தார் என்பர் நச்சினார்க்கினியர் (தொல்.சொல். நச்சி.ப. 32). தெய்வச்சிலையாரோ, "வினை யியலுள் வியங்கோள் இருதிணைக்கும் பொதுவென்றாராயினும் எண்ணுங்கால் தனித்தனி எண்ணல் வேண்டுமோ, விரவி எண்ணல் வேண்டுமோ என்ற ஐயம் நீக்குதலின் இது திணை வழுவமைதியாம்" (தொல். சொல். தெய்வ. ப. 35) என்பர். காரணம் வேறு வேறு காட்டினும், திணை வழுவமைதி என்ற ஒரே குரலினரே அனைவரும்.

இது திணைவழுவமைதியா? ஒரு வீட்டில் தந்தை, தாய், பாட்டன், பாட்டி, குழந்தைகள் எல்லாரும் உள்ளனர். தந்தை என் வீடு என்பான்; பாட்டி என் வீடு என்பாள்; குழந்தை என் வீடு என்னும் வீடு எல்லார்க்கும் பொது. ஒருவர் சொல்வதனால் ஏனையோரை விலக்க வேண்டும் என்பதில்லை. நாங்கள் எங்கள் வீட்டிற்குச் செல்கின்றோம் என்று எல்லோரும் கூறலாமே. ஒவ்வொருவரும் நான் என் வீட்டிற்குச் செல்வேன் என்று தனித்தனியாகக் கூறப் புகுவது, நகைப்பிற்கு இடமானது. தமிழ் வாழ்க, தமிழர் வாழ்க; பாரதம் வாழ்க, பாரதர் வாழ்க என்று தனித்தனியாகவும் வியங்கோள் வரலாம். தமிழ், தமிழர், பாரதம், பாரதர், உலகம், உலகோர் எல்லாம் வாழ்க என ஒரு முடிபான வியங்கோளும் வரலாம். தனிப்பட வருதலும், பொதுப்பட வருதலும் இடத்தைப் பொறுத்தது.

6. உரையாசிரியங்கள்

சேர்ந்து வருவதையெல்லாம், கூடுதலான பொருளைக் காட்டும் தொடர் முறைகளையெல்லாம் வழுவமைதி என்றுகூறல் எல்லா உரையாசிரியர்களின் போக்காகக் காண்கின்றோம். 'நிலத்தினும் வானினும் பெரிது' என்ற அடுக்கு வழுவமைதியாம்; 'நிலத்தினும் பெரிது; வானினும் பெரிது' என்று தனித்தனி முடிதல் வழாநிலையாம். உண்டு, தின்று, ஓடிப்பாடி வந்தான் என்பது மரபில்லையாம்; உண்டுவந்தான்; தின்று வந்தான்; ஓடி

வந்தான்; பாடிவந்தான், என்று சொற்றேறும் வினையியைதல் மரபாம். திண்ணை மெழுகிற்று என்பது மரபு வழுவமைதியாம். திண்ணை மெழுகப்பட்டது என்பது மரபு வழா நிலையாம். இங்ஙனம், ஏறக்குறைய நூற்பாதோறும் வழுவமைதி கூறும் உரையாசிரியங்களை நாம் ஒத்துக்கொண்டால் நம் இலக்கண நூல்கள் மொழியின் இயல்பும் வழக்கும் காட்ட வந்த தன்மை நூல்களல்லாது, இன்னின்ன மொழிக் கோளாறுகளை ஒத்துக் கொள்ளலாம் என்று மக்கட்கும் புலவர்க்கும் சந்து செய்விக்க வந்த தூது நூல்களாகி முடியும். அடுக்கக் கூடாது என்றோ இருதிணைக்கண் சேர்த்து எண்ணக்கூடாது என்றோ தொல் காப்பிய விதியுமில்லை; மொழி வழக்குமில்லை.

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக்கிளத்தலும் **வழக்கியல் மரபே**" (தொல். 719)

"பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே" (தொல். 718)

என்ற நூற்பாக்களில் ஆசிரியன் வழுவமைதி வேண்டி இரக் கின்ருே? 'வழக்கியல் மரபே' எனவும் 'முடியுமன் பொருளே' எனவும் துணிவுபடச் சொல்லுதல் காண்க. பல இலக்கணக் கொள்கை குறித்த இடைக்கால உரையாசிரியங்களைத் தழுவு வோமேயாயின், அவனும் அவளும் வந்தனர், யானையும் குதிரை யும் வந்தன, யானும் நீயும் செல்வோம் என்ற தொடர் களும் ஆகுபெயர், அன்மொழித் தொடர்கள் குறிப்பிற் பெறப் படும் தொடர்களும் தமிழ்த்தாயின் சுண்டுவிரல் நகம் தவிர, எல்லாம் வழுவமைதிகளாய், தொல்காப்பிய நூல் வழுவாய் மருங்கிற் கழுவாய் கூறும் பொத்து நூலாய் முடியும். அவன் வந்தான் வழாநிலை; அது வந்தது வழா நிலை; யான் வந்தேன் வழாநிலை; நேற்று வந்தாய் வழாநிலை; சாத்தா உண்டியோ வழாநிலை; இடையன் மாடு மேய்த்தான் வழாநிலை என்று சில

தொடர்களே தமிழின் மிச்சங்கள் ஆகும். செல்வங்கள் ஆகும். ஆதலின், தமிழ் இலக்கணக் கொள்கைகளை ஆராய முயலுநர் உரையாசிரியர்களைக் கடந்துத் தொல்காப்பியத்தின் தமிழியங்களைக் கண்டெடுக்க முற்படுவார்களாக.

மயக்கம் என்ற பண்டைச் சொற்கு, வழு என்ற இடைக் காலப் பொருள் கொண்டதனால் ஆயிரம் ஆண்டுகளாக ஏற்பட்ட இலக்கணத் திருப்பங்களையும் நெறியல்லா நெறிகளையும் தொடக்கமாக இக்கட்டுரையிற் காட்டினேன். இலக்கண நெறிஞர்கள் இத்தடத்தின்வழி மேலும் ஏகுவாராயின், சொல்லதிகாரத்திலே யன்றிப் பொருளதிகாரத்திலும் உரையாசிரியர்கள் வழுவமைதிகள் என்று எழுதியவற்றை நூற்பா தோறும் மீண்டும் ஆராய முந்துவர் என்பது என் எதிர்பார்ப்பு. அங்ஙனம் ஆராயின் ஆராய்ச்சித் தடம் செந்நிலப் பெருவழியாவதோடு வழுவில்லாத தொல்காப்பியப் பார்வையும் பெற்றவர்கள் ஆவோம். தொல்காப்பியப் பார்வை என்பது என்னை? தமிழ்ப்பார்வை.

# 14

# கருமொழியும் கருவிமொழியும்

அ. காமாட்சிநாதன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

'A Generative Grammar of Tamil' என்பது ஓர் இலக்கணம்[1]. இந்த இலக்கணம் எந்த மொழியில் எழுதப்பட்டுள்ளது? ஓங்குபுகழ் ஆங்கிலத்தில். எனவே, ஆங்கிலம் இந்த இலக்கணத்திற்குக் கருவிமொழி (The Language of Description or the Metalanguage). அடுத்து, எந்த மொழிக்காக இந்த இலக்கணம் எழுதப்பட்டுளது? தண்ணார் தமிழ்மொழிக்காக. எனவே தமிழ் இந்த இலக்கணத்திற்குக் கருமொழி (The Language under Description or the Language). இவ்வாறு ஒவ்வோர் இலக்கணத்திற்கும் 'கருமொழி' என்றும் 'கருவிமொழி' என்றும் இரண்டு வகையான மொழிகள் உள. இவை இரண்டும், அஃதாவது கருமொழியும் கருவிமொழியும் மேற்காட்டிய இலக்கணத்திற்கு அமைந்தமை போன்று ஒரு தொடர்பும் இல்லாத வெவ்

1. Agesthialingom, 1967.

வேறு வகையான மொழிகளாகவும் இருக்கலாம்; அல்லது ஒரே ஒரு மொழியாகவும் இருக்கலாம் வெவ்வேறு வகையான மொழிகளைக் கருமொழியாகவும் கருவிமொழியாகவும் கொண்டு எழுதப்பட்ட இலக்கணங்களை இருமொழி இலக்கணங்கள் என்று அழைக்கலாம். ஒரே ஒரு மொழியை மட்டும் கருமொழியாகவும் கருவிமொழியாகவும் கொண்டு எழுதப்பட்ட இலக்கணங்களை ஒருமொழி இலக்கணங்கள் என்று அழைக்கலாம். திராவிட மொழிகளுக்கு இருமொழி இலக்கணங்கள் பெரும்பாலும் மேனாட்டவர் கூட்டுறவுக்குப் பின்னர்த் தோன்றின என்றாலும் கவின்மலையாளமொழிக்கு இருமொழி இலக்கணமொன்று மேனாட்டவர் கூட்டுறவுக்கு முன்னரே தோன்றியுளது. அதன் பெயர் லீலாதிலகம். அதன் காலம் கி. பி. 15-ஆம் நூற்றாண்டு. இந்த இலக்கணத்தின் கருமொழி மலையாளம்; கருவிமொழி வடமொழி.[2] தமிழ்மொழிக்கு இது போன்ற இருமொழி இலக்கணங்கள் மேனாட்டவர் வருகைக்குப் பின்னர்த்தான் எழுந்தன.[3] ஒல்காப்பெருப்புகழ்த் தொல்காப்பியம் (கி.மு. முதல் நூற்றாண்டுக்குப் பிந்தியது),[4] பொன்னூல்போல்ப் புகழப்படுகின்ற நன்னூல் (கி.பி. 13-ஆம் நூற்றாண்டு)[5] முதலிய தமிழிலக்கணங்கள் எல்லாம் ஒரே மொழியையே கருமொழியாகவும்

2. Chatterji, 1968 ப. 33,
3. Beschi, 1828; 1848.
4. Burrow, 1968; ப. 40, 41.

தொல்காப்பியர் காலத்தின் மேல் எல்லை கி. மு. முதல் நூற்றாண்டுக்குப் பின்னர் என்பதைத் தென் திராவிடமொழிகளில் ஏற்பட்டுள்ள க > ச ஒலிமாற்றத்தின் அடிப்படையில் நிறுவலாம். தொல்காப்பியத்தில் மேற்கூறிய க > ச ஒலிமாற்றத்தினால் உண்டான சொற்களே உள்ளன. சிதர் 134; சிதல் 1529; சில் 1600; சில 653; சிலைத்தல் 841; சிறு 562; சினன் 1191; சீர்த்தி 796; செம் 769; செரு 260; செய் 1092; செவி 1036; செறி 830; சிறை 1009; சேரி 983. க > ச என்ற ஒலிமாற்றத்துக்கு உட்படாத ககரம் வந்த திராவிடமொழிச் சொற்களைப் பயன்படுத்திய வடமொழி ஆசிரியர்களில் காலத்தால் மிகவும் பிற்பட்டவர் பதஞ்சலி. அவர் காலம் கி. மு. 150 (தமிழ்ச்சுடர் மணிகள், பக். 48).

5. வையாபுரிப்பிள்ளை, 1960. ப. 185.

கருவிமொழியாகவும் கொண்டு எழுதப்பட்ட ஒருமொழி இலக்கணங்களாகும்.

மேல்க்கூறிய இருவகை இலக்கணங்களில், இருமொழி இலக்கணங்களில் எழாத சிக்கல்கள் சில, ஒருமொழி இலக்கணங்களில் எழுவதற்கு வாய்ப்புண்டு. இருமொழி இலக்கணங்களில் கருமொழி வேறு; கருவிமொழி வேறு; கருமொழியும் கருவிமொழியும் ஒன்றுக்கு ஒன்று தொடர்பற்றவை. ஆனல் ஒருமொழி இலக்கணங்களில் உள்ள நிலைமை அங்கனமன்று. ஒருமொழி இலக்கணங்களில் கருமொழியும் கருவிமொழியும் ஒரே மொழிதான் உதாரணமாகத் தொல்காப்பியத்தையும் நன்னூலையும் கூறலாம். இவ்விரண்டு இலக்கணங்களும் தமிழ்மொழியில் தமிழ்மொழிக்காக எழுதப்பட்டவை. இவற்றைப் போன்று ஒரே மொழியையே கருவாகவும் கருவியாகவும் பயன்படுத்தி எழுதப்படுகின்ற இலக்கணங்களில் கூறப்படுகின்ற இலக்கண விதிகள் கருவாகப் பயன்படுகின்ற (கரு)மொழிக்கு மட்டுமன்றிக் கருவியாகப் பயன்படுகின்ற (கருவி)மொழிக்கும் பொருந்துவனவாக இருக்க வேண்டும். ஆனல், தொல்காப்பியம், நன்னூல் ஆகிய இலக்கணங்களில்க் காணப்படும் நிலைமை அங்கனமில்லை. தொல்காப்பியம் நன்னூல் என்னும் ஒருமொழி இலக்கணங்களின் கருமொழியையும் கருவிமொழியையும் ஒப்பிட்டு ஆராயும் பொழுது கருமொழிக்குக் கூறப்பட்டுள்ள இலக்கண விதிகளுக்கு உட்படாமலும் பொருந்தாமலும் உள்ள சில இலக்கணக் கூறுகள் கருவிமொழிகளில்க் காணப்படுகின்றன. அஃதாவது கருவிமொழிகளில் பயன்படுத்தப்பட்டுள்ள சில இலக்கணக் கூறுகளுக்கு இலக்கணங்களில் விதிகள் இல்லை என்பதாகும்.[6] எடுத்துக் காட்டாகத் தொல்காப்பியத்தில் தொல்காப்பிய இலக்கணவிதி

6. யாப்பருங்கலக்காரிகையில் காரிகை செய்யப்பயன்படுத்தப்பட்ட, கட்டளைக் கலித்துறைப்பாவுக்குக் காரிகையில் இலக்கணம் கூறப்படவில்லை. அமிர்தசாகரர், 1958. யாப்பருங்கலக்காரிகை, கழகப் பதிப்பு.

களுக்கு உட்படாத கருவிமொழிக் கூறுகளில் சிலவற்றை முதலில் காண்போம்.

தொல்காப்பியத்தில் பலவின்பாலுக்குரிய விகுதிகளாக 'அ, ஆ, வ' என்பன கூறப்பட்டுள்ளன.

"அ, ஆ, வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே" (தொல். 492)

"அ, ஆ, வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை" (தொல். 701)

மேல்ச் சூத்திரங்களில் கூறப்பட்ட 'அ, ஆ, வ' என்னும் மூன்று விகுதிகளோடு 'ப' என்னும் விகுதியும் பலவின்பாலுக்குத் தொல்காப்பியச் சூத்திரங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"எழுத்து எனப்படுப
. . . . . . முப்பஃது என்ப" - (தொல். 1)

"விளி எனப்படுப" (தொல். 603)

"சொல் எனப்படுப" (தொல். 643)

இவ்வாறு 'ப' என்பதும் பலவின்பாலுக்குரிய விகுதியாக வரும் என்பதற்குத் தொல்காப்பியத்தில் விதி இல்லை.

தொல்காப்பியர் 'காலங்கள் மூன்று' என்றும் 'அவை இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்' என்றும் கூறுகிறார்.

"காலம் தாமே மூன்று என மொழிப" - (தொல். 684)

"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம் முக்காலமும்..." (தொல். 685)

இவ்வாறு தொல்காப்பியர் மூன்று காலங்களைக் குறித்ததோடு அமைந்தாரே அன்றி, அந்தக் காலங்களுக்குரிய விகுதிகள் இவை இவை என்று தம் சூத்திரங்களில்க் குறித்தார் இல்லை. இதற்கு விதிவிலக்காக 'உம்' என்பது நிகழ்காலவிகுதியாகப் பயன்படுத்தப்படும்' என்பதை மட்டும் குறித்துள்ளார்.

"... ... ... நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவி ... ... ..." (தொல். 712)

இத்தகைய முக்கால விகுதிகளைக் கருமொழிக்குச் செய்த இலக்கணச் சூத்திரங்களில் கூறுவிட்டாலும் இந்த மூன்று காலங்களில் நிகழ்காலம் தவிர ஏனைய இரண்டு காலங்களாகிய இறந்தகாலம் எதிர்காலம் ஆகியவற்றுக்குரிய விகுதிகளை ஆசிரியர் நிரம்பக் கருவிமொழியால் ஆகிய சூத்திரங்களில் பயன்படுத்தியுள்ளார்.

**இறந்தகாலம்**

"கண்ணினர்" (405); "கூறிற்று" (590); "செய்து"(713); "கண்ட"(7); "ஈன்று"(859); "ஒத்தன" (25); "இட்ட"(103); "பெற்றன்று"(27); "தக்க"(270);"திரிந்து"(17);"நிலை இ"(83).

**எதிர்காலம்**

"உணருமோரே" (193); "குறுகும்" (188);
"ஒப்பர்" (1093); "மொழிப" (11).

தொல்காப்பியர் 'ஒடு' என்ற உருபோடு 'ஓடு' என்ற உருபினையும் பயன்படுத்தியுள்ளார். அவற்றைப் பயன்படுத்தும் பொழுது பெரும்பாலும் 'ஒடு' என்ற உருபை வருசொல் முதலில் மெய் வருகின்ற இடத்தும், 'ஓடு' என்ற உருபை வருசொல் முதலில் உயிர் வருகின்ற இடத்தும் தொல்காப்பியர் தம் சூத்திரங்களில் பயன்படுத்தியுள்ளார்.

**ஒடு**

"இசையொடு சிவணிய" (33); "ஙகரமொடு தோன்றும்" (29);
"உயிரொடு புணர்ந்த" (38); "நகரமொடு முதலும்" (67);
"எழுத்தொடு வருதல்" (63); "உப்பகாரமொடு ஞகாரையும்" (80).

ஒடு

"மெய்யோடு இயையினும்" (தொல். 10)

"அகரமோடு உயிர்த்தலும்" (தொல். 17)

"ஆவோடு அல்லது" (தொல். 65)

இங்கனம் 'ஒடு' என்ற உருபினையும் ஆசிரியர் பயன்படுத்திய போதிலும் அதற்குத் தொல்காப்பியத்தில் விதி எதுவும் இல்லை; இருப்பதெல்லாம் 'ஓடு' என்ற உருபிற்கேதான்.

" மூன்றுருகுவதே,
ஒடு எனப்பெயரிய வேற்றுமைக்கிளவி" (தொல். 557)

மேலும் 'ங்' என்ற இடைநிலை (செய்குந-735), வினையாலணையும் பெயர் (உணர்ந்தோர்–950, உணருமோர்–193), தொழிற்பெயர் (அகற்சி–1105), எதிர்மறை (இரட்டாது-80; வாரா–724) ஆகியவற்றைத் தமது சூத்திரங்களில்க் கையாண்ட போதிலும் தொல்காப்பியர் அவற்றுக்குத் தம் சூத்திரங்களில் விதி செய்தார் இல்லை.

தொல்காப்பியத்திற்கு அடுத்த நிலையில் வழங்கப்படுகின்ற இலக்கணம் நன்னூலாகும். இந்த இலக்கணத்தில் ஒரே மொழியே கருமொழியாகவும் கருவிமொழியாகவும் பயன்படுத்தப் பட்டுள்ளது. இந்த ஒருமொழிஇலக்கணமாகிய நன்னூலின் கண்ணும் கருவிமொழிகளில்க் காணப்படுகின்ற சில இலக்கணக் கூறுகளுக்கு விதிகள் இல்லை. எடுத்துக்காட்டாகச் சில காண் போம்.

" இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும்; விதவாதன மன்னே" (நன். 165)

இந்த நன்னூல்ச் சூத்திரத்தின்படி நிலைமொழி (நிறுத்தசொல் - தொல். 108,110) ஈற்றின்கண் உயிர்எழுத்து வந்து நிற்க, வருமொழி (குறித்துவருகிளவி - தொல்.108,110) முதலில் க,ச,த,ப,

என்னும் வல்லெழுத்துக்கள் வந்தால் அவை க்க, ச்ச, ப்ப என்று இரட்டிக்கும் என்பதாகும்.

உதாரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மு | + | குடை | → | முக்குடை | (நன். 258) |
| பொது | + | சொல் | → | பொதுச்சொல் | (நன். 268) |
| மு | + | தகுதி | → | முத்தகுதி | (நன். 267) |
| சினை | + | பெயர் | → | சினைப்பெயர் | (நன். 282) |

நிலைமொழி ஈற்றில் உயிர் எழுத்து வந்து நிற்க, வருமொழி முதலில் க, ச, த, ப ஆகிய வல்லெழுத்துக்களைப் போல ற, ட என்னும் வல்லெழுத்துக்களும் வருமா? வந்தால் இரட்டிக்குமா? இரட்டித்தால் அதற்கு விதி உண்டா?

நிலைமொழி ஈற்றில் உயிர் எழுத்து வர, வருமொழி முதலில் டகரம் வந்து பின் 'ட்ட்' என்று இரட்டித்து வந்துளதற்கு நன்னூலில் சான்றுளது.

"வரட் டறவும்" (நன். 227)

இதே போன்று றகரமும் உயிர் எழுத்துக்கு முன்னர் வந்து இரட்டிக்க இடம் உண்டு. அதற்கு நன்னூலில்ச் சான்று கிடைக்காவிட்டாலும் அதனை ஊகிக்கலாம். இங்கனம் நிலைமொழி ஈற்று உயிர்எழுத்துக்கு முன் டகரமும் றகரமும், வருமொழி முதலில் வந்து 'ட்ட்' என்றும் 'ற்ற்' என்றும் இரட்டிப்பதற்கும் சேர்த்து மேல்க்காட்டிய சூத்திரத்திலேயே (165) இடம் ஏற்படுத்தலாம். அதற்குச் சூத்திரத்தில் ஒரு பகுதியை மட்டும் சிறிது மாற்றி அமைத்தால் போதும். அஃதாவது, க, ச, த, ப என்பதற்குப் பதில் வல்லினம் என்ற சொல்த்தொடரைச் சூத்திரத்தில் பெய்தால்ப் போதும்.

"இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
வல்லினம் மிகும்; விதவாதன மன்னே"

இவ்வாறு க ச த ப என்று ஒவ்வொரு வல்லின எழுத்தாகக் குறிப்பிட்டுச் சொல்லாமல் வல்லினம் என்று பொதுப்படையாகக் குறிப்பதனுல் நிலைமொழி ஈற்று உயிர் எழுத்துமுன் க ச த ப ஆகிய நான்கு வல்லெழுத்துக்கள் மட்டுமன்றி ட, ற ஆகிய வல்லெழுத்துக்கள் வந்தாலும் அவையும் க ச த பக்கள் போன்றே 'ட்ட்' என்றும் 'ற்ற்' என்றும் இரட்டிக்கும் என்பது சூத்திரத்துக்குப் பொருளாகிவிடும். க ச த ப என்பனவற்றை மட்டும் குறிப்பதற்கு வல்லினம் என்ற பொதுச் சொல்லை ஆசிரியர் பவணந்தியாரே பிற இடங்களில்க் கையாண்டுள்ளார்.

"ண ன **வல்லினம்** வர" (நன். 209)

"கீழின்முன் **வன்மை** விகற்பமும் ஆகும்" (நன். 226)

"**வலி** வரின் இயல்பும்" (நன். 229)

இவ்வாறு ஆசிரியர் பவணந்தியார் க ச த ப ஆகியவற்றை மட்டும் குறிக்க வலி, வல்லினம், வன்மை போன்ற பொதுப் பெயர் களைத் தம் சூத்திரங்களில்ப் பயன்படுத்தியுள்ளமை நோக்கத் தக்கது [7] என்றாலும் நாம் வலி முதலிய பொதுப் பெயர்கள் க, ச, த, ப ஆகியவற்ரேடு 'ற, ட' என்பவற்றையும் குறிப்பதாகக் கொள்ளலாம். அவ்வாறு கொள்வதால் உயிர் எழுத்துமுன் வந்த 'ற்ற், ட்ட்' என்ற சந்தி மாற்றங்களை மட்டுமன்றிப் பிற எழுத்துக்களின் முன்னும் றகரமும் டகரமும் வந்து பின்னர்ச் சந்தி பெற்றுள்ளதையும் சூத்திரத்துள் அடக்க வழி ஏற்படும். காட்டாக ஒன்று பார்ப்போம்.

---

7. தமிழிலக்கண ஆசிரியர்கள் தமிழ்ஒலிகளை ஒலிப்பு (Articulatory)-முறைப்படி விளக்கிய போதிலும் அவற்றுக்குப் பெயர்கள் தரும்போது மட்டும் ஒலியியக்க (Acoustics) முறையைக் கையாண்டுள்ளனர். கசடதபற என்னும் மெய்யெழுத்துக்களுக்கு ஒலிப்புமுறைப் பெயர் நிறுத்தமெய் (stop consonants) என்பது; ஒலியியக்க முறைப் பெயர் வல்லினம் (Hard Sounds) என்பது. கிரேக்க இலக்கண ஆசிரியர் களும் இலத்தீன் இலக்கண ஆசிரியர்களும் தத்தம் மொழிகளில் ஒலி களை விளக்கும் போதும் அவற்றுக்குப் பெயரிடும் போதும் ஒலியியக்க முறையையே கையாண்டுள்ளனர் (Robins, 1967, ப. 141).

லகரமும் ளகரமும் வருமொழி முதலில் வல்லினம் வந்தால் றகரமாகவும் டகரமாகவும் ஆகும் என்பது நன்னூல் விதி (227). இங்கே லகர ளகரங்கள் கசதப என்பவற்றிற்கு முன் வந்தால்மட்டும் றகரமாகவும் டகரமாகவும் மாறும் என்பது வழக்கமாகச் சூத்திரத்துக்குக் கூறும் பொருளாகும். அவ்வாறாயின் லகரம், ளகரம் ஆகியவற்றுக்குமுன் றகரமும் டகரமும் வந்தால் அப்பொழுது ஏற்படுகின்ற சந்திமாற்றத்துக்கு இந்தச் சூத்திரத்திலே விதி இல்லாமல்ப் போய்விடும். அதற்கேற்ப நன்னூலின்கண்ணே லகரத்திற்குமுன் றகரம் வந்து உண்டாய 'ற்ற்' என்ற சந்தி மாற்றமும், ளகரத்திற்கு முன் டகரம் வந்து உண்டாய 'ட்ட்' என்ற சந்திமாற்றமும் வந்துள்ள இடங்கள் நன்னூல்ச் சூத்திரங்களில்க் காணப்படுகின்றன. அவை பின் வருகின்றன

"வேற்றுமையிற்றடவும்" (< வேற்றுமையில் + ற் + றடவும்) (நன். 227)

"குற்றுகரங்களுட்டற" (< குற்றுகரங்களுள் ட் + டற) (நன். 183)

இங்கனம் ல் + ற் + ற் → ற்ற், ள் + ட் + ட் → ட்ட் என்ற சந்தி மாற்றங்களுக்கும் சேர்த்து விதி 227-ஆம் சூத்திரத்தில் உள்ளது. அதற்குக் காரணம், 'இயல்பினும் விதியினும்' என்ற சூத்திரத்தில் க, ச, த, ப என்று குறிப்பிட்டுக் கூறியது போலன்றி 'வலி' என்று பொதுப்படையாக 227-ஆம் சூத்திரத்தில்க் கூறியதே ஆகும்.

"ல ள வேற்றுமையிற் றடவும், அல்வழி
அவற்றோடு உறழ்வும் வலிவரின் ஆம்" (நன். 227)

இவ்வாறே 'இயல்பினும் விதியினும்' என்ற சூத்திரத்திலும் க, ச, த, ப என்று குறிக்காமல் பொதுப்படையாக வல்லினம் என்று கூறியிருந்தால் 'வரட்டறவும்' என்ற தொடரில் உள்ள டகர முதன்மொழிச் சந்திக்கும் அந்தச் சூத்திரத்தில் விதி ஏற்பட்டிருக்கும்.

மற்றொரு குறிப்பும் இங்கே கூற வேண்டியுள்ளது. தொல்காப்பியர் டகர மெய்யும் றகரமெய்யும் தம்மைக் குறித்து வருகின்ற பெயர்களில் மட்டும் சொற்களுக்கு முதலில் வரும் என்று கூறுகிறார்.

"முதலா ஏன தம் பெயர் முதலும்" (தொல்.66)

தொல்காப்பியர் இங்ஙனம் விதி செய்தவாறே தம் சூத்திரங்களில் டகரத்தையும் றகரத்தையும் அவற்றின் பெயர்களில் மட்டுமே சொல்முதல் எழுத்தாகப் பயன்படுத்தி உள்ளார். "றஃகான்" (தொல். 94), "ரகரம்" (தொல். 442), "டகரம்" (தொல். 303) றகரமும் டகரமும் தம் பெயர்களில் மட்டுமன்றி வேறு சில விகுதிகளிலும் சொல்முதலில் வருகின்றன. அவை யாவன தன்மை ஒருமை விகுதிகள்:- (கு, து) டு, று; தன்மைப் பன்மை விகுதிகள்: (கும், தும்) டும், றும் ஒன்றன்பால் விகுதிகள்:- (து) டு, று. இந்த விகுதிகளைத் தொல்காப்பியரும் குறிப்பிடுகிறார்; நன்னூலாரும் குறிப்பிடுகிறார். (உண்மையில் று(ம்), டு(ம்) என்பன து(ம்) என்பதன் சந்தி மாற்றங்களே). ஆனால் அவற்றைத் தத்தம் சூத்திரங்களிலே குறிக்கின்ற முறையில் தொல்காப்பியர் ஒரு முறையையும் நன்னூலார் தொல்காப்பியரின் முறையோடு பிறிதொரு முறையையும் கையாள்கின்றனர். தொல்காப்பியர் று(ம்), டு(ம்) என்னும் விகுதிகளை அப்படியே று(ம்), டு(ம்) என்று தம் சூத்திரங்களில்க் குறிக்கவில்லை. காரணம், அவ்வாறு குறித்தால் அவர் சொல்லிய 'முதலா ஏன தம்பெயர் முதலும்' (66), என்ற விதிக்கு முரண்பாடாகிவிடும். அதனால் அவற்றை நீண்ட தொடர்களால் கு(ம்), து(ம்) ஆகியவற்றோடு சேர்த்துக் கீழ்வருமாறு குறிக்கின்றார்.

"ஒன்றறி கிளவி த ற ட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி ஆகும்" (தொல். 491)

"ஒன்றன் படர்க்கை த ற ட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி ஆகும்" (தொல். 702)

"க ட த ற என்னும்
அந்நான்கு ஊர்ந்த குன்றியலுகரம்" (தொல். 683)

"உம்மொடு வரூஉம் கடதற என்னும்
அந்நாற் கிளவி ... ... ... (தொல். 687)

இங்கு ஓர் ஐயம் எழலாம். அவ்வையம் பின் வருமாறு:-

'றகரமும் டகரமும் மட்டும்தானே தம் பெயர் அல்லாத இடங்களில் சொல் முதலில் வரக்கூடாது; பிற ககரமும் தகரமும் தம்பெயர் அல்லாத இடங்களிலும் சொல்முதலாக வரலாமே; ஆசிரியர் கூட நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' என்பதனை அவ்வாறே சூத்திரங்களில்க் கையாண்டுள்ளாரே?

"நான்காகுவதே
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (தொல். 559)

"குத் தொக வரூஉம் கொடை எதிர் கிளவி" (தொல். 583)

அவ்வாறிருக்க அவற்றாலாய கு(ம்), து(ம்) ஆகிய விகுதிகளை யும், ஏன் டு(ம்), று(ம்) என்னும் விகுதிகளோடு சேர்த்துத் தொடர்களால்க் கூற வேண்டும்? என்ன செய்வது? அரச மரத்தைப் பிடித்த சனியன் அங்கே உள்ள பிள்ளையாரையும் பிடித்தமாதிரிதான்.

நன்னூலாரும் தொல்காப்பியரைப் பின்பற்றிச் சொல் முதலில் வாராத மெய்கள் தம் பெயர் கூறுகையில் மட்டும் சொல் முதலில் வரும் என்று கூறத் தவறவில்லை.

"தம்பெயர் மொழியின், முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப" (நன். 121)

என்றாலும் நன்னூலார் இதனை நடைமுறையில்க் கையாளவில்லை. று(ம்), டு(ம்) ஆகிய விகுதிகளைத் தொல்காப்பியர் போல நீண்ட தொடர்களால் மட்டும் குறிப்பிடவில்லை. அவற்றை 'று' என்றும் 'டு' என்றும் இட்டதவாறே தம் சூத்திரங்களில்ப் பயன்படுத்தி யுள்ளார்.

"து று டுக் குற்றியலுகர ஈற்ற" (நன். 328)

"கு டு து று என்னும் குற்றியலுகரமோடு" (நன். 331)

"உம் ஊர் கடதற" (நன். 332)

அது மட்டுமன்று. தொல்காப்பியர் 'டு' என்னும் விகுதியை எப்படி ஒரு பெயர்ச்சொல் போலத் தம் சூத்திரங்களில் பயன் படுத்தியுள்ளாரோ (தொல். 582) அதேபோல நன்னூலாரும் 'டு' என்னும் விகுதியை ஒரு பெயர்ச்சொல் போலத் தம் சூத்திரங் களில்ப் பயன்படுத்துகின்றார்.

"ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பின் ஆகும்" (நன். 328)

இதனால் றகரமும் டகரமும் நன்னூலில் தம் பெயர்களைக் குறிக்கும் இடத்து மட்டுமன்றிப் பிற இடங்களிலும் சொல் முதலில் வருகின்றன; அதோடு சொல்முதலில் அகரத்திற்கு முன் மட்டுமன்றி உகரத்திற்கு முன்னரும் டு பயின்றுவருகிறது. இது தமிழ் மொழியின் ஒலியியல் வரலாற்றில் (Phonological history) காலப்போக்கில் ஏற்பட்ட மாறுதலைக் குறிக்கின்றது போலும்.

தனிப்பட்ட குறுகிய குறிகளையும் சுருங்கிய பெயர்களையும் கையாளாமல் பொதுப்படையான குறிகளையும் பெயர்களையும் கையாண்டு செய்யப்படுகின்ற சூத்திரங்கள் விஞ்ஞானக் கொள்கைகள் போன்று சிறந்து தோன்றும். அத்தகைய விஞ்ஞான முறைப்படி அமைந்த சூத்திரங்களால் இலக்கணங் களுக்கு ஏற்படுகின்ற நன்மைகள் மிகச் சிறந்தனவாகும். விஞ் ஞான முறையில் அமைந்துள்ள சூத்திரங்களுக்குள் மிகப் பல வாய இலக்கணக்கூறுகள் அடங்கும். அந்தச் சூத்திரங்களுக்குப் பயன்படுத்தப்பட்ட மொழிக்கூறுகளை மட்டுமன்றி இனிப்பயன் படுத்த முடிகின்ற மொழிக் கூறுகளையும் உள்ளடக்கி விதி அமைக்கின்ற வன்மை உண்டு. இத்தகைய சிறப்புமிக்க

சூத்திரங்களின் காரணமாக அவற்றாலாய இலக்கணங்கள் உள்முரணின்றி ஒளி பெற்றுத் திகழும்.[8]

இதற்கு மாறாக ஒரே மொழியையே கருமொழியாகவும் கருவிமொழியாகவும் கொண்டு இலக்கணம் செய்திருந்தாலும் 'கருமொழி வேறு கருவிமொழி வேறு' என்றும் 'அவை ஒன்றுக் கொன்று தொடர்பற்றவை' என்றும் 'இலக்கணம் என்பது கரு மொழிக்கே அன்றிக் கருவிமொழிக்கன்று' என்றும் 'கருமொழிக் குரிய இலக்கணத்தில் உள்ள விதிகள் கருவிமொழிக்கும் பொருந்த வேண்டிய நியதி இல்லை' என்றும் சிலர் வாதிப்பர்.[9] அவர் கூற்றுப் பொருந்தாது என்பதை ஓர் உதாரணத்தின் மூலம் நிறுவலாம்.

1947-ஆம் ஆண்டிற்குமுன் இந்தியாவை வெள்ளைக்காரர்கள் ஆண்டார்கள். அப்பொழுது வெள்ளைக்காரர்கள் இந்தியாவுக்

---

8. "Scientific theories are marked not only by freedom from internal contradiction but also by maximal cohesion with other branches of knowledge, maximal validity in coverage of known data, and maximal elegance of statement. Freedom from internal contradiction is required for making predictions, for from contradictory statements any assertion may be deduced. Cohesion with other theories is required so that contradictions will not appear in the areas of overlap of data. Maximal coverage is desirable because it is the very purpose of scientific theories to explain by means of generalizations our understanding of particular events and our intuitive perception of their interrelations. Elegance or simplicity of statement compensates for the inevitable limitations on validation which are entailed by finite size of the corpus of data available to us at any time; it may be thought of as a measure of the degree of generality achieved". Lees 1958, Page. 376.

9. "'Pāṇini has shown that the language under description and the language of description differ fundamentally in certain respects so that the upadesa is an unreal abstraction of the reality' Misra, 1966, ப. 129 பாணினி என்பவர் கருமொழியும் கருவிமொழியும் தம்முட்பெரிதும் வேறு பட்டவை என்று கருதினார் என்பதற்குப் பாணினியத்திலிருந்து சான்று எதுவும் மிசிரா என்பவரால் காட்டப்படவில்லை.

குரிய சட்டங்களை இயற்றும் பொழுது தங்களை விலக்கிக் கொண்டு இந்தியர்களுக்கு மட்டும் பொருந்தவல்ல சட்டங்களைத் தான் இயற்றினார்கள். அதனால் வெள்ளைக்காரர்கள் இயற்றிய சட்டங்களுக்குக் கட்டுப்படவேண்டியவர்கள் இந்தியர்களே அன்றி வெள்ளைக்காரர்கள் அல்லர். ஏன்? அன்று ஆண்டவர்கள் வெள்ளைக்காரர்கள்; ஆளப்பட்டவர்கள் இந்தியர்கள். ஆனால் அந்த நிலைமை வெள்ளைக்காரர்கள் 1947-இல் இந்தியாவை விட்டு வெளியேறிய பின்னர் இந்தியாவில் இல்லை. 1947-க்குப் பின்னர் இந்தியாவில் ஆள்வோரும் ஆளப்படுவோரும் ஒருநாட்டு மக்களே. அதனால் ஆள்கின்ற மக்கள்பிரதிநிதிகள் சட்டங்களை இயற்றும் பொழுது அவை ஆளப்படுகின்ற நாட்டுமக்களுக்கு மட்டுமின்றித் தமக்கும் பொருந்தி வருமாறுதான் சட்டங்களை இயற்றி வருகின்றார்கள். அதுபோல ஒருமொழியையே கருமொழியாகவும் கருவிமொழியாகவும் பயன்படுத்தி இலக்கணம் எழுதும்பொழுது அந்த இலக்கணத்தில் கருமொழிக்கு மட்டுமன்றிக் கருவி மொழிக்கும் பொருந்தி வருகின்ற விதிகளை அமைத்தல் வேண்டும்.

**மேற்கோள் நூல்கள் :**

Agesthialingom, S. 1967. A Generative Grammar of Tamil, Annamalainagar.

Beschi, C. 1828. A Grammar of the High Dialect of the Tamil Language, Madras. 1848. A Grammar of the Common Dialect of the Tamil Language, Madras.

Burrow, T 1968. Collected Papers on Dravidian Lingui stics, Annamalainagar.

Chatterji, S. K. 1968, Languages and Literatures of Modern India, Calcutta.

Lees, R, B. 1958, Review of Syntactic Structures in Language, Vol. 33

Misra, V. N. 1966. The Descriptive Technique of Pāṇini, the Hague.

Robins, R. H. 1967. A Short History of Linguistics, London.

வையாபுரிப் பிள்ளை, ச. 1968. தமிழ்ச்சுடர் மணிகள், சென்னை.

# 15

# இடைச்சொல்: தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம்-ஒப்பாய்வு

தா. ஏ. ஞானமூர்த்தி
கோயம்புத்தூர்

சொற்கள் பெயர், வினை என இரண்டு வகைப்படும். இவற்றை ஆக்குதற்குப் பெரும்பாலும் இடைச்சொற்களும் உரிச்சொற்களும் உறுப்புக்களாக அமைகின்றன.

ஒரு சொல்லின் வேர்ச்சொல் உரிச்சொல் எனலாம். அச்சொல்லின் மற்ற உறுப்புக்கள் இடைச் சொற்களாகும். சான்றாக, 'இசைத்தான்' என்ற சொல்லில் 'இசை' என்பது வேர்ச்சொல் அல்லது உரிச்சொல்; 'த்', 'ஆன்' ஆகியவை இடைச்சொற்கள்.

"சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே" (தொல். 643)

"இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப" (தொல். 644)

என்ற நூற்பாக்களினின்றும் இவ்வுண்மை புலனாகின்றது.

இடைச் சொற்களுக்குத் தாமாகவே தனித்தியங்கும் தன்மையில்லை. அவை பெயர், வினை ஆகிய சொற்களின் இடமாகவே வரும். எனவே அவைகள் இடைச் சொற்களெனப் பெயர் பெற்றன எனலாம். பெயர், வினை இவற்றின் இடையே வருதலின் இடைச்சொல் என்றும் கூறுவர்.[1] பெயர், வினை இவைகளுக்கு முன்னும் பின்னும் இடைச் சொற்கள் வருவதுண்டு. பெரும்பாலும் சொல்லுக்கு இடையே வருதலால் இடைச்சொல் என்றனர் என்று நாம் கொள்ளலாம்.

இடைச்சொல்லுக்கெனத் தனிப்பொருளில்லை அது பெயரைச் சார்ந்து வருங்கால் பெயரின் பொருளையும், வினையைச் சார்ந்து வருங்கால் வினையின் பொருளையும் தருவதாகும்.

இடைச் சொற்கள் ஏழு இயல்புடையவை என்பர் தொல்காப்பியர். அவையாவன,

1. இரண்டு சொல் புணருமிடத்து சாரியையாக வருதல்,
2. வினைச் சொல்லிடத்துக் காலப பொருளுணர்த்தி வருதல்,
3. வேற்றுமை உருபுகளாய் வருதல்,
4. பொருளின்றிச் சொல்லோடு சார்த்திச் சொல்லப் படும் அசை நிலையாய் வருதல்
5. வேறு பொருளுணர்த்தாது இசை நிறைத்தலே பொருளாக வருதல்,

1. "இடையெனப்படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற்றியலுந் தமக்கியல் பிலவே" (தொல் 734)

6. குறிப்பால் பொருள் உணர்த்துவனவாக வருதல்,
7. உவம உருபுகளாய் வருதல்

என்பனவாம்.

நன்னூலார் இவ்வேழு இயல்புகளோடு "தத்தம் பொருள்" (நன். 420) என்பதையும் சேர்த்து இடைச்சொல் எட்டு வகைப்படும் என்கிறார். "தத்தம் பொருள" என்பதாவது, தத்தமக்குரிய பொருளை உணர்த்திவருவன என்று பொருள்படும். இசைநிறை, அசைநிலை என்பவை செய்யுளில் இசை நிறைத்தற்கும், அசைத்தற்கும் வருவனவேயன்றி அவற்றிற்கென வேறு பொருள் இன்மையால் அவற்றினின்றும் பொருள் உணர்த்தும் ஏனையவற்றைப் பிரித்தற்குத் "தத்தம் பொருள்" என்று நன்னூலார் இடைச்சொல்லைத் தனியாகக் கூறியிருக்கிறார். ஆனால் தொல்காப்பியர் அதனைக் 'குறிப்பு' என்பதனுள்ளே அடக்கி இடைச்சொற்களை ஏழு வகைப் படுத்திக் காண்கிறார் இசைநிறை, அசைநிலையைத் தவிர ஏனைய இடைச் சொற்கள் எல்லாம் பெயரையும் வினையையும் சார்ந்து பொருள் குறிப்பன வாகவே உள்ளமையால் "தத்தம் பொருள" எனத் தனிவகை யாக இடைச் சொல்லை வகைப் படுத்துவது பொருத்தமாகத் தெரியவில்லை. இலக்கண விளக்க ஆசிரியர் 'குறிப்பு' என்ற வகையைக் கூறாமல் 'தத்தம் பொருள' என்ற வகையைக் கூறி இடைச் சொற்களை ஏழுவகைப் படுத்துகிறார் (இ. வி 251). அவர் கருத்துப்படி தத்தம் பொருள் என்பது வெளிப்படை யாயும் குறிப்பாயும் பொருள் உணர்த்தும் இடைச் சொற்களைக் குறிப்பதாகும்

சொற்களின் இடையே சாரியை, விகுதிகள் முதலியவை வந்து அச் சொற்களின் பொருளைச் சிறப்பிக்கும் என்பதனைத் தொல்காப்பியர் "புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதவவும்"

2 தொல். 785

(தொல். 735) என்ற தொடரால் குறிப்பிடுகின்றார். இதனின்றும் சாரியைகளெல்லாம் பொருள் குறிப்பன என்று அவர் கருதுவ தாகத் தெரிகிறது. "ஆவின்கோடு", "அவற்றை", "அவை யத்துக் கொண்டான்", "பாணியாற் கொண்டான்" முதலிய தொடர்களில், 'இன்' ஆறாம் வேற்றுமைப் பொருளும் 'வற்று' பன்மைப் பொருளும் 'அத்து' ஏழாம் வேற்றுமைப் பொருளும் 'ஆன்' ஏழம் வேற்றுமைப் பொருளும் உணர்த்துவதைக் காண்க. இங்ஙனம் ஒருகால பொருள் உணர்த்திய சாரியைகளில் பல காலடைவில் பொருளிழந்து, வேற்றுமை விகுதிகள் முதலிய வற்றை இணைப்பதற்குத் துணையாக மட்டும் அமைவனவாயின என்று கொள்ளலாம்.

மேலே குறிப்பிட்ட எழுவகையான இடைச்சொற்களுள் சாரியைகளாக வருவனவற்றை வேற்றுமை இயலிலும், விகுதி களாக வருவனவற்றை கிளவியாக்கத்திலும் காலம் குறித்து வருவனவற்றை வினையியலிலும், வேற்றுமை உருபுகளை வேற்றுமை இயலிலும் தொல்காப்பியர் நன்கு விளக்கியுள்ளார். நன்னூலார் சாரியைகளை உருபு புணரியலிலும் விகுதிகளைப் பெய ரியல், வினையியலிலும் வேற்றுமை உருபுகளைப் பெயரியலிலும் காலம் குறித்து வருவனவற்றை வினையியலிலும் விளக்கியுள்ளார். உவம உருபுகளைத் தொல்காப்பியர் உவமயியலிலும் நன்னூலார் பொதுவியலிலும் விளக்கியுள்ளனர். மற்ற மூன்று வகை இடைச் சொற்களாகிய அசைநிலை, இசைநிறை, குறிப்பு ஆகிய மூன்றி னையும், தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம் ஆகிய மூன்று இலக்கண நூல்களும் இடையியலுள் விளக்குகின்றன. இம் மூன்றனுள்ளும் குறிப்பிற் பொருளுணர்த்தும் இடைச் சொற்களே மிகுதியாக உள்ளமையால் அவற்றைத் தொல் காப்பியர் முதற்கண் விளக்குகிறார்.

'மன்' என்ற இடைச் சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசை என்ற மூன்று பொருள்களைக் குறிக்கும் என்பர் தொல்காப்பியர்

(தொல். 737) நன்னூலார் இம் மூன்று பொருளோடு, அசை நிலை, மிகுதி, நிலைபேறு என்ற மூன்று பொருளையும் சேர்த்து அதற்கு ஆறு பொருள் குறிப்பிடுகின்றார் (நன். 432).

இலக்கண விளக்க ஆசிரியர் (263) 'மன்' என்பதற்குக் கழிவு, ஆக்கம், ஒழியிசை, அசைநிலை என்ற நான்கு பொருளைக் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியர் காலத்தில் கழிவு, ஆக்கம், ஒழியிசை என்ற மூன்று பொருள்களை மட்டுமே தந்த 'மன்' என்ற இடைச் சொல் நன்னூலார் காலமாகிய பதின்மூன்றும் நூற்றாண்டில் அசைநிலை, மிகுதி நிலைபேறு என்ற மூன்று பொருள்களையும் சேர்த்துத் தரலாயிற்று என்பது தெளிவாகிறது. சங்க காலத்திலேயே 'மன்' என்ற இடைச்சொல் 'நிலைபேறு' என்ற பொருளையும் குறித்தது என்பது "மன்னா உலகில் மன்னுதல் குறித்தோர்" (புறம் 165) என்ற புறநானூற்றடிகளிலிருந்து புலனாகிறது. இதனின்றும் தொல்காப்பியர் காலத்தில் இவ்விடைச்சொல்லுக்கு நிலைபேறு என்ற பொருள் இல்லை என்பது தெளிவு. ஆனால் பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கண விளக்கத்தில் இந்நிலைப்பேற்றுப் பொருளையும் மிகுதிப் பொருளையும் 'மன்' என்ற இடைச் சொல் இழந்துவிட்டதென்பது 'கழிவாக்கம் ஒழியிசை இசைநிலை' என்று நான்கு பொருளினையே அச்செல்லுக்குக் குறிப்பிட்டிருப்பதிலிருந்து தெரிகிறது.

'கொன்' என்ற இடைச்சொல் அச்சம், பயமின்மை, காலம், பெருமை, என்ற நான்கு பொருளையும் தருமென்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

> "அச்சம் பயமிலி காலம் பெருமையென்
> றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே" (தொல். 739)

ஆனால் இவ்விடைச் சொல்லை நன்னூலார் தம் இலக்கணத்தில் குறிப்பிடவில்லை. இதனால் அவர் காலத்தில் 'கொன்' என்ற

இடைச் சொல் வழக்கில் இல்லை என்பது தெரிகிறது. ஆனால் இலக்கண விளக்க ஆசிரியர் தம் இலக்கணத்தில் தொல்காப்பியர் கூறிய அதே நூற்பாவைக் கூறித் தொல்காப்பியரைப் போலவே நான்கு பொருள் உண்டென்பர் (இ. வி. 265) தொல்காப்பியர் காலத்தில் நான்கு பொருள்களைக் குறிப்பிட்ட 'கொன்' இடைச் சொல் நன்னூலார் காலத்தில் வழக்கிழந்து மீண்டும் பதினேழாம் நூற்றாண்டில் வழக்குப்பெற்றிருக்குமா என்பது ஆராய்ச்சிக்குரியது.

ஒகார இடைச்சொல் பிரிநிலை, வினா, எதிர்மறை, ஒழியிசை தெரிநிலை, சிறப்பு என்ற ஆறு பொருள்களைக் குறிக்கும் என்பர் தொல்காப்பியர் (தொல். 741). இவ் ஆறு பொருளோடு, கழிவு, அசைநிலை ஆகிய இரண்டு பொருளையும் சேர்த்து அவ்விடைச் சொல் எண் பொருளைக் குறிக்குமென்று பவணந்தி கூறுகிறார் (நன். 423). இலக்கண விளக்கமும் நன்னூலைப் போலவே எட்டுப் பொருளை இவ்விடைச் சொல்லுக்குக் குறிப்பிடுகிறது (இ. வி. 253). இந்த 'ஓ' காரம் சிறப்புப் பொருளைக் குறிக்கும் போது அளபெடுக்கும் என்பர் தொல்காப்பியர் (தொல். 746) (எ. கா.) "ஓஒ பெரியன்"-இந்த அளபெடுத்த ஓகாரம் சிறப்புப் பொருளை உணர்த்துவதாகும். சிறப்புப்பொருளில் அளபெடை எடுக்குமென்று நன்னூலும் இலக்கண விளக்கமும் குறிப்பிடவில்லை.

ஏகாரம் தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசை என்ற பொருள்களைக் குறிக்கும் என்று தொல்காப்பியம் கூறுகின்றது (தொல். 742). இவ்வைந்து பொருள்களோடு இசைநிறைப் பொருளையும், ஏகாரம் குறிப்பதாகும் என்று நன்னூலும் (42 ) இலக்கண விளக்கமும் ( 52) கூறுகின்றன. 'தேற்றப் பொருளில் வரும் ஏகாரம் அளபெடுக்கும் என்று தொல்காப்பியம் (746) கூறுகிறது.

(எ, கா) "உண்டேஎ மறுமை"

தேற்றேகாரம் அளபெடுக்கும் என்பதை நன்னூலும், இலக்கண விளக்கமும் கூறவில்லை.

'எற்று' என்ற இடைச்சொல் 'இறந்த' என்ற பொருளு டையது. "எற்றென்னுடம்பின் எழில் நலம்" என்பதற்கு 'என் உடல் நலம் அழிந்தது' என்பது பொருள்.

"எற்றென் கிளவி இறந்த பொருட்டே' என்பது தொல் காப்பியம் (749). இவ்விடைச் சொல்லை நன்னூலார் குறிப்பிடா ததால் அவர் காலத்தில் அது வழக்கில் இல்லை என்பது தெரி கிறது. ஆனால் இலக்கணவிளக்கத்தில் இவ்விடைச்சொல் தொல்காப்பியத்தில் கண்ட அதே நூற்பாவால் குறிக்கப்பட் டுள்ளது (இ. வி. 267). நன்னூலார் காலத்தில் இல்லாத 'எற்று' என்னும் இடைச்சொல் இலக்கண விளக்ககாலத்தில் வழக்கிற்கு வந்துவிட்டதா என்பது சிந்தித்தற்குரியது.

இதைப்போலவே தொல்காப்பியர் கூறும் 'மன்ற' என்ற இடைச்சொல்லையும், ('தெளிவு' என்ற பொருளுடையது) 'எளிமை' என்று பொருள்படும் 'தஞ்சம்' என்ற இடைச்சொல் லையும் (தொல். 750, 751) நன்னூலார் கூறவில்லை. ஆனால் இலக்கண விளக்கம் இவ்விரண்டு இடைச் சொற்களையும் தொல் காப்பியம் கூறும் நூற்பாக்களையே கூறி விளக்குகிறது (இ. வி. 270, 271). இவையும் நன்னூலார் காலத்து வழக்கொழிந்து மீண்டும் 17-ம் நூற்றாண்டில் வழக்குப்பெற்றனவா என்பது ஆய்தற்குரியது.

'அந்தில்' என்ற இடைச்சொல் இடப்பொருளிலும், அசை நிலையாகவும் வரும் என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

> "அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்
> றாயிரண் டாகும் இயற்கைத் தென்ப" (தொல். 752)

இங்கு 'ஆங்க' என்ற சொல் 'இடப்பொருள்' என்று பொருள் படும்.

ஆனால் நன்னூல் 'அந்தில்', 'ஆங்கு' இரண்டையும் இடைச் சொற்களாககொண்டு இவ்விரண்டும் இடப் பொருளிலும், அசைநிலையாகவும் வரும் என்று கூறுகின்றது

"அந்தில் ஆங்கு அசைநிலை இடப்பொருளவ்வே" (நன். 437)

இலக்கண விளக்கம் 'அந்தில்' 'ஆங்கு' ஆகிய இரண்டும் அசைநிலையாக வரும் என்றும் அவற்றுள் 'அந்தில்' என்பது இடப்பொருளையும் தரும் என்றும் குறிப்பிடுகிறது.

"அந்தில் ஆங்க அசைநிலை அவற்றுள்
அந்தில் இடப்பொருட் டாகலு முரித்து" (இ. வி. 273)

என்பது இலக்கண விளக்கம்.

இதனால் தொல்காப்பியர் காலத்தில் அந்தில் என்ற இடைச் சொல் இடப்பொருளிலும், அசைநிலையாகவும் பயன்படுத்தப் பட்டது என்றும், நன்னூலார் காலத்தில் அந்தில் என்பதோடு 'ஆங்கு' என்ற இடைச் சொல்லும் இடப்பொருளிலும் அசை நிலையாகவும் பயன்படுத்தப்பட்டது என்றும் இலக்கண விளக்க முடையார் காலத்தில் 'அந்தில்' மட்டுமே இடப்பொருள் அசை நிலை என இரண்டு வகையாகப் பயன்படுத்தப்பட்டது என்றும் 'ஆங்கு' அசைநிலையாக மட்டும் பயன்படுத்தப்பட்டது என்றும் தெளிவாகின்றன.

'கொல்' என்ற இடைச்சொல் ஐயப்பொருளில் வரும் என்பர் தொல்காப்பியர் (753). நன்னூலாரும் (435) இலக்கண விளக்கமுடையாரும் (269) அது ஐயப்பொருளோடு அசைநிலை யாயும் வரும் என்பர்.

(எ. கா.) "குற்றி கொல்லோ மகன் கொல்லோ" – ஐயப்பொருள்

"வருவர் கொல் வயங்கிழாய்" – அசைநிலை

'எல்' என்பது இலங்குதல் என்னும் பொருளில் வரும் என்று தொல்காப்பியர் கூறுகின்றார் (தொல். 754). ஆனால் இது நன்னூலிலும், இலக்கண விளக்கத்திலும் குறிக்கப்படவில்லை.

'ஆர்' என்ற இடைச்சொல் உயர்திணை, அஃறிணை ஆகிய இரண்டு இயற்பெயர்களின் ஈற்றில் பொருந்தி பலர்பால் வினைச் சொல்லோடு முடியுமென்பர் தொல்காப்பியர்.

"இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தில் வினையொடு முடிமே" (தொல்: 755)

(எ. கா.) 1. "தந்தையார் வந்தார்" - இது உயர்திணைப்பெயர் 'ஆர்' ஈறு பெற்றுப் பலர்பால் வினையொடு முடிந்தது.

2. "நரியார் வந்தார்" - இது அஃறிணைப்பெயர் 'ஆர்' ஈறு பெற்றுப் பலர்பால் வினையொடு முடிந்தது.

இவ்வாறு உயர்திணை, அஃறிணைப் பெயர்கள் 'ஆர்' இடைச் சொல்லை ஈற்றிலே மிகுதியாகப் பெற்று வருவதற்குரிய விதி நன்னூலிலும் இலக்கண விளக்கத்திலும் காணப்பெறவில்லை. இதனால் இடைக்காலத்தில் இயற் பெயர்கள் 'ஆர்' விகுதிபெற்று வருவது வழக்கில் இல்லை என்பது தெரிகிறது.

இவ் 'ஆர்' என்ற இடைச்சொல் அசை நிலையாகவும் வருமென்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார் (756).

(எ. கா.) "எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே" (தொல். 61)

இங்கு 'ஆர்' அசைநிலையாக வந்துள்ளது. இவ்வாறு அசை நிலையாக வரும் என்பது நன்னூலிலும், இலக்கண விளக்கத்திலும் இல்லை.

இதைப் போலவே 'ஏ', 'குரை' இவை இரண்டும் இசை நிறையாகவும், அசைநிலையாகவும் வரும் என்று தொல்காப்பியம் கூறுகின்றது (757).

(எ. கா.) 1. "ஏஎ இஃதொத்தன் என்பெறான்" - இசைநிறை

2. "ஏஎயென் சொல்லுக" – அசைநிலை

3. "அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே"
– இசைநிறை

4. "பல்குரைத் துன்பங்கள் சென்றுகெடும்" – அசைநிலை

இவையும் நன்னூலிலும் இலக்கண விளக்கத்திலும் குறிக்கப்படவில்லை. இதனின்றும் நன்னூலார் காலத்திலிருந்தே 'ஆர்' அசைநிலையாக வழங்கவில்லை என்பதும் 'ஞ' 'குரை' இவை இரண்டும் இசைநிறையாகவும் அசைநிலையாகவும் வழங்கவில்லை என்பதும் தெரிகின்றன.

'மியா', 'இக', 'மோ', மதி', 'இகும்', 'சின்' இவ்வாறும் முன்னிலை அசைச் சொல்லாக வரும் என்பர் தொல்காப்பியர் (தொல். 759) இவ்வாறோடும் 'அத்தை', 'இத்தை', 'வாழிய', 'மாள', ஈ', 'யாழ' என்ற ஆறும் முன்னிலை அசைகளாக வரும் என்று பவணந்தியார் கூறுவர் (நன். 440). இலக்கண விளக்கமும் நன்னூல் கூறிய இப்பன்னிரண்டையும் முன்னிலை அசைகளாகக் கூறுகின்றது (இ. வி. 276). இவற்றுள் 'இகும்', 'சின்', என்ற இரண்டு இடைச் சொற்களும் முன்னிலையில் மட்டு மன்றித் தன்மையிலும், படர்க்கையிலும் அசைகளாக வருமென்பர் தொல்காப்பியர் (தொல் 760).

எனவே, தொல்காப்பியர் காலத்தில் தன்மை, முன்னிலை, படர்க்கை மூவிடத்தும் அசைநிலைகளாக வந்த 'இகும்', 'சின்' என்ற இரண்டும் நன்னூலார் காலத்திலும் இலக்கண விளக்கமுடையார் காலத்திலும் முன்னிலையில் மட்டும் அசை நிலைகளாக வரலாயின என்பது பெறப்படும்.

'யா', 'கா', 'பிற', 'பிறக்கு', 'அரோ', 'போ', 'மாது' என்ற ஏழு இடைச் சொற்களும் அசைநிலைகளாகும் என்று தொல்காப்பியம் கூறுகின்றது (764). இவ்வேழுடன் 'ஒரும்', 'இருந்து', 'இட்டு', 'அன்று', 'ஆம்', 'தாம்', 'தான்', 'கின்று', ஆகியவையும் அசைநிலைகள் என நன்னூல் கூறுகிறது (441)

இதனின்றும் 'ஓரும்' முதலாகக் கூறிய எட்டு இடைச் சொற்களும் அசைநிலைகளாக வரும் வழக்கு தொல்காப்பியர் காலத்தில் இல்லை என்பது தெளிவாகிறது.

'பிரிவிலசைநிலை' என்பதொன்றினைத் தொல்காப்பியர் கூறுகின்றார். 'ஆக', 'ஆகல்', 'என்பது' ஆகிய மூன்றும் பிரிவிலசைநிலைகளாக வரும் என்பர் (தொல். 765).

"ஒருவன் 'யான் இன்னேன்' என்றானும், 'நீ இன்னை' என்றானும், 'அவன் இன்னன்' என்றானும் கூறியவழிக் கேட்டான் 'ஆகஆக', 'ஆகல்ஆகல்' என்பான். இவை உடன்படாமைக் கண்ணும் ஆதரமில் வழியும் வரும். ஒருவன் ஒன்று உரைப்பக் கேட்டான் 'என்பதென்பது' என்பான். இது நன்குரைத்தற் கண்ணும், இழித்தற்கண்ணும் வரும்" என்று சேனாவரையர் பொருள் கூறுகின்றார் (தொல். சொல். ப. 175). இது போன்ற பிரிவிலசைநிலை நன்னூலிலும் இலக்கண விளக்கத்திலும் கூறப்படவில்லை.

ஒளகாரம் இரட்டித்தும் இரட்டிக்காமல் அளபெடையாய் அளபெடுத்தும், அளபெடையின்றி அது வருமிடத்துக் குறிப்பால் வெவ்வேறு பொருளை உணர்த்தும் என்று தொல்காப்பியர் கூறுகின்றார் (தொல். 766). அவைகள் என்னென்ன பொருளை உணர்த்துமென்று தொல்காப்பியர் கூறவில்லை. ஆனால் சேனாவரையர் அவற்றுக்குப் பின்வருமாறு சான்றுகள் காட்டி விளக்குகிறார்.

(எ. கா.) 'ஒள ஒள ஒருவன் தவஞ்செய்தவாறு'

என்ற வழி சிறப்புத்தோன்றும். ஒரு தொழில் செய்வானை 'ஒள ஒள இனிச் சாலும்' என்ற வழி மாறுபாடு தோன்றும் 'ஒளஉ ஒருவன் இரவலர்க்கீந்தவாறு'...எனவும், 'ஒளஉவவன் முயலுமாறு'....எனவும் அளபெடுத்தும் அளபெடாதும் வந்த வழியும் அப் பொருள் தோன்றியவாறு கண்டு கொள்க" (தொல். சொல். சேனா. ப. 176).

இதைப் போன்ற வழக்கு நன்னூலிலும் இலக்கண விளக்கத்திலும் குறிக்கப்படவில்லை. இதனால் பிற்காலத்தில் இவ்வழக்கு நீங்கி விட்டது என்று தெரிகிறது.

'நன்று', 'அன்று' என்ற சொற்கள் ஈற்றில் ஏகாரம் பெறும்போதும், 'அந்து' என்ற சொல்லும் 'அன்' என்ற சொல்லும் ஈற்றில் ஓகாரம் பெறும்போதும் குறிப்போசையால் பொருள் உணர்த்தும் என்பர் தொல்காப்பியர் (தொல்.767).

ஒருவன் ஒன்று கூறும்போது, அதற்கு உடன்படாதவன் 'நன்றே நன்றே', 'அன்றே அன்றே' என்று கூறி உடன் படாமையை உணர்த்துவது. 'அந்தோ', 'அன்னோ' இவை இரண்டும் இரங்கற் குறிப்புணர்த்தும்.

இவ்வாறு இந்நான்கு சொற்களும் ஈற்றில் ஏகாரம் அல்லது ஓகாரம் ஏற்றுக் குறிப்புப்பொருள் உணர்த்துதலை நன்னூலும் இலக்கண விளக்கமும் குறிப்பிடாமையால் அந்நூல்கள் தோன்றிய காலத்தில் இவை போன்ற வழக்குகள் இல்லை போலும்.

வினைச் சொல்லில் வரும் 'உம்' ஈறு 'உந்து' ஆகத்திரியும் என்பதனைத் தொல்காப்பியர் இடையியலிலும் (தொல். 777), நன்னூலாரும் இலக்கண விளக்கமுடையாரும் வினை இயலிலும் கூறுகிறார்கள் (நன். 341; இ. வி. 244)

(எ. கா.) "நீர்க்கோழி கூப்பெயர்க்கும்" என்பது

"நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" எனத்திரிகிறது.

'இல்' (தொல். 738; நன். 431; இ. வி. 264), 'உம்' (தொல். 740; நன். 425; இ. வி. 256), 'என' (தொல். 743; நன் 424; இ. வி. 256), 'என்று' (தொல். 744; நன். 424; இ. வி. 255), 'மற்றையது' (தொல். 749; நன். 434; இ. வி. 268), 'அம்ம' (தொல். 761; நன். 438; இ. வி. 274), 'மற்று'

(தொல். 747; நன். 433; இ. வி. 266) ஆகிய இடைச் சொற்களுக்குத் தொல்காப்பியர் கூறும் பொருள்களே நன்னூலிலும் இலக்கண விளக்கத்திலும் கூறப்பட்டிருப்பதால் தொல்காப்பியர் காலத்திலிருந்து இலக்கண விளக்கமுடையார் காலம் வரை தொடர்ந்து அவ்விடைச் சொற்கள் அப்பொருளில் வழங்கின எனக் கொள்ளலாம்.

தொல்காப்பிய இடையியலிலிருந்து இடைச்சொற்கள் மொத்தம் முப்பத்திரண்டு பொருள்களைக் குறிக்கும் என்பதை அறிகிறோம். நன்னூலின்படி இடைச் சொற்கள் மொத்தம் இருபத்தைந்து பொருள்களைக் குறிப்பிடுகின்றன.

இலக்கண விளக்கத்தில் இடைச்சொற்கள் மொத்தம் முப்பத்தொரு பொருள்களைக் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.[3]

தொல்காப்பியர் குறிப்பிடும் 'அச்சம்', 'பயமின்மை', 'காலம்', 'பெருமை', 'இறந்த பொருள்', 'எளிமை', 'இலக்கம்', 'பிரிவிலசைநிலை', ஆகிய எட்டு பொருள்களையும் நன்னூல் குறிப்பிடவில்லை.

'எற்று' என்பது இறந்த பொருளையும் 'தஞ்சம்' எளிமைப் பொருளையும் 'எல்' இலங்குதல் பொருளையும் 'ஆக', 'ஆகல்' என்பன பிரிவிலசைநிலைப் பொருளையும் தொல்காப்பியர் காலத்தில் தந்தன என்பதையும் அவை நன்னூலார் காலத்தில் வழக்கிழந்தன என்பதையும் மேலே கண்டோம்.

ஆனால் இலக்கண விளக்கம் இவ்வெட்டனுள் 'அச்சம்', 'பயமின்மை', 'காலம்', 'பெருமை', 'இறந்த பொருள்', 'எளிமை', ஆகிய ஆறு பொருளையும் இடைச் சொற்களுக்குக் குறிப்பிட்டுள்ளது. தொல்காப்பியர் கூறிய 'இலக்கம்', 'பிரிவிலசைநிலை', ஆகிய இரண்டு பொருள்களை மட்டும் அது குறிப்பிடவில்லை.

3. பின்னிணைப்பு காண்க.

எனவே 'அச்சம்', 'பயமின்மை', 'காலப்', 'பெருமை' என்ற நான்கு பொருளைத் தரும் சொல்லும், இறந்த பொருளுணர்த்தும் 'எற்று' என்ற இடைச்சொல்லும் எளிமைப் பொருளைத் தரும் 'தஞ்சம்' என்ற இடைச்சொல்லும் இலக்கண விளக்க முடையார் காலத்தில் வழக்கிலிருந்தன போலும்.

நன்னூலார் இடைச்சொல் வியங்கோள் பொருளிலும் வரும் என்று கூறுவர்

(எ. கா.) ' மாவென்கிளவி வியங்கோளசைச்சொல்'' (நன். 439)

" மாயக்கடவுட் குயர்கமா வலனே "

இங்கு 'உயர்கமா' என்பதிலுள்ள 'மா' வியங்கோள் பொருளில் வந்துள்ளது. இலக்கண விளக்க முடையாரும் 'மா' வியங்கோள் பொருளில் வரும் என்று கூறுகின்றார் (இ. வி. 275). இதனைத் தொல்காப்பியம் கூறவில்லை. இதனால் அவர் காலத்தில் 'மா' என்ற இடைச்சொல் வியங்கோள் பொருளில் வழங்கவில்லை என்பது தெரிகிறது.

வேர்ச் சொல் அல்லது உரிச்சொல்லிலிருந்து பல பெயர்ச் சொற்களும் வினைச்சொற்களும் உருவாகியிருக்கின்றன என்பதனை நாமறிவோம். சில இடைச் சொற்களிலிருந்து பெயரும் வினையும் உருவாகி இருக்கின்றன என்பதை இடைச்சொல் லாராய்ச்சி புலப்படுத்துகின்றது.

(எ. கா.) 1. 'என்று' என்ற இடைச் சொல்லிலிருந்து என்றான் என்ற வினை ஆக்கம் பெற்றுள்ளது.

2. மற்று - மற்றையான் (பெயர்)

3. பிற - பிறன், பிறர்க்கு (பெயர்)

## பின்னிணைப்பு

தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம் ஆகிய மூன்று இலக்கண நூல்களிலும் முன் இயல்களில் கூறிய வேற்றுமை, காலம், விகுதி, சாரியை, உவமஉருபுகள், ஆகிய இடைச் சொற்களன்றி, இடையியலில் கூறியுள்ள ஏனைய இடைச்சொற்கள் குறிப்பாக உணர்த்தும் பொருட் பட்டியல்:

| தொல்காப்பியம் | நன்னூல் | இலக்கண விளக்கம் |
|---|---|---|
| 1. கழிவு | 1. தெரிநிலை | 1. தேற்றம் |
| 2. ஆக்கம் | 2. தேற்றம் | .. வினா |
| 3. ஒழியிசை | 3 ஐயம் | 3. எண் |
| 4 அச்சம் | 4. முற்று | 4 பிரிநிலை |
| 5 பயமின்மை | 5. எண் | 5. எதிர்மறை |
| 6. காலம் | 6. சிறப்பு | 6. அசைநிலை |
| 7. பெருமை | 7. எதிர்மறை | 7. ஒழியிசை |
| 8 எச்சம் | 8. எச்சம் | 8. சிறப்பு |
| 9 சிறப்பு | 9. வினா | 9. தெரிநிலை |
| 10. ஐயம் | .0. விழைவு | 10. கழிவு |
| 11 எதிர்மறை | 11. ஒழியிசை | 11. வினை |
| 12. முற்று | 12. பிரிப்பு | 12. பெயர் |
| 13 எண் | 13. கழிவு | 13. குறிப்பு |
| 14. தெரிநிலை | 14. ஆக்கம் | 14. இசை |
| 15. பிரிநிலை | 15. அசைநிலை | 15. பண்பு |
| 16. வினா | 16 இசைநிறை | 16. எச்சம் |
| 17. தேற்றம் | 17, வினை | 17. முற்று |
| 18. அசைநிலை | 18. பெயர் | 18. ஐயம் |
| 19. வினை | 19. பண்பு | 19. ஆக்கம் |
| 20. குறிப்பு | 20. வினையாற்று | 20. விழைவு |

| தொல்காப்பியம் | நன்னூல் | இலக்கண விளக்கம் |
|---|---|---|
| 21. இசை | 21. இடப்பொருள் | 21. காலம் |
| 22. பண்பு | 22. வியங்கோள் | 22. அச்சம் |
| 23. பெயர் | 23. குறிப்பு | 23. பயமின்மை |
| 24 விழைவு | 24. கேண்மின் | 24. பெருமை |
| 25. வினைமாற்று | 25. சுட்டியதற்கினம் | 25. வினைமாற்று |
| 26. இறந்த பொருள் | | 26. இறந்தபொருள் |
| 27. எளிமை | | 27. சுட்டியதற்கினம் |
| 28 இடப்பொருள் | | 28. இடப்பொருள் |
| 29 இலக்கம் | | 29. வியங்கோள் |
| 30. பிரிவிலசைநிலை | | 30. கேண்மின் |
| 31 சுட்டியதற்கினம் | | 31. எளிமை |
| 32. கேண்மின் | | |

# 16

# தொன்னூல் விளக்கம் - நுண்மதிப்பீடு

ச. வே. சுப்பிரமணியன்
*கேரளப் பல்கலைக்கழகம்*

## 1. நூல்-அமைப்பு

1.1. *பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் அச்சான, ஐந்திலக்கணமும் கூறுகின்ற தமிழ் இலக்கண நூல்களுள் ஒன்று வீரமா முனிவரால் இயற்றப் பட்ட தொன்னூல் விளக்கம்.*[1]

1.2. *நூல், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து அதிகாரங்களில் 370 நூற்பாக்களையுடையது. தான் இலக்கணத்தை வகுத்துக் கொண்ட அடிப்படைக்குத்தக இயல்களை வகுத்துள்ளார்.*

1.3. *எழுத்ததிகாரம் (நூற்பாக்கள் 2-40) எழுத்தியல், எழுத்தின் பகுப்பு, எழுத்தின் விகாரம் என முப்பிரிவுகளையுடையது.*

---

1. *இங்கு பயன்படுத்தியுள்ள பதிப்பு-1891ல் அச்சிடப்பட்ட இரண்டாம் பதிப்பு முதற்பதிப்பு 1838ல் அச்சானதாகத் தெரிகிறது. வீரமா முனிவர், காலம் 1680–1747.*

1 4. சொல்லதிகாரம் (41 முதல் 142 நூற்பாக்கள்) (1) சொற் பொதுவியல், (2) பெயர் வேற்றுமையியல், பகுபதப் பெயரியல், தொகைநிலைத்தொடர்மொழிப் பெயரியல், சுட்டு வினா, (3) வினைச்சொல்லியல் - முக்காலமுற்றுவினை, ஏவல், வியங்கோள், ஈரெச்சம், வினைக்குறிப்பு, (4) இடைச்சொல்லியல், (5) உரிச்சொல்லியல், என ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஓரளவு வரையறுக்கப்பட்டுள்ளது.

1.5. பொருளதிகாரம் (143 - 200) பதிகம், காரணம், விரிவு, தொகையுந்துணிவும், உரிமை (கால உரிமை, இட உரிமை, பண்புரிமை, சாதித்தொழிலுரிமை, பற்றுதலுரிமை, வடிவு முதலிய உரிமை, ஒழுக்க உரிமை, சொல்லுரிமை) என்ற பகுப்புக்களைக் கொண்டுள்ளது. காலத்திற்குத்தக மரபைத் தழுவிப் பொருளதிகாரம் அமைக்கப்பட்டுள்ளது.

1.6 யாப்பதிகாரம் (201 - 300) செய்யுளுறுப்பு செய்யுளியல், செய்யுள் மரபியல் எனப் பகுக்கப்பட்டுள்ளது.

1.6. அணியதிகாரம் (301 – 370) (1) சொல்லணியியல்-மறநிலையணி, சொன்மிக்கணி, சொல்லெஞ்சணி, சொல்லொப்பணி, (2) பொருளணியியல் என வகைப்படுத்தப்பட்டுள்ளது

2. எழுத்து

2 1 எழுத்துக்களின் பிறப்பைப்பற்றிப் பேசும்போது தொன்னூல் விளக்கம் மிடறு, உரம், உச்சி என்பனவற்றை முதலிடமாகவும் இதழ், மூக்கு, அணம், பல், நா, இவற்றைத் துணையிடமாகவும் கூறுகின்றது. முதலிடம், துணையிடம் என்பன இடம், உறுப்புக்கள் என்ற எண்ணத்தில் அமைந்திருக்கலாம்.

2 2. மொழியிடை எழுத்துக்கள் (மெய்ம்மயக்கம்) பற்றித் தொன்னூல் விளக்கம் குறிப்பிடவில்லை.

2.3. எழுத்தின் பெயர்கள், இடுகுறி, காரணம், பொது, சிறப்பென்ற வகைகளுள் அடங்குமென்று கூறி, உரையில் உயிர், உயிர்மெய்யே, உடம்பே என்பன - இடுகுறிப்பொதுப் பெயர்; அவற்றுள் அ, ஆ, க, ங என்பன இடுகுறிச் சிறப்புப் பெயர் என விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு எழுத்தின் பெயர்களை விளக்குவது பொருந்துமென்று தோன்றவில்லை. பண்பாடு, தத்துவம், காரணம் இவற்றின் அடிப்படையில்தான் தமிழ் எழுத்துக்களுக்கு பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

2.4 எழுத்துக்களில் புதுமையைப் புகுத்தியவர் தொன்னூல் விளக்க ஆசிரியர்

"நீட்டல், சுழித்தல் குறில் மெய்க்கிருபுள்ளி" (தொ. வி. 12)

இங்கு "மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். 15) "எகர ஒகரத் தியற்கையுமற்றே" (தொல். 16) என்பதினின்றும் உயிர் எழுத்துக்குறிலாகிய எ̄ – ஒ̄, மெய்க்கு 'க்' எனவும் வேறுபடுத்தினர். அதற்கும் பின்புதான் ஏ, ஓ என்ற வடிவங்களும் தோன்றினபோலும்.

2.5. குற்றியலுகரத்தைக் கூறும்போது ஏனைய இலக்கணிகளின் கருத்தைக் கூறினும் வேறு முறையில் கூறுகின்றார்.

'தனிக்குறில் அல்லவற்று இறுதி வன்மை
ஊர்ந்துளிக் குறுகும் உகரம் என்ப" (தொ. வி. 15)

2.6. மகரக் குறுக்கத்தையும், லள திரிந்த ன, ண, முன் குறுகும் என்று பிறர் கூற,

"மகரம் ல ள க் கீழ்
அம்மேற் குறுகும் ..." (தொ. வி. 17)

என இவர் பேசுகிறார்.

2.7 உடம்படு மெய்பற்றிப் பேசும்போது ஏனைய இலக்கணங்கள் (நன். 162; இ. வி. 68; மு. வீ. 183) இ, ஈ, ஐ, வழி 'ய' வ்வும் எனப் பேசத் தொன்னூல் விளக்கம் இ, ஈ, எ, ஐ, வழி 'ய' வ்வும் எனச் சுட்டுகின்றது (தொ. வி. 20).

2.8. புணர்ச்சியில் ஏற்படும் வேறுபாடுகளை, மெய்பிறிதாதல், மிகுதல், குன்றல் அல்லது தோன்றல், திரிதல், கெடுதல் என்று பிற இலக்கணிகள் கூற,

"திரிபு, அழிவு, ஆக்கம், திரட்டு, நால் விகாரம்..."
(தொ. வி. 21)

என நான்காகப் பேசுகின்றது. 'திரட்டு' என்ற அமைப்புப் பல சந்திகளை உள்ளடக்குவதால் பொருந்துமெனத் தோன்றுகிறது.[2]

2.9. மகர ஈற்றுக்குமுன் நகரம்வரின் மகரம் வீழும் என்பதை நூற்பா 23-லும், ண, ன, முன் நகரம் வரின் மாய்ந்து கெடும் என்பதை நூற்பா 24-லும், ல, ள, திரிந்து 'ந' அழியும் என்பதை 25-லும் தொன்னூல் விளக்கம் குறிப்பிடுகின்றது.

| | | |
|---|---|---|
| (எ-டு) | மனம் + நலம் | மனநலம் |
| | கலன் + நெடிது | கலனெடிது |
| | விரல் + நீளம் | விரனீளம் |
| | இருள் + நீண்டது | இருணீண்டது |

இவ்வாறு தெளிவாக முந்திய இலக்கணிகள் காட்டியதாகத் தோன்றவில்லை.[3]

3. சொல்

3.1. (அ) ஏனைய மரபிலக்கணங்கள் எழுத்ததிகாரத்தில் கூறும் எண்ணுப்பெயர்ப் புணர்ச்சிகளை வீரமாமுனிவர் சொல்லதிகாரத்தில் கூறுகிறார். (தொ. வி. 94–97).

---

2. சுப்பிரமணியன், 1967, ப. 132-133.
3. சுப்பிரமணியன், 1967, ப. 239-279.

(ஆ) சாரியைகளைப்பற்றியும் சொல்லதிகாரத்தில் தான் பேசுகின்றார் (தொ. வி. 52).

(இ) நன்னூல் கூறும் பதவியல் செய்திகளையும் சொல்லதிகாரத்தில் கூறியுள்ளார் (தொ. வி. 46 48; 83)

(ஈ) எழுத்ததிகாரத்தில் ஏனையோர் கூறிய இன்னும் பல செய்திகளைச் சொல்லதிகாரத்தில் கூறியுள்ளார்; சுட்டு வினா போன்றவை (தொ. வி. 98, 100–102).

இவைகள் அனைத்தும் சொல்லிலக்கணத்தைச் சார்ந்தவை எனத் தொன்னூல் விளக்க ஆசிரியர் நினைக்கிறார் என்பதே இதன் கருத்து. இதுவும் சிந்திப்பதற்குரியது.

3 2. சொற்பாகுபாட்டைப் பற்றிக்கூறும்போது மரபிலக்கணங்கள், இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என செய்யுளீட்டச் சொற்களாக ஒரு வகையைத் தருகின்றன ஆயின் தொன்னூல் விளக்கம் திசைச் சொல், வடசொல்பற்றிக் குறிக்கவில்லை. இவை தேவையற்றவை எனக் கருதினர் போன்று தோன்றுகிறது (தொ. வி. 42).

3 3. பெயர் வகைகளைக் கூறும்போது மரபுப்பெயர், காரணப்பெயர், ஆகுபெயர், இடுகுறிப்பெயர், என நான்கு வகைகளாக வகுக்கின்றார். இவ்வாறு நோக்குவது ஒரு புதிய கோணம் அதற்கு விளக்கமும் தருகின்றார்.[4]

4. "பெயரே வேற்றுமை பெற்றிடம் பாதிணை
காட்டித் தொழிலல காலங்காட்டா
மரபு காரண மாக்கங்குறியென்
றவை நாற்றகுதி யாகுமென்ப..." (தொ. வி. 53)

"காரணமில்லன மரபு பெயரே
காரணங்காட்டிக் காரணப்பயன் கொளல்
காரணப்பெயரே காரணங்காட்டா
ததன் பயன்கொள்வதாகு பெயரே
காரணங்காட்டினுங் காரணப்பயன்கொளா
விடுகுறிப்பெயரா மென்பகற்றோரே......" (தொ. வி. 54)

3.4. தழுவு தொழிற்பெயர் எனக்கூறப்படுகின்ற ந, ஞ, வருகின்ற வினையடிப்பெயர்களை வினைப்பெயர் அல்பெயர் என நன்னூல் 141) பேசுகின்றது. இதற்கு இடைநிலை வெளிப்படையாக எந்நூலும் கூறவில்லை அந்நிலை இந்நூல் கூறுகின்றது. "ந, ஞ, விடைப்பகுபதம் நண்ணலு நெறியே" (தொ. வி. 85) (எ. கா.) அறிஞர், அரிநர், கிளைஞர், முதலியன.

3.5. தமிழில் சுட்டு முன்னொட்டுக்கள், அம்மனிதன், இம்மாடு என அமைந்தனவே ஒழிய எதிர்மறை முன்னொட்டுக்கள் பெயர்களில் முற்காலத்தில் இல்லை. பிற்காலத்தில் தோன்றின. அவற்றைத் தொன்னூல் விளக்கம் குறிப்பிடுகின்றது.

"எதிர்மறை பகுபதத்தியைந்த மொழிமுதல்
ஒற்றெனில் அவ்வும் உயிரெனில் அன்று
மிருமைக்காம் நிருவென வட நடையே" (தொ. வி. 87)

(எ. கா.) அநீதி, அமலன்; அனங்கன்; அனுசாரம்; நிருமலம், நிராயுதன்.

3.6. ஒன்றன் படர்க்கை விகுதியாகத் து, டு, று, என்பவற்றை மரபிலக்கணங்கள் கூற[5] தொ. வி. 'உ' எனச் சுட்டுகின்றது.

"அன் ஆள் அர் ஆர் உ அ படர்க்கை" (தொ. வி. 105-5)

3 7. எதிர்மறைபற்றி வெளிப்படையாக முதன் முதலில் இலக்கணக் கொத்துப் பேச, அதை விளக்குகின்றது[6] தொன்னூல் விளக்கம்.

5. சுப்பிரமணியன், 1971, ப. 288.

6. சுப்பிரமணியன், 1971, ப. 273 75.

"எதிர்மறைக் கிடைநிலையின்றி என் ஏம் ஓம்
ஆய்ஈர் ஆன் ஆள் ஆர் ஆ ஆது அ
ஐம்பான் மூவிடத்தாகு மென்ப" (தொ. வி. 112)

3.8. ஏவல் பற்றித் தெளிவாக வரையறுத்து இந்நூலே முதல் முதலாகப் பேசுகின்றது [7]

"ஏவல் ஒருமைக்கு இயலும் ஆய்திமோ
ஏவற் பன்மைக்கு ஈர்தீர் மின் மினீர்
இருமைக்கு ஒரோவிடத்து ஆகும் குவ்வே" (தொ. வி. 113)

3.9. எதிர்மறை ஏவல்பற்றியும் இந்நூல்தான் முதலில் குறிப்பிடுகின்றது.

"எதிர்மறை ஏவற்கு ஏலே அல்லே
அன்மோ அற்க வாகு மொருமை
ஆமின் அன்மின் அற்பிர் பன்மை" (தொ. வி. 114)

3.10. வினையெச்சங்களை ஏனைய மரபிலக்கணங்கள் போன்று வாய்பாடாகக் கூறாது விகுதிகளைச் சுட்டியே உணர்த்து கின்றது. இது அவருடைய விளக்க மொழியியல் அறிவைச் சுட்டுகின்றது.

"வினையெச்சங்கொள் விகுதி இஉ
உவ்வொடெனவும் ஊபுஆ இறப்பே
அஇரு கருத்தாவனையி னிகழ்வே
யொரு கருத்தாவு மோரிடத்திரண்டு
மியை அஅன்றி இல்இன் இய இயர்
வான் பான் பாக்குவரும் பொழுதாம் பிற" (தொ. வி. 119)

3.11. எதிர்மறை வினையெச்ச விகுதிகளையும் இந்நூல் குறிக்கின்றது.

---

7. சுப்பிரமணியன், 1971, ப. 408.

" எதிர்மறையெச்சத்தியலும் விகுதி
ஆமல் ஆது ஆமை ஆ வென நான்கே" (தொ. வி. 121)

3.12 'என' வென்ற இடைச்சொல் ஏனைய மரபிலக்கணங்கள் ஆறு பொருளில் வருமெனக்கூற இந்நூல் ஏழு பொருளில் வருமெனக்கூறி, உவமைப் பொருளாகவும் வருமெனச் சேர்த்துப் பேசுகின்றது.[8]

3.13. மரபிலக்கணங்கள் கூறுகின்ற இடைச்சொற்களில் கொன், மற்று, எற்று, மற்றையது, மன்ற, தஞ்சம், கொல் போன்ற சொற்கள் கூறப்படவில்லை. வழக்கிழந்தமை பற்றி இவை விடப்பட்டிருக்கலாம்.

3.14. முன்னிலை அசைச்சொற்களாக ஏனைய மரபிலக்கணங்கள் கூறுதவையாக மான், ஆர் இரண்டையும் தருகின்றார், மொழிமாண்புலவர்.

4. நன்னூல் மேற்கோள்

4.1. நன்னூல் எழுத்ததிகார நூற்பாக்கள் பத்தினையும், சொல்லதிகார நூற்பாக்கள் இருபத்துநான்கினையும் தொன்னூல் விளக்கம் அப்படியே எடுத்தாள்கிறது.

4.2. எழுத்தும் சொல்லும் இணைந்து 141 நூற்பாக்களில் 34 நூற்பாக்கள் நன்னூல் நூற்பாக்கள்—107. நூற்பாக்களே தொன்னூல் விளக்கத்திற்கு உரியவை.

5. நூற்சிறப்பு

5.1. வீரமாமுனிவர் தொகுத்துக் கூறுவதைத் தெளிவாகக் கூறுகின்றார் (தொ. வி. 142).

8. சுப்பிரமணியன், 1971, ப. 300.
9. பின்னிணைப்பு காண்க.

5.2. எதிர்மறை, ஏவல், தழுவுதொழிற்பெயர், இடைநிலை இவை போன்றவை விளக்கப்பட்டுத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

5.3. அவர் வரிவடிவத்தில் மாற்றம் செய்துள்ளார். இந்நூலைத் தெளிவாசப் பதிப்பித்து வெளியிட்டால் தமிழ் இலக்கணத்தில் இன்னும் சில புதிய எண்ணங்கள் தோன்ற வழி வகுக்கும்.

## பின்னிணைப்பு

| நன். எழுத்து | தொ. வி. சொல் | ந. எழுத்து | தொ. வி. சொல் |
|---|---|---|---|
| 245-246 | 66 | 199 | 97 |
| 248 | 67 | 186 | 99 |
| 247 | 68 | 67 | 102 |
| 136 | 92 | 168 | 116 |
| 197 | 95 | | |

| நன். சொல் | தொ. வி, சொல் | நன், சொல் | தொ. வி. சொல் |
|---|---|---|---|
| 296 | 59 | 310 | 75 |
| 297 | 58 | 311 | 76 |
| 298 | 59 | 312 | 77 |
| 299 | 60 | 313 | 78 |
| 301 | 62 | 380 | 81 |
| 318 | 64 | 388 | 82 |
| 303 | 69 | 403 | 93 |
| 306 | 71 | 332 | 106 |
| 307 | 72 | 407 | 115 |
| 308 | 73 | 452, 453 | 139 |
| 309 | 74 | 454 | 140 |
| | | 455 | 141 |

மேற்கோள் நூல்கள்

*சுப்பிரமணியன்*, ச. வே. 1967 இலக்கணத்தொகை, எழுத்து *நாகர்கோவில்.*

" 1971 இலக்கணத்தொகை, சொல் *நாகர்கோவில்.*

17

# இலக்கணக் கொத்து

**ச. தண்டபாணி தேசிகர்**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*

செந்தமிழ் இலக்கணம் தொல்காப்பிய முதலாக முத்து வீரியம் தொன்னூல் விளக்கம் ஈறாகக் காலந்தோறும் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. மாறுபாடுகளும் தோன்றியுள்ளன.

வழக்கில் உள்ள மொழியில் இலக்கணம் புதிதாகத் தோன்றுவதும், வளர்வதும் இயற்கை. வழக்கொழிந்த மொழிகளில் இலக்கணம் என்றும் ஒரு படித்தாகவே இருக்கும். தோன்றுவதும் இல்லை; வளர்வதுமில்லை.

இலக்கியங்கள் வளரும்போது எத்தனையோ புதிய சொற்களும் சொற்படைப்புக்களும் தோன்றுகின்றன. இதுவரையிலும் இலக்கியங்களில் ஆளப்பெறாத சொல்லுருவங்களும், விகுதி பகுதிகளின் தேய்வும் விளைகின்றன. அவைகளுக்கு ஒருவரம்பு வேண்டாமா? இலக்கியங் கண்டால் இலக்கணம் இயம்பத்தானே வேண்டும்? "எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல் இலக்கியத்தினின்று எடுபடும் இலக்கணம்" என்பது போகத்தியச் சூத்திரம் என்று சொல்லுகிறார்களே?

இலக்கியம் – பொருள்; அதன் பண்பு அல்லது தன்மை இலக்கணம்; பொருள்கள் புதிது புதிதாகத் தோன்றும்போது, அவற்றை என்றும் பிரியாத தன்மைகளும் தோன்றத்தானே செய்யும்? அத்தகைய புதிய பண்பை அறிவதுதான் இலக்கணப் புதுமையின் எழுச்சி.

இலக்கண நூற்பாக்கள் அவ்வப்போது தோன்றிய இலக்கியங்களிற் காணப்பெறும் சொல்லமைதியைக் கண்டு தொகுத்துக் கூறப்பெற்றவை. அவை பின் வரும் இலக்கியங்களுக்கு மேல் வரிச்சட்டமாயின.

மேலும் இலக்கியம் வளரப் புதிய புதிய சொற்படைப்பு களும் தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக நன்றியுடையேன் என்ற பொருளில் 'நன்றியன்' இடம்பெறுகிறது. கம்பர் 'திரும்' என்ற பகுதி யடியாகத் 'திருமிய' என்ற சொல்லைப் படைக் கின்றார். இலக்கண எடுத்துக்காட்டாகத் திருமினான் இருந்தது. இதுவரை, திரும்பு திரும்பிய என்ற இலக்கிய வழக்கே நாம் அறிந்தது. திரும், திரும்பு என்பன இரண்டு வினைப்பகுதிகள் எனலும் உண்டு. இவைபற்றிய விதிகள் தொன்னூல்களிற் காணப்பெறா.

திகழ் + தசக்கரம் — திகடசக்கரம் ஆனதற்கு செந்தமிழ் முருகனை வீரசோழியத்தைத்தானே காட்ட நேர்ந்தது! ஆகை யால் புதிய புணர்ச்சி வகைகட்குப் புதிய வரம்புகள் தோன்றத் தான் வேண்டும்.

தொன்மையான இலக்கண நூல்கட்கு உரைசெய்த ஆசிரி யர்கள் உள்ள நூற்பாக்களின் விதிகளிலேயே எடுத்தோத்து, இசையெச்சம், ஏ, ஓ, உம் முதலான அடைச்சொற்கள், இலேசு உத்திவகைகள் மதம் அழகு, முன் கூறுதல், பின் கூறுதல் முதலான ஆதாரங்களைப் பிடித்துப் புதிய படைப்புகளையும்

பழைய இலக்கணத்துள் அடக்கி இந்திரசால வித்தை காட்டு கின்றனர். காட்டியும் புதிய படைப்புக்கள் அடங்கினவா? இல்லை. எடுத்துக்காட்டாக அகல் + சோறு, நள் + பகல் என்பன முறையே அகஞ்சோறு, நண்பகல் என்று ஆனமைக்கு விதி யாது? இவற்றை உரையாசிரியர்கள் எதிலாவது அடக்கி யுள்ளனரா? இவைபோல எத்தனையோ ஆட்சிகள் எஞ்சியுள்ளன. இதற்குக் காரணம் ஒப்பியல் அடிப்படையில் இலக்கண நூல் களுக்குச் சிறந்த ஆய்வு நூல் ஒன்று இல்லாத குறைதான்.

இதுவரை, முதல், வழி, சார்பு என்ற முறையில் பின்னோர் வேண்டும் விகற்பங்கூறி நூல்களை யாத்தனர். உரை வகுத்தனர். அவ்வுரைகளில் தத்தமக்குத் தோன்றிய ஆய்வுகளை மறுப்புரை யாக வழங்கினார்கள் இவையன்றி முழுமையான நடுவுநிலை தவறாத ஆய்வு நூல் ஒன்றையும் இலக்கண நூல்களுக்கு இயற்றி னார் அல்லர். இத்தகைய குறையைப் போக்கியவை இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம் என்ற நூல்கள். இவற்றுள் பிரயோக விவேகம் ஆரிய மொழியில் அடியூன்றித் தமிழிலக் கணத்தை ஆய்ந்த ஆய்வு நூல். அதனால் அது வேற்றுமையைச் 'சுபந்தம்' என்றது. வினையைத் 'திங்ஙு' என்றது. பண்புத் தொகையைக் 'கர்மதாரயம்' என்றது. அனைத்தையும் வடமொழி யாக வழங்கியது. அதனால் அந்நூல் வடமொழி வல்லவர் களாலேயே ஓரளவு பயிலப்படுவதாயிற்று.

இலக்கணக் கொத்தோ தமிழிலக்கிய இலக்கணங்களில் நிலைத்து நின்று இவற்றோடொத்த வடமொழியிலக்கண அமைதி களையுந் துணையாகக் கொண்டு, தமிழ்க்கண்ணுற் கண்டு ஒப்பு நோக்கு - வேற்றுமைக் காட்சிகள், அவற்றால் விளைகிற பல வேறு நுட்பங்கள் இவற்றை விளக்குவதாக எழுந்தது. ஆகவே இலக்கண ஆய்வு முறையில் தமிழ் மொழியில் முதன்முதல் எழுந்த நூல் இது ஒன்றே எனலாம்.

பாயிரவிருத்தி, முதற்சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, பாயிரவிருத்தி மறுப்பு - மறுப்பின் மறுப்பு இவைகளை ஆய்வு நூற்குழுவில் சேர்க்கலாகாதோ எனலாம். பாயிரவிருத்தி, முதற்சூத்திர விருத்திகள் தொல்காப்பிய முழுமைக்கும் விருத்தியுரை எழுத முற்பட்டு, அம்முயற்சி முதற்சூத்திரம் வரை நிறைவெய்தி முற்றுப் பெறாமல் நின்றுபோன ராயர் கோபுர அஸ்திவாரம் போன்றதாகலாம்.

இலக்கண விளக்கச் சூறாவளியோ ஒரு மறுப்பு நூல் அளவிலேயே மதிக்கத்தக்கது. அதிற்காணப்பெறும் மறுப்புக் களிற் சில இந்நூலைச் செய்த சுவாமிகளாலேயே குற்றமிலதாக எடுத்தாளப்பெற்றமையால் துணியத்தக்கது. ஏனைய நூல்கள் மறுப்பும் மறுப்புக்கு மறுப்புமாதலின் அவை வாத நூல்களாமே யன்றி, ஆய்வுநூல்கள் ஆகா. ஆதலால் தமிழில் உள்ள இலக் கண ஆய்வு நூல் 'இலக்கணக் கொத்து' ஒன்றே என்ற பெருமை யுடன் அதனை ஆராய அணுகலாம்.

நூற்பெயர்

இந்நூலின் பெயர் 'இலக்கணக் கொத்து' என்பதனை ஆசிரியரே

மயிலேறு பெருமாள் மலிபதி
இருபத கமலம் என்றலை மேற்கொண்டு
இலக்கணக் கொத்தெனும் நூலியம் புவனே'' (இ.கோ. 5)

என்பதால் அறியலாம். அன்றியும் 'பலர் நூல்களினும் பலருரை களினும் சிதறிக்கிடந்த சில விதிகளை ஒவ்வொரு சூத்திரத்தால் ஒருங்கே யறியக்கிடத்தலின் இலக்கணக் கொத்து என்று காரணப் பெயர் பெற்றது' (இ. கொ. ப. 10) என்ற அவரே தரும் விளக்க மும் இதனை நன்கு விளக்கும்.

## இது ஒரு நூலா?

இலக்கணக்கொத்து தொன்னூலும் நன்னூலும் பின்னூலும் போல ஒரு நூலாகுமா? என்ற ஐயம் ஆசிரியர்க்கே தோன்றியுள்ளது. அதனால் அவையடக்கம் சொல்வார் போலச் 'சில சிறப்பான இலக்கணக் குறிப்புக்களைத் தேடித் தொகுத்தேன்; அவற்றுள் மறந்தன போக இருந்தன சிலவற்றைச் சிறுவர்கட்காகத் தொகுத்தேன். அது 'ஈதொருநூல் அன்று' என்கின்றார் (இ. கொ. 6) ஆய்வுக் குறிப்புக்களின் தொகுப்பு; அதுவும் சூத்திர யாப்பான் இயன்றது. என்பதே ஆசிரியர் கருத்து.

## இந்நூல் எழுதக் காரணம்

முதற்காரணம்: ஒவ்வொரு மொழியிலும் தோன்றிய நூல்கள், நூலுக்குள் பாலியல் அதிகாரங்களாகிய பகுப்புக்கள், ஓரியலுளே ஒரு சூத்திரத்திற்கு ஒரு சூத்திரம், ஒரு சூத்திரத்திற்குள்ளேயே முன்விதிக்குப் பின்விதி இவைகள் முரண்பட்டுக் கிடந்தன; ஒன்றையொன்று மறுத்தன; இவைகளை விளக்குதல்

இரண்டாவது காரணம்: நூலாசிரியர் கருத்தை நோக்காமல் உரையாசிரியர்கள் அவரவர்க்கு வந்தவாறு பொருளுரைத்தல்; ஒரு விதிக்குப் பல பெயரும், ஒரு பெயர்க்குப் பல விதிகளும் வருதல்; ஆசிரியர் மூவகையினரும் மாறி மாறி வருகின்ற முக்குண வயப்பட்டு முறை மறந்து கூறுதல் இவற்றான் வரும் இடர்ப்பாடுகளைத் தொகுத்துக் காட்டி விலக்கிப் பொருள் அணிதல்.

மூன்றாவது காரணம்: எல்லாம் அறிந்தும், நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், முதலான அவத்தைகளால் தடுமாறிக் கூறுதல்.

நான்காவது காரணம்: விதிவயப்பட்டு மறந்து கூறுதல்.

இந்நான்காலும் சொல், பொருள், புணர்ச்சி வேறுபாடுகள் அறுதியிட்டு அறியப்படாவாயின. ஆகையால் இந்நால்வகை யிலும் சில தொகுத்து விளக்கினேன் (இ கோ. 6). என்பதால் இவர் நூல் செய்தற்குக் காரணம் மொழி, நூல், இயல், சூத்திர மாறுபாடுகள், ஆசிரியர்கள் தடுமாற்றம், அவர்கட்கு அவத்தை மாறுபாட்டால் விளைந்த அறியாமை, விதியான் விளைந்த மதி மாறுபாடு இவற்றைக்களைந்து தெளிவுறுத்தலே என்பதும் தெளிவிக்கப் பெறுகின்றது.

ஆசிரியர் 'சொல்லினுட் சில விதியடக்கி, ஏனை நால்விதி யும் இயம்பிலன் என்க'' (இ. கொ. 7) என்பதால் சொல்லிலக் கணமாகிய வேற்றுமை, வினை, இவற்றின் ஒழிபு இவைகளை மட்டும் உணர்த்தினர் என்பது தெளிவு. ஆயினும், பாயிரத்துள் (இ. கொ. 6), மாறுபாடு, உரையாசிரியர்களின் உரை வழு, விதியாலும், அவத்தையாலும் விளையுங் குற்றங்கள் இவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் உணர்த்து முறையால் எழுத்திலக்கணத் தையும் பொருளிலக்கணத்தையும் உணர்த்துவதையும் காண்கி றோம். ஆகவே இப்பகுதி அவையடக்கா, நூலியல்பு உணர்த்து வதா ? என்பதை ஊன்றி எண்ணவைக்கிறது. தம் நூலியல்பை உணர்த்தியதாகவே உள்ளங்கொளச் செய்கிறது.

இருவகைக் கருவிகள்

தந்நூலைப் பயில்வார்க்கு இத்தகைய தகுதிகள் வேண்டும்; அத்தகுதிகளிற் சிறிது குறையினும் நூலின் நுணுக்கங்கள் புலப்படா; ஆகையால் அவற்றை நன்கு தெளிக. அதன்பின் நூலை நோக்குக. பலகால் நோக்குக என்று முதற்கண் இந் நூலைப் பயிலற்கு மட்டும் ஏற்ற தகுதிகளைக் கூறுகின்றார் (இ கொ. 7, 8, 11).

அடுத்து, தமிழிலுள்ள எல்லா நூல்களையும் கற்றறிதற்கும், இந்நூலைப் பயிறற்கும் பொதுவகையான் வேண்டப் பெறுவன வாகிய பத்துக்கருவிகளைக் கூறுகின்றார் (இ. கொ. 8).

கருவிகளைப் பார்க்கின்ற ஒவ்வொருவரும் இத்தனை தகுதிகள் எமக்குள்ளனவா என்று தம்மையே தாமளந்து நூலையணுகுதற்கே அஞ்சுவர். ஆயினும் இப்பகுதி யாப்பு, கேட்போர் என்னும் சிறப்புப் பாயிரத்திலக்கணங்களுள் ஒன்றாதலின் இவைகள் மிக மிக இன்றியமையாதன என்பதை வலியுறுத்த, "ஏனையோர் நோக்கினால் எள்ளளவாயினும் பயன்படல் இலையே? பலியா திடமே" (இ. கொ. 11) என்கின்றார்.

அடுத்து, 'இந்நூல் கேட்டற்குரியார் நல்லோர்களே; அல்லோர்க்கு அளிப்பின் அவர்கள் பாம்புக்குப் பால் வார்த்தது போலத் தீமையே செய்வர்; ஆகையால் நல்லோர்க்கு அளிக்குதல் அழகே' (இ கொ. 10) என்பர்.

பின்பு, ஆசிரியர்களிலும் தெரிந்தவற்றை ஒளியாமற் சொல்லுவார்கள் பண்டையோர். இக்காலத்தவர்கள் ஏனோ மறைத்து மடிய வைக்கின்றனர். பழங்கருத்து நுணுக்கங்கள் மறைந்து விடுமே என்று ஒருங்கு திரட்டியுரைத்தனன் என்று பாயிரத்தை முடிக்கின்றார் (இ. கொ. 11).

வேற்றுமையியல் : வேற்றுமைகட்குப் பெயரிடுதல்

தொல்காப்பியர்,

"வேற்றுமை தாமே ஏழென மொழிப"
"விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே" (546, 547)

எனத்தொகை கொடுத்து,

"அவைதாம், பெயர் ஐ ஒடு கு
இன் அது கண்விளி யென்னும் ஈற்ற" (548)

என ஈற்றால் அதாவது உருபுகளைக் கொண்டு பெயரிட்டனர். இவை முறையே பெயர் வேற்றுமை, ஐ வேற்றுமை, ஒடு வேற்றுமை முதலியனவாக எண்ணப்பெறும் என்பதாம்.

இதனையே பின்னர் "இரண்டாகுவதே, ஐ யெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி" (தொல். 555) எனவும் "ஏழாகுவதே கண்ணெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி" (தொல் 565) எனவும் உருபுகளைக் கொண்டு வேற்றுமைகட்குப் பெயர் வழங்கும் என்பதைத் தாமே ஆண்டும் காட்டினர்.

நன்னூலார், "பெயர்க்கும் ஈறாய்ப் பொருள் வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை" (291) எனப் பெயர்ப்பொருளை வேறுபடுக்கும் உருபுகளாலேயே வேற்றுமைகட்குப் பெயரிடப் பெறும் என்பதைக் குறிப்பாற் கூறி "பெயரே ஐ ஆல் கு இன்" (நன். 292) என்ற சூத்திரத்தால் அவற்றின் பெயர் முறை இது வாம் என விளக்கமும் தந்தார்.

ஆனால், 'இரண்டாவதன் உருபு ஐயே' (நன். 296), 'மூன்றாவதனுருபு ஆல் ஆன் ஒடு ஓடு' (நன். 297) என்பன முதலிய வற்றான் இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை யென்பன முதலாக எண்ணாற் பெயரிட்டு அதற்கு இன்னதுருபாம் என வேற்றுமையையும் அதன் உருபையும் வேறுபிரித்தாண்டார்.

நேமிநாத ஆசிரியர்,

> "காண்டகுபேர் ஐஒடுகு இன் அது கண்விளியென்று
> ஈண்டுரைப்பின் வேற்றுமை எட்டாகும்" (40)

என, உருபால் வேற்றுமைகட்குப் பெயராம் என்றார். பின்னரும் "ஐயென் உருபு இரண்டாவது" (நேமி. 42) என்பன முதலாக ஆண்டும் காட்டினார்.

வீரசோழிய ஆசிரியர், "எட்டாம் எழுவாய் முதற் பெயர் வேற்றுமை" (29) என எழுவாய் வேற்றுமைக்குமட்டும் அது காட்டும் பொருளாற் பெயர் தந்து ஏனைய வேற்றுமைகளை இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை என்பன முதலாக எண்ணாற் பெயர் கொடுத்தார்.

பின்னரும், "ஐயென்பது கருமத்திரண்டாவது" (வீர. 34) என ஆட்சியும் செய்வர்.

இங்ஙனம் தொல்லாசிரியர்களிற் சிலர் உருபே வேற்றுமையென்றும் உருபால் வேறுபட்ட பொருளே வேற்றுமை என்றும் கூற இலக்கணக் கொத்தாசிரியராகிய இவர்,

"உருபேற்றதனையும் உருபையும் உருபு
நோக்கிவந் ததனையும் வேற்றுமை என்பர்" (20)

எனக்கூறி, 'வேறு படுதலால் வேற்றுமை, வேறுபடுத்தலால் வேற்றுமை, வேற்றுமையை முடித்தலால் வேற்றுமை என்று பொருளுரைப்பர்' (இ. கொ. ப. 40) என்பர். வேறுபடுதலால் வேற்றுமை என்றது உருபேற்ற பெயர்ச்சொல் பொருள் வேறுபடுவதால் வேற்றுமை; உருபு பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்தலால் வேற்றுமை; முடித்தலால் வேற்றுமை; கொண்டு முடிக்குஞ் சொல்லாய்ப் பொருளை முற்றுவித்தலின் வேற்றுமை என்பது இதன் கருத்தாம். ஆகவே, உருபும், உருபேற்ற பெயரும், முடிக்கும் சொல்லும் வேற்றுமை என்ற பெயரைப் பெறும் என்றாராயிற்று.

ஆகவே, தொல்காப்பியரும் நன்னூலாரும் பின்னூலார்களும், உருபை வேற்றுமையென்றனர். நாம்,

"வினைமுதல் வினையே செயப்படுபொருளே
கருவி கொள்வோன் நீக்கம் குறையே
இடம் என எட்டும் வடமொழி வேற்றுமை
எழுஆறு என்றும் இயம்புந் தமிழ்நூல்" (இ. கொ. 13)

என உருபு நோக்கி வந்த பொருள் நிலையைக் கொண்டு வேற்றுமைகட்குப் பெயரிடுகின்றோம் என்கின்றார். இங்ஙனம் கூறிய இவர் கருத்து, உருபும் உருபேற்றபெயர்களும் கருவியாக நின்று உணர்த்துவன பொருளையேயாகலானும், அப்பொருள

களே சிறந்தனவாகலானும் பொருளைக் கொண்டு வேற்றுமைகட்குப் பெயரிடுதலே இயையும்; ஏற்றமும் உடையது என்பது போலும். அன்றியும், முதல்வேற்றுமைக்கு வினைமுதல் அல்லது கருத்தா என்றும், எட்டாம் வேற்றுமைக்கு விளி என்றும் பொருணிலை சுட்டிப் பெயர் சூட்டிய தொல்லோர்க்கும் இதுவே கருத்து எனவும் எண்ணினர் போலும்.

"எட்டும் வடமொழி வேற்றுமை" (இ. கொ. 13)

என்றது ஏன்?

வேற்றுமைகளை எட்டென்று தொகை செய்தது வடமொழி என்று பொதுவகையிற் கூறினர் இந்நூலாசிரியர். பாணினி முனிவர் வேற்றுமையாகிய 'தத்புருஷன்' பிரதமைமுதல் சப்தமிவரை ஏழென்றும் விளி, முதல் வேற்றுமையின் விகாரமாகிய 'சம்போதனப்பிரதமை'; அதாவது அழைத்தற் பொருளதாகிய முதல் வேற்றுமை என்றும் கூறுவர்.

எட்டு வேற்றுமை கொண்டது ஐந்திரவியாகரணம் என்பதனை,

"ஏழியல் முறையது எதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான்பெயரது விகாரமென்று
ஓதிய புலவனும் உளன் ஒருவகையான்
இந்திரன் எட்டாம் வேற்றுமை யென்றனன்"

என்ற அகத்தியனார் சூத்திரங்கொண்டு அறிகின்றோம். இச்சூத்திரமும், எட்டாம் வேற்றுமை பெயரது விகாரமாய்ப் பெயர் வேற்றுமையுள் அடங்காது; அது தனித்ததே என்பதை வற்புறுத்துகிறது. ஆகவே வேற்றுமை எட்டு என்ற தொகை வடமொழி இலக்கண நூலார் அனைவருக்கும் ஒப்பமுடிந்த துணிவன்று. இந்திரன் ஒருவனுடைய கருத்தே என்பது பெறப்படும்.

ஆசிரியர் தொல்காப்பியர் இத்தகைய கருத்து விளைவுகளை நோக்கியே ஏழென வரையறுத்து, விளியையுங் கூட்டி எட்டாக் கினர். பின்னூலார் பலரும் அந்நூலாரையே தொடர்ந்தனர். அங்ஙனமாகவும் 'எட்டும் வடமொழி' என்ற கூற்று இவர் கருத்தில் எப்படித் தோன்றியது என்பது சிந்தனைக்குரிய தொன்றாகும்.

வேற்றுமை ஏழ் என்றதும் ஆறு என்றதும் முதற்கண் கூறிய தொகையின் வரையறையை மறந்தோ - மறுத்தோ கூறியதன்று. ஏழ் என்றது, சிலர் கூற்றின் வண்ணம் விளியைப் பெயருள் அடக்கிப் பின் அடங்காமை உய்த்துணர்ந்து, விளியையும் உடன் எண்ணி எட்டாக்கி உரைத்தவதனால் பிறர் கருத்தை மறுக்கின்ற அளவிற்குப் பிறர் மதியாகக் கருதவைத்ததேயன்றித் தன் துணிபுரைத்ததாகாது.

ஆறென்றதோ எனின், தமக்கென்று தனித்த உருபு களுடைய ஐ முதல் கண்ணிறுன ஆறு வேற்றுமைகளும் தம் உருபு தொக்குத் தொகையாக வரும் என்று வேற்றுமைத் தொகையிலக்கணம் உணர்த்து முகத்தால் கூறியதன்றி வேற் றுமை ஆறே என வரையறுக்க வந்தது அன்று. ஆகவே இச் சூத்திரம் எம்மனோரின் சிந்தனையைத் தூண்டுகின்ற அளவிற்குத் துணை செய்வதொன்றென எண்ணி ஒழிவோம்.

காரகம்

வேற்றுமைகளின் பெயரும் தொகையுமாகிய இவற்றை பாராய்ந்த ஆசிரியர் ஓரிலக்கணத்தை வடமொழியிலிருந்து கொள்முதல் செய்கிறுர். அதுதான் காரகம். காரகம் என்பது

" விளி குறையிரண்டையும் விட்ட வேற்றுமைகள்
வினையான் முடியிற் காரகம் எனப்பெறும்
குறையும் வினைகொளின் ஒரோவழிக்கூடும் " (இ.கொ. 14)

என்ற சூத்திரத்தான் உணர்த்தப் பெறுகிறது. குறையென்னும் பெயருடைய ஆறும் வேற்றுமை வினைகொண்டு முடியாதது ஆதலால் அதனை நீக்கியது பொருந்தும். அதுவும் சாத்தனது வரவு, கிள்ளையது செலவு என வினைகோடலின் ஒருவகையிற் காரகம் எனல் கூடும் என்றார். அதுவும் இயைவது ஒன்றும். விளிவேற்றுமை யாண்டும், விளித்தல், வேண்டிக்கோடல், வாழ்த்துதல், வைதலாகிய வினைகளையே கொண்டு முடிவனவாகவும் அதனைக் காரகம் எனல் கூடாது, என ஒழித்தற்குக் காரணம் யாது? சிந்தனைக் குரியது.

வீரசோழிய ஆசிரியர் வடமொழியைப் பின்பற்றிப் பெயர்ச் சொல்லை நிலைமொழியாக நிறுத்தி, அதனொடு எழுவாய் முதலான எட்டு வேற்றுமை யுருபுகளையுங் கூட்டிப், பெயர் வேற்றுமை எட்டாம் என்பர் (வீர. 30). எங்ஙனமெனின், ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்னும் ஐம்பாலையுணர்த்தும் சொல்லும், ஒருவன், ஒருத்தி, ஒன்று, என்ற மூன்றனையும் சிறப்பித்துக் கூறுவதால் வரும் சாத்தனார், கொற்றியார், நரியார் போன்ற எட்டுச் சொற்களையும் நிறுத்தி அவற்றுடன் எழுவாய் முதல் விளியீறான எட்டுருபுகளையும் உறழ அறுபத்து நான்கு காரகமாம் என்பர் (வீர. 31). ஆகவே இவர் பெயர்ச்சொற்கள் உருபேற்ற நிலையிலேயே கொண்டுமுடிக்கும் வினையை அவாவி நிற்கும் ஆதலால் வினை கொள்வனவேயாகும். ஆதலால் அவை அனைத்தும் காரகமே என்பர் (வீர 30, 31).

இலக்கணக்கொத்து நூலார் 'வினையான் முடியிற் காரகம் எனப்பெறும்' என்பதால் 'மரம் நின்றது, மரத்தை வெட்டினான், மரம் வெட்டினான்' என்பன போல வினை கொண்டு முடிந்த பின்பே காரகம் எனப் பெயர்பெறும் என்கின்றார்.

தொகுத்து எண்ணின், வீரசோழியகாரர் சாத்தன், கொற்றன் முதலான உருபேற்க நிற்கும் பெயர்களாகிய பிரகிருதிகள்

பருவம் வந்த பெண் மணக்க இருப்பது போல, உருபேற்றவுடன் வினை கொண்டு முடிய நிற்றலின் அவற்றைக் காரகம் என்றார் இந்நூலாசிரியர் வினை கொண்டு முடிந்தபின் காரகம் என்றார். ஆனால், விளி வினைகொண்டு முடிந்தாலும் காரகம் ஆகாது என்றார். இவையே இவருள் வேற்றுமை.

இவையன்றி, வீரசோழியகாரர், கருத்தாககாரகம், கருமகாரகம், கரண (கருவி) காரகம், அவதிகாரகம், ஆதார காரகம், கோளிகாரகம் எனப் பொருள் நோக்கி அறுவகைப்படுப்பர் (வீர 34, 35) இதில் விளியும் குறையும் இல்லாமையை அறிக.

உருபேற்ற நிலையில் எட்டு வேற்றுமைகளையும் காரகம் என்றவர் பொருள் பற்றிய நிலையில் விளியையும் குறையையும் ஒழித்தமையும் ஊன்றி ஆராய்தற்குரியது.

பாபாடியகாராராகிய பதஞ்சலியார், காரகவிபக்தி, உபபதவிபக்தி என வேற்றுமை இருவகைப்படும் எனவும், இவற்றுள் காரகவிபக்தி வேற்றுமையுருபுகளை ஏற்ற சொல் வினைகொண்டு முடிய நிற்பதாம் எனவும், ஆறும் வேற்றுமை வினைகொண்டு முடியாதாயினும் 'தாயது நினைவு', 'முருகனது வரவு' என்றாற் போலத் தொழிற்றற்கிழமைப்பொருளவாய் நினைவு, வரவு முதலியவற்றின் வினைப்பகுதியைக் கொண்டு முடிதலின் காரகமாதற்கிழுக்கின்று எனவும், அது 'காரக ஷஷ்டி' எனப்பெயர் பெறும் எனவும் கூறுவர். இங்ஙனம் கூறிய பாடியகாரர் கருத்தை முழுதும் தழுவியே இந்நூலாசியர் காரக இலக்கணம் வகுத்தனர்.

வீரசோழியகாரர் உருபேற்ற சொல் வினைகொண்டே வேற்றுமைப் பொருளையுணர்த்துதலின் இங்ஙனம் கூறினார் போலும்

அடுத்து, இலக்கணக்கொத்து நூலார் ஏழாம் வேற்றுமை, எழுவாய் வேற்றுமை உருபுகளைப்பற்றிய சிறந்த சிந்தனைகள்

சிலவற்றையும் (25), செயப்படுபொருள் (26, 31), வினைமுதல் (28) கருவிவகைகள் (33), அவற்றுள் அடங்கும் கருவிகள் (34), கோடற்பொருளின் வகை (36), நீக்கப்பொருட்பாகுபாடு (38), கிழமைப்பொருட்பகுப்பு (40), இடப்பொருட்பகுப்பு (42), ஒரு பொருளில் வரும் பலவுருபுகள் (44–50), ஒவ்வொரு வேற்று மையும் அவ்வவற்றிற்குரிய பொருளேயேயன்றிப் பிறபொருளேயும் உணர்த்துதல் (51 61) முதலியனவாக வேற்றுமைகளைப்பற்றிய நுணுக்கங்களேக் கூறுகிறார்

இவற்றைப்பற்றிய சில கருத்துக்கள் சிந்தனைக்கும் உரியன. இங்ஙனமே ஏனைய இரண்டியல்களும் சிந்தனைக்கு விருந்தாவன.

இத்தகைய பல நுணுக்கங்கள் செறிந்த இந்நூலைச் செந் தமிழ் அறிஞர் உலகம் ஒதுக்குவதாயிற்று. மறுப்பாகாதனவற் றையும் மறுக்கின்ற அறிஞர் உலகம் இதனை எட்டிப் பார்க்கவும் மறுக்கிறது ஏன்? இவர் இருமொழி ஒற்றுமை கூறத்தலைப்பட்டு. ஒத்த கருத்துக்களை இணைத்து எண்ணும்போது ஆய்வுள்ளம் சிறக்கிறது என்பதைக்காட்டுகிறபோது,

"ஒன்றே யாயினும் தனித்தமிழுண்டோ
அன்றியும் ஐந்தெழுத்தால் ஒருபாடையென்று
அறையவே நாணுவர் அறிவுடையோரே" (7)

என்ற வழக்கு மொழிக் கலப்பைக்காட்டி, இருமொழிக்கும் பொதுத் தன்மை மிகுதியும் உண்டு என்பதைச் சிறிது நகைச் சுவைபடக்கூறியதன் விளைவு நம்மை அந்த நூலின் நுண்மையை நோக்காமற் செய்துவிட்டது.

ஆயினும் நாம் இந்த ஒரு குற்றத்தை மன்னித்து அவர் நூலிற் கிடைக்கும் நுட்பங்களையறிவோம்; அனுபவிப்போம்; ஆய்வோம்; குறை கூறுவோம்; நலம் பாராட்டுவோம்.

18

# சாமிநாத தேசிகரும் தமிழ் மொழியியலும்

இரா. கோதண்டராமன்
மதுரைப் பல்கலைக்கழகம்

பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றித் தமிழ் மொழியியலுக்கு அரிய தொண்டாற்றியவர்களுள் சாமிநாத தேசிகர் என்னும் இலக்கணப்புலவர் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். தமிழ் மொழியை வண்ணனை நிலையிலிருந்து ஆய்ந்த இவர், தம் ஆய்வு முடிபுகளை இலக்கணக் கொத்து என்னும் சிறுநூலில் நூற்பாக்கள் வடிவில் தொகுத்துக் கொடுத்துள்ளார். நூற்பா வடிவில் தாம் எழுதிய நூலுக்குத் தாமே உரை விளக்கமும் கண்டுள்ளார் சாமிநாத தேசிகர். இந்த முறை, அவர்தம் நூற்பாக்களின் கருத்தைப் பிறழ உணராமல் இருப்பதற்குப் பெரிதும் துணை புரிகின்றது சாமிநாததேசிகர் தமிழைப் போலவே வடமொழியிலும் புலமை பெற்று விளங்கியவர். இந்தப் புலமையை இலக்கணக் கொத்தில் ஆங்காங்கே இவர் வெளிப்படுத்திச் செல்கிறார். இலக்கணக் கொத்தை நன்கு புரிந்து கொள்ள வேண்டுமானல் வடமொழி அறிவும் வேண்டற்பாலது என்பதை,

" தமிழ்விதி வல்லராய் வடமொழி விதிசில
அறிந்த வர்க்கே இந்நூலாம் என்க" (இ. கொ. 7)

என்னும் நூற்பாவில் தேசிகர் தெளிவுபடுத்துகிறார்.

தேசிகரின் இலக்கணக்கொத்து வேற்றுமை இயல், வினை இயல், ஒழிபு இயல் என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது. பாயிரம் தொடங்கி, இலக்கணக்கொத்து 131 நூற்பாக்களில் பின்னப்பட்டுள்ளது. வேற்றுமை இயல் 52 நூற்பாக்களானும், வினை இயல் 22 நூற்பாக்களானும், ஒழிபியல் 45 நூற்பாக்களானும் இலக்கணக்கொத்து நடைபெற்றியல்கின்றது. தாமே தம் நூலுக்கு உரைகண்ட போதிலும் எல்லா நூற்பாக்களுக்கும் தேசிகர் உரை வகுக்கவில்லை. விளக்கமும் தெளிவும் வேண்டும் நூற்பாக்களுக்கு மட்டுமே இவர் பரக்க உரை வகுத்துள்ளார். பொருத்தமான எடுத்துக்காட்டுகளைத் தருவதன் வாயிலாகவே சில நூற்பாக்களைத் தேசிகர் விளக்கிச் செல்கின்றார். தேசிகரின் புலமை நலத்துக்குச் சான்றாக அவர்தம் நூற்பாக்களும், உரை விளக்கமும் விளங்குவதைக் கீழ்வரும் நூற்பாவின்கண்ணும் அதனை அடுத்துவரும் அதன் உரையின்கண்ணும் காணலாம்.

" விதிச்சொல் மறைப்பொருள் ஆகி வருநவும்
மறைச்சொல் விதிப்பொருள் ஆகி வருநவும்
விதிச்சொலின் முதனிலை மறைப்பொருள் பெறுநவும்
மறைச்சொலின் முதனிலை விதிப்பொருள் பெறுநவும்
உளவென மொழிகுவர் ஒருபுடை யோரே" (இ.கொ. 77)

உரை :— "அழுக்காறு-பொறாமை; அழுக்காறாமை-பொறுத்தல்; உடன்படல்-மறுமை; மறுத்தல்-உடன்படாமை; 'அறவினையாதெனிற் கொல்லாமை' 'கொல்லாமை மேற் கொண்டொழுகுவான்', இவை போல்வனவெல்லாம் விதிச்சொல் மறைப்பொருளும், மறைச்சொல் விதிப்பொருளும் என்க.

'உள்ளங்கையிலுரோமம் முளைத்ததாயின் அறிவிலானடங்குவன்'. இவற்றுள் முளைத்தது, அடங்குவன் என்னும் விதி

வினையினுள் முதனிலை பிரிந்து முளையாமையே துணிவு, அடங்காமையே துணிவு என்றே பொருள்படுதல் காண்க. இது விதிச்சொல்லின் முதனிலை மறைப்பொருள் பெற்றது.

இனி, ஒரு பொருளின் புடைபெயர்ச்சியே வினையென்பது எல்லாருக்கும் ஒப்ப முடிந்தது. அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சமென்பதும் அங்ஙன முடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக் கொள்ளுதலன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙன முடிந்தது. ஆகவே உண்டு நடந்தான் என்பது பொருந்தும் உண்டு நடவான் என்பது பொருந்தாது. இலக்கண வழுவேயாம் ஆகையால் அம்மறைச் சொல்லினுள் முதனிலையைப் பிரித்து, ஒருபொருளின் புடைபெயர்ச்சியாகிய புடைபெயர்ந்த நடத்தல் என்னும் தொழிற்பெயராக்கி, வினையெச்சத்தை வினைகொண்டு முடித்து, பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து உண்டு நடத்தலைச் செய்யான் என்று முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகர்க்கும் உரையாசிரியர்க்கும் நியமம். இது மறைச்சொல்லின் முதனிலை விதிப்பொருள் பெற்றது (இ கொ. ப. 69)".

மேற்குறித்த நூற்பாவும், அதன் உரையும் மொழியைப் பொருண்மை இயல் (Semantics) நிலையிலும் வைத்து அணுக வேண்டும் என்பதனை வலியுறுத்தும். இனி, தேசிகரின் புலமைக்கு உரைகல்லாக இலக்கணக்கொத்தில் விளங்கும் சில பகுதிகளைக் காண்போம்.

## எழுவாய்

எழுவாயாகச் செயல்படும் பெயர்கள் பல பொருண்மைகளை உடையனவாகத் தேசிகர் கருதுகிறார். எழுவாய், ஏவுதல் கருத்தாவாகவோ (எ-டு அரசன் தேர் செய்தான்), இயற்றுதல் கருத்தாவாகவோ (எ டு. தச்சன் தேர் செய்தான்), இவற்றின்

வேறாகவோ (எ-டு. சாத்தன் உறங்கினான்) அமையும் என்பது ஒரு சாரார் கொள்கை.

"ஏவுதல் இயற்றுதல் இவையின் வேறுதல்"
என வினை முதல் மூவகையாம் என்ப" (இ. கோ. 28)

ஆயினும், தேசிகர் 'வினை முதல் இன்னும் விரிக்கிற் பெருகும்' (இ. கொ. 29) என்று குறிப்பிடுவதுடன் அமையாது முந்தைய நூற்பா ஒன்றில் எழுவாய் பத்து நிலைகளினின்றும் ஆராயத் தக்கது என்று தெளிவுபடுத்துகிறார்.

"இருவகைச் செயப்படு பொருளே ஏதுத்
தன்வசம் தெரியாநிலை, தடுமாற்றம்
தொழிற்பெயர், ஏழில் தோன்றும் வினைமுதல்
கருவி, இடம், கொள்வானினும் கருதுவர் (இ. கொ. 26)

உரை : "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற்றாமே வரும்," "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்," "வரிசையால், வானூர் மதியம் போல் வைகலும் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்பனவற்றுள் "இன்னா தாமே வரும்", "கேண்மை தானே நந்தும்", "தொடர்பு தானே தேயும்" எனச் செயப்படுபொருள் தேற்றத்தோடு வினை முதலாய்ச் செயப்படுபொருள் குன்றிய வினை கொண்டது. 'திண்ணை மெழுகிற்று' எனச் செயப்படு பொருள் தேற்றமின்றி வினைமுதலாய்ச் செயப்படுபொருள் குன்றாத வினைகொண்டது. இவ்விரு வகையும் வடமொழி விதி யாகலின், விரிக்கிற் பெருகும். 'ஆதித்தன் கற்றீப் பிறப்பித்தான்,' 'காற்றுப் பழ முதிர்த்தது' —இவை ஏதுக்கருத்தா. 'சாத்தன் உண்டான்'. இது தன்வசக்கருத்தா. 'பாடஞ் செய்யப்பட்டது' இது தெரியாநிலை. தெரியா நிலையாவது வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பது. இது தெரியாநிலை எனவே ஏனைய தெரிநிலை என்க. 'ஒத்த கிழவனும் கிழத்தியும்

காண்ப'. இது தடுமாற்றம். தடுமாற்றமாவது ஓர் பொருளே ஒருகால் வினைமுதலாயும், ஒருகாற் செயப்படு பொருளாயும் நிற்றல். 'கொல்லாமை அறவினையெல்லாம் தரும், கோறல் பிற வினை யெல்லாம் தரும்', 'தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும், தீரா இடும்பை தரும்'. இவை தொழிற் பெயர்க் கருத்தா.

'கண் காணும்', 'குன்று குவட்டைத்தாங்கும்', 'தூண் போதி கையைத் தொட்டது', 'இரப்பவர் என்பெறினும் கொள்வர்', எனக் கருவி முதன் மூன்றும் முறையே காண்க. கருதுவர் எனவே இலக்கணமன்று (இ. கொ. ப. 45).

மேற்கண்ட நூற்பாவில் பேசப்படும் பல செய்திகள் தொடரினை மையமாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளன என்பது தெளிவு தற்கால மொழியியலில் மாற்றிலக்கணம் ஒரு புதிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி, தொடர்களைப் புதிய கோணத்தில் நின்று ஆராய வகை செய்துள்ளது. தேசிகர் மேற்கண்ட உரையில் காட்டிச் செல்லும் எடுத்துக் காட்டுக்களை நுணுகி நோக்கும் போது, மாற்றிலக்கணம் குறிப்பிடும் முறையில் மொழியை ஆராய வேண்டும் என்ற உணர்வு அவருக்கு இருந்தமை புலனாகிறது.

சில தொடர்களில் (எ-டு தாய் மகவுக்கு ஊட்டினாள், ஆசிரியன் மாணாக்கனுக்குப் படிப்பித்தான், தலைவன் தலைவியைப் புல்லினான்) ஒரு பயனிலை வினை இரு எழுவாய்களைக் கொண்டு இயலும் எனக் குறிக்கிறார் தேசிகர்.

"இருவினை முதலால் ஒரு வினையும் உள" (இ. கொ. 27)

இந்நூற்பாவுக்கு தேசிகர் காட்டும் வாக்கியங்களை உற்று நோக்கும் போது (எடுத்துக் காட்டுக்கள் மேலே தரப்பட்டுள்ளன), அவருடைய தொடரியல் உணர்வு தெற்றென விளங்கும்

தாய் மகவுக்கு ஊட்டினாள் என்ற தொடரனில் மகவு உண்டது என்ற ஒரு செய்தியும் அடங்கியுள்ளது. இவ் உண்மை புற அமைப்பில் (Surface structure) தோன்றவில்லையாயினும் மேற் படி தொடரனைப் புதை அமைப்பில் (deep structure) வைத்து ஆராய்கையில் தோன்றி நிற்பதை அறியலாம். புதை அமைப் யில் தாய், மகவு இரண்டு பெயர்களும் எழுவாய்களாக நின்று புற அமைப்பில் மகவு நான்காம் வேற்றுமைப் பொருண்மையை ஏற்கின்றது.

வேற்றுமை உருபேற்ற பெயர்களும் எழுவாயாகச் செயல் படுமாற்றினைத் தேசிகர் பின் வரும் நூற்பாவில் பேசுகிறார்.

> "ஒன்று மூன்று நான்கு ஆறு எனும் உருபொடு
> வருமே வினைமுதல் என வகுத் தனரே" (இ.கொ. 44)

உரை : "அவர் செய்தார் என்றும், அவராற் செய்யக்தகும் அக்காரியம், அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம் 'இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்', இன் என வரூஉம் வேற்றுமை உருபிற்கு இன் என் சாரியை இன்மை வேண்டும்' என்றும், அவரது வரவு என்றும் முறையே காண்க (இ. கொ. ப. 52)."

எச்சங்கள்

எச்சங்கள் தொடரன்களின் புதை அமைப்பில் பயனிலைக ளாகச் செயல்படுமாற்றினைத் தேசிகர் நன்கு உணர்ந்துள்ளார்.

"உண்டான் சாத்தன் ஊருக்குப் போனான் என்புழி, உண்ட சாத்தன் ஊருக்குப் போனான் எனப் பொருள் படுதல் காண்க. இது வினை முற்றுப் பெயரெச்சமானது வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான், சாத்தன் உழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி, சாத்தன் உழுதான் எனப் பொருள்பட்டு எச்சமும் முற்றாதல் காண்க" (இ. கொ. ப. 79).

பெயரெஞ்சு கிளவி

செயப்படுபொருள் குன்றுவினைகளின் அடியாகத் தோன்றிய பெயரெஞ்சு கிளவிகளை அடுத்துவரும் பெயர்கள் அக அமைப்பில் செயப்படுபொருள்களாக அமைதல் இயல்பு. தேசிகர் இத்தகைய பெயர்களின் முன்னர் நிகழும் பெயரெஞ்சு கிளவி களை நுட்பமாக ஆராய்கிறார். உண்டசோறு என்ற பெயர்த் தொடரில் உள்ள உண்ட என்னும் பெயரெஞ்சு கிளவி உண்ணப் பட்ட என்னும் செயப்பாட்டுப் பொருண்மையைத் தன்னகத்தே கொண்டுள்ளது என்று குறிப்பிடுகிறார் தேசிகர் (இ.கொ ப 62). இதனை மையமாகக் கொண்டு உண்ட சோறு என்னும் தொடரை (யாரோ ஒருவரால்) உண்ணப்பட்ட சோறு எனக் கொண்டு சோறு யாரோ ஒருவரால் உண்ணப்பட்டது என்ற அடிப்படை வாக்கி யத்தினின்றும் மேற்படி தொடர் பெறப்பட்டதாகக் கொள்ள வேண்டும். இதில் உள்ள ஒரு சிக்கல் யாதெனில் சோறு யாரோ ஒருவரால் உண்ணப்பட்டது என்ற வாக்கியம் தன்னகத்துள் யாரோ ஒருவர் சோறு உண்டார் என்ற வாக்கியத்தை அதற்கு நிகரான செயப்பாட்டு வினை வாக்கியத்துடன் எவ்வாறு பொருத்திக் காட்டுவது என்பதேயாகும். இக்கண்ணோட்டத்தில் தேசிகர் நோக்கவில்லையாதலால் இது மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்

நிலைமாற்றம்

சொற்கள் அல்லது தொடர்கள், இவற்றின்கண் பொருந்தி நடைபெறும் சில உறுப்புக்கள் புதை அமைப்பில் ஓரிடத்தில் பொருந்தி, புற அமைப்பில் பிறிதோரிடத்துக்கு நகர்ந்து செல் வதே நிலைமாற்றம் ஆகும். இத்தகைய நிலையைப் பொருத்தமில் புணர்ச்சி என்ற தலைப்பின் கீழ் ஆராய்கிறார் தேசிகர்.

"கொடிச் சேவலான், செய்தவேள்வியன், கொண்ட பகை யன், உடைமரவுரியான் இவை போல்வன எல்லாம் சேவற்

கொடியான், வேள்வி செய்தவன், பகை கொண்டவன், மாவுரி உடையான் என்று விகுதி பொருந்தலே முறையெனக. செல்வத்துள் எல்லாம் தலை, நடுவூருள் நச்சுமரம் இவை போல்வன எல்லாம் செல்வம் எல்லாவற்றுள், ஊர் நடுவுள் என்று உருபு பொருந்தலே முறையெனக. 'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே', சாத்தன் வருவதற்கு உரியனுமாவான் இவை போல்வன எல்லாம் புணரியல் நிலையிடையும் குறுகல் உரித்து, சாத்தன் வருதற்கும் உரியன் ஆவன் என்று உம்மை பொருந்தலே முறையென்க" (இ. கொ. 109, 110).

நிலைமாற்றங்களை விரிவாக ஆராயும் தேசிகர் அவற்றை இரண்டு வகையாகக் கொள்கிறார். ஒன்று தமிழுக்கு உரியதென்றும் ஏனையது வட மொழிக்கு உரியது என்றும் கூறி இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டினைப் பின்வருமாறு விளக்குகிறார்.

"தமிழ் மொழி விதியால் நிலைமாறுதற்கும், வடமொழி விதியால் நிலைமாறுதற்கும் வேறுபாடு என்னெனின் நிலைமொழியும் வருமொழியும் திரியாது தம்முள் நிலைமாறுதல், திரிந்து தம்முள் நிலைமாறுதல் என்க" (இ கொ. ப. 112-113).

இவ் வரையறையைப் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் மூலம் தேசிகர் தெளிவு படுத்துகிறார்.

அ. தமிழ் மொழி விதியால் நிலைமாறுதல்

நுனிக்கொப்பர், கடைக்கண். அடிநா, இடைநா, கடைநா, அரைக்காசு, முன்மாலை, பின்மாலை, வந்தான் உழுது, செய்தான் மாடம், இருந்தான் குன்றம் (இ. கொ. ப. 112) வைக்கும் தன்னுளே யெடுத்து பருகுவன் பைதல் நோயெல்லாம் கெட (இ கொ. ப. 113).

(ஆ) வடமொழி விதியால் நிலைமாறுதல்

செய்த வேள்வியர், எய்திய செல்வத்தர், கழிந்த உண்டியர், வேண்டாவுயிரார், அருங்கேடன், கொண்ட கூழ்த்தாளி, கூப்பிய கையினர், வெறுத்தவாசையர், பொறுத்த சடையினர், கெட்டவறுமையர், விட்ட அவாவினர், வேர்த்து வெகுளார், கொழுநற் றொழுதெழுவாள், வாய்பிளந்து உறங்கினன், குறட்டை விட்டு உறங்கினன் (இ.கோ.ப 112).

தொடர்நிலைகள்

வடமொழியின் செல்வாக்கால் தேசிகர் வாக்கிய அமைப்பில் தொடர்கள் சென்று இயையுமாற்றை இருவகையாக ஆராய்கிறார். இதனை 'ஒரு தொடர் பலதொடர் எனத்தொடர் இரண்டே' (இ. கொ. 124) என்ற நூற்பாவில் குறிப்பிட்டு, இவ் இருவகைத் தொடர்களுக்கும் பின்வரும் எடுத்துக்காட்டுக்களைக் காட்டுகிறார் தேசிகர்.

"சாத்தன் அரிசி, நெற் பயறு முதலானவை கொண்டு வந்தான்; கொற்றன் பூ, இலை, காய், பழம் முதலானவை கொண்டு வந்தான்; தேவன் மிளகு, புளி, கடுகு முதலானவை கொண்டு வந்தான்; பூதன் சீலை, தாலி, பூண், அணி முதலானவை கொண்டு வந்தான்; அரசன் அக்காலத்து அமைச்சோடு வந்தான்; தலைவன் தலைவிக்குத் தாலிகட்டினன். இப்பல தொடர்களும் வரைவு என்னும் ஒரு பொருட்கண்ணே வருதலின் ஒரு தொடரேயாம். அங்ஙனமாதல், வந்தான் என்னும் ஐந்து முற்றையும் செயவென்னும் எச்சமாக்கி, நோக்குக........

சாத்தனை வரைவிற்கு வடக்கனுப்பினன்; கொற்றனை இழவுக்குக் கிழக்குப் போக்கினன்; தேவனை நெற்கொள்ளத் தெற்கே ஏவினன்; பூதனைத் தேன் விற்க மேற்கே செலுத்தினன். இவையெல்லாம் ஒருவன் வினையே யாயினும்

ஒன்றற்கொன்று மறையாய்ப் பொருந்த மின்மையால் பல தொடரே யாமென்க........

இவற்றை வடநூலார் ஏக வாக்கியம், பின்ன வாக்கியம் என்பர். அதனுன் மொழி பெயர்த்தனம் என்க" (இ. கொ. ப. 128, 129).

தேசிகர் ஆய்வுத்திறனையும், முறையையும் இச்சிறு கட்டுரையில் விரிவாக ஆராய்வதற்கில்லை. ஆயினும் இக்கட்டுரையில் எடுத்துக்காட்டிய செய்திகள் மூலம் தேசிகர் மொழியை எவ்வாறு அணுகினர் என்பது ஓரளவு புலனுகும். இலக்கணக் கொத்தில் அவர் கூறிச் செல்லும் கருத்துக்களை நூற்றுக்கு நூறு அப்படியே நாம் ஏற்றுக்கொள்ள முடியாது என்ருலும், தமிழ் மொழியியலுக்கு அவர் ஆற்றியுள்ள தொண்டினை எள்ளளவும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. "ஐந்தெழுத்தால் ஒரு பாடை என்று அறையவே நாணுவர் அறிவுடையோரே" (இ. கொ. 7) என்று பாயிரத்தில் தமிழைப் பற்றித் தேசிகர் குறிப்பிட்டுவிட்ட ஒரே காரணத்தால், அறிஞருலகம் அவரைப் புறக்கணித்து வருவது மிகவும் வருந்தத்தக்கது. அவர் நூலில் தள்ளவேண்டுவன சில; கொள்ள வேண்டுவன பல. இதனைக் கருத்தில் கொண்டு மொழியியலார் தேசிகரின் இலக்கணக் கொத்தினை அணுகுதல் வேண்டும்.

# 19

# நேமிநாதம்

கு. சுந்தரமூர்த்தி
*செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்*

குணவீரபண்டிதரால் எழுதப்பெற்ற இந்நூல் வெண்பா யாப்பால் அமைந்துள்ளது. எழுத்து, சொல் பற்றிய சிலக் கணங்களே இதன்பால் உள. பாயிரச் செய்யுட்கள்—2, அவையடக்கச்செய்யுள்—1, எழுத்ததிகார வெண்பாக்கள்-24, சொல்லதிகார வெண்பாக்கள்-70, ஆக 97 வெண்பாக்களையுடைய இந்நூல் தொல்காப்பியத்தின் கருத்துக்களைத் தொகுத்துச் செய்யப்பட்டதாகும்.

## நூவலும் பொருளும், திறனும்

எழுத்துச் சொல்லென வகுத்துக் கொண்ட இரு அதிகாரங்களுள், எழுத்ததிகாரத்துள் உட்பிரிவு ஏதும் இல்லை. சொல்லதிகாரத்தில் மட்டும் 9 உட்பிரிவுகள் உள்ளன. அவை தொல்காப்பியச் சொல்லதிகாரத்தோடு பெரிதும் ஒத்தவை.

| | தொல் — சொல் | நேமி — சொல் |
|---|---|---|
| 1. | கிளவியாக்கம் | மொழியாக்க மரபு |
| 2. | வேற்றுமையியல் | வேற்றுமை மரபு |
| 3. | வேற்றுமை மயங்கியல் | உருபு மயங்கியல் |
| 4. | விளி மரபு | விளி மரபு |
| 5. | பெயரியல் | பெயர் மரபு |
| 6. | வினையியல் | வினை மரபு |
| 7. | இடையியல் | இடைச்சொல் மரபு |
| 8. | உரியியல் | உரிச்சொல் மரபு |
| 9. | எச்சவியல் | எச்சமரபு |

இங்ஙனம் எழுத்தைச் சுருக்கியும் சொல்லிலக்கணத்தைப் பெருக்கியும் கூறுவதற்குக் காரணம் வெளிப்படையாகப் புலப்படவில்லை. எனினும் ஒரு சில காரணங்களை எண்ண இடனுண்டு.

1. மக்கள் முதல் முதல பேசத் தொடங்கிய போது முழுச் சொற்களையே பேசத் தொடங்கியிருப்பர். பின்பே அவற்றிற்கு உறுப்பாய எழுத்திலக்கணத்தை ஆராய்ந்திருப்பர். இன்னும் குழந்தைகள் சொல்லிலிருந்தே எழுத்திற்கு வருகின்றனர்.

2. கருத்து வேற்றுமைக்கு இலக்காக இருப்பதை விரித்தும் அஃதில்லாததைச் சுருக்கியும், அன்றி விடுத்தும் கூடுதல் ஆக்கலாம். இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம் என்பன இவ்வகையன. இவை மேலும் ஆய்தற்குரியன.

எழுத்ததிகாரம்

எழுத்துக்களை முதல், சார்பு, என இருவகையாக இவ்வாசிரியர் வகுத்துக் கொள்ள வில்லை.

> "ஆவி யகரமுத லாறிரண்டா மாய்தமிடை
> மேவுங் ககரமுதன் மெய்களா — மூவாறுங்
> கண்ணு முறைமையாற் காட்டியமுப் பத்தொன்று
> நண்ணு முதல் வைப்பாகு நன்கு" (நேமி. 1)

என்பது இவர் கூறும் நெறி. ஆனால் தொல்காப்பியரும் (தொல். 1) நன்னூலாரும் (நன். 58) பாகுபடுத்தி யுரைத்துள்ளனர். இவர் ஆய்தக் குறுக்கம் கால் மாத்திரையும், ஐகார ஔகாரக் குறுக்கம் முறையே $1\frac{1}{2}$ மாத்திரையும் பெறும் என்பர் (நேமி. 5). தொல்காப்பியர் இவற்றைக் கூறவில்லை. நன்னூலார் (நன். 99) ஐகார ஔகாரக் குறுக்கங்கள் ஒரு மாத்திரை பெறும் என்பர்.

தொல்காப்பியர் (தொல். 83) தலை, மிடறு, நெஞ்சு, ஆகிய மூன்று இடங்களிலும் உந்தியில் தோன்றிய காற்று இடம் பெற்றுப் பல், இதழ், நா, மூக்கு அண்ணமாகிய ஐந்து முயற்சிகளால் எழுத்தாகப் புலப்படும் என்றனர். நன்னூலார் (நன். 74) தலை, மிடறு, நெஞ்சு ஆகிய இவற்றோடு மூக்கையும் சேர்த்து இடம் நான்காகவும், முயற்சி உறுப்பு நான்காகவும் கொண்டு கூறுவர். இவ்வாசிரியர் தொல்காப்பியரையே தழுவியுள்ளார்.

"உந்தியிற் றோன்று முதான வளிப்பிறந்து
கந்தமலி நெஞ்சுதலை கண்டத்து - வந்தபின்
ஞசிறு வண்ண மிதழெயிறு மூக்கெனப்
பேசு மெழுத்தின் பிறப்பு." (நேமி. 6)

இங்ஙனம் எழுத்துகட்குப் பொதுப் பிறப்பைக்கூறி ஏனைய சிறப்பிலக்கணப் பகுதிகளைக் கூறாது வாளா விடுத்தனர்.

மொழி முதல் எழுத்துக்கள்

சகரம் எல்லா உயிருடன் கூடி மொழிக்கு முதலாகும் என்பர் (நேமி. 7). நன்னூலாரும் இக்கருத்தினரே. ஆனால் தொல்காப்பியர் அ, ஐ, ஔ நீங்கலாக வரும் என்பர்.

"ஆவோடல்லது யகரம் முதலாது" (தொல். 65)

என்பர் தொல்காப்பியர். நன்னூலார் (நன். 104) அ, ஆ, உ, ஊ, ஒ, ஔ யம்முதல் வரும் என்பர். ஆனால் இவ்வாசிரியர் (நேமி. 7) ஆ, ஊ, ஓ ஆகிய மூன்று உயிருடனும் வரும் என்கிறார்.

ஞகரம் ஆ, எ, ஒ என்ற மூன்று உயிருடனும் கூடிவரும் என்பர் தொல்காப்பியர் (தொல். 64). இவ்வாசிரியரும் இக்கருத்தினரே (நேமி. 7). ஆனால் நன்னூலார் (105) இவற்றோடு அகரத்தையும் சேர்த்துக் கூறுவர். தொல்காப்பியர் கூறும் மொழி முதல் குற்றிய லுகரத்தை இவ்வாசிரியர் கூறவில்லை.

மொழிக்கு ஈறும் எழுத்துக்கள்

உயிர் 12-ம் மொழிக்கு ஈறுகும் என்பர் தொல்காப்பியரும் (தொல். 69, 70), நன்னூலாரும் (நன். 107). இவர் எ, ஒ, ஔ ஆகிய மூன்றையும் விலக்கி 9 மட்டுமே மொழிக்கு ஈறுகும் என்பர் (நேமி. 8). மெய்யெழுத்துக்களுள் ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள ஆகிய 11-ம் மொழிக்கு இறுதியில் வரும் என்பர் தொல்காப்பியர் (தொல். 78). இவற்றுடன் மொழியிறுதிக் குற்றியலுகரத்தையும் சேர்ப்பர் நன்னூலார் (நன். 107). இவ்வாசிரியர் ஞ, ந, ஆகிய இரண்டையும் விலக்கி ண, ன, ம, ய, ர, ல, வ, ழ, ள ஆகிய ஒன்பது எழுத்துக்களும் மொழிக்கு இறுதியாகும் என்பர் (நேமி. 8).

போலி

தொல்காப்பியர்,

| | |
|---|---|
| அ + இ = ஐ | (தொல். 54) |
| அ + உ = ஔ | (தொல். 55) |
| அ + ய் = ஐ | (தொல். 56) |

ஆகும் என்பர். இவற்றுள் இவ்வாசிரியர் (நேமி. 9) முன்னையதை விடுத்துப் பின்னையதையே தழுவினர்.

அ + வ் = ஔ

அ + ய் = ஐ

அன்றியும் ச, ஞ, ய, முன் மொழிக்கு முதலில் நிற்கும் அகரமும், இடையில் நிற்கும் அகரமும் ஐகாரமாகும் என்பர் இவர் (நேமி. 9).

| | | | |
|---|---|---|---|
| எ-டு | தச்சு | — | தைச்சு |
| | மஞ்சு | — | மைஞ்சு |
| | தய்யல் | — | தையல் |
| | அரசு | — | அரைசு |
| | இலஞ்சி | — | இலைஞ்சி |
| | அரயர் | — | அரையர். |

நன்னூலார் (நன். 125) ஐ, ஔ வடிவு கூறுமிடத்து இவ்விரு வரினும் வேறுபடுவர்; ஏனைய கருத்தில் இவரை ஒப்பர் (நன்.123).

வடமொழி முடிபு

இதுபற்றி இரு வெண்பாக்கள் உள்ளன (நேமி. 10, 11)

| | | | | |
|---|---|---|---|---|
| அருகன் | — | ஆருகதன் | | (அருகனைத் தெய்வமாக உடையவன்) |
| தசரதன் | + | மகன் | = | தாசரதி |
| சிவன் | — | சைவன் | | (சிவனைத் தெய்வமாக உடையவன்) |
| இருடிகள் | — | ஆரியம் | | (இருடிகளால் இயற்றப்பட்டது) |
| நரன் | + | இந்திரன் | = | நரேந்திரன் |
| அமரன் | + | ஈசன் | = | அமரேசன் |
| குலம் | + | உத்துங்கன் | = | குலோத்துங்கன் |
| கூப | + | உதகம் | = | கூபோதகம் |
| சஞ்சலம் | — | அசஞ்சலன் | | (சஞ்சலம் இல்லாதவன்) |
| அகம் | — | அநகன் | | |
| உசிதம் | — | அநுசிதம் | | (யோக்கிய மில்லாதது) |
| வேரம் | — | வைரம் | | |
| கோசலை | — | கௌசலை | | (கோசலநாட்டில் பிறந்தவள்) |
| சோமன் | + | புத்திரன் | = | சௌமியன் (புதன்) |

இத்தகைய சொற்களுக்குரிய விதியை இவர் அமைத்துள்ளார். நன்னூலார் பதவியலில் வடமொழி இலக்கணம் பற்றி உரைத்துள்ளார்.

புணரியல்

இதுபற்றி 13 நூற்பாக்கள் (நேமி. 12-24) உள்ளன. தொல்காப்பியரோ நன்னூலாரோ பிரித்தவாறு போல உயிர், மெய், உருபு எனப்பிரித்துப் பாகுபாடு செய்யாது மிகச் சுருக்கமாகச் சில முடிபுகளையே கூறுகின்றார்.

உயிரும் மெய்யும் தம்மொடு தாமும், தம்மொடு பிறவுமாய் நின்று புணரும் எழுத்துவகைப் புணர்ச்சியையும், பெயரும் வினையும் தம்மொடு தாமும், பிறவுமாய் நின்று புணரும் புணர்ச்சியையும் தொல்காப்பியர் கூறியவாறு (தொல். 107, 108) கூறுகின்றார். இவ்வகையில் தோன்றல், திரிதல் கெடுதல் ஆகிய விகாரங்கள் நிகழும் என்பர் (நேமி. 12).

உடம்படுமெய்

தொல்காப்பியர் உடம்படுமெய் வருதலைப் பொதுவாகவே குறிப்பர். இவர் அங்ஙனமின்றி

"மூன்றுநான்கு ஒன்பா னுயிர்ப்பின்னும் அல்லாத
வான்ற உயிர்ப்பின்னும் ஆவிவரின் – தோன்றும்
யகரவகரம் இறுதியிடத் தோரோர்
மகரங் கெடவகர மாம்" (நேமி. 13)

என விதந்து கூறுகின்றார்.

நன்னூலாரும் "இ ஈ ஐ வழியவ்வும், ஏனை உயிர்வழிவவ்வும்" (நன். 162) வரும் என்பர். "ஏ முன் இவ்விருமையும்" (நன். 162) வரும் என்றது தொல்காப்பிய, நேமிநாத ஆசிரியர்கள் கூறாத தொன்றும். தொல்காப்பியத்துள் இளம்பூரணரும் (தொல். எழுத்து. இளம். ப. 76), நச்சினார்க்கினியரும் (தொல். எழுத்து. நச்சி. ப. 94) ஒன்றென முடித்தலால் விகாரப்பட்ட மொழிக் கண்ணும் உடம்படுமெய் கொள்க என்றனர். இவ்வாசிரியர் இதனையே "இறுதியிடத்து ஓரோர் மகரங்கெட வகரமாம்" (நேமி. 13) என்றனர்.

(எ-டு) மரம் + அடி = மரவடி
வெண்கலம் + ஓசை = வெண்கலவோசை

குற்றுகர ஈறு

நாகு + அழகு = நாகழகு

இங்குக் குற்றியலுகரம் ஈறுகெட்டு உயிர் ஏறிற்று, கெடாது நின்று உயிர் ஏறிற்று? என்பது ஆய்வு.

"ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே" (தொல். 459)

"ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மரபே" (தொல். 470)

என்ற நூற்பாக்களால் உகரம் கெடாது நின்றே உயிர் ஏறும் என்பது தொல்காப்பியருக்குக் கருத்தாகிறது. இளம்பூரணருக் கும் (தொல். எழுத்து. இளம். ப. 57) நச்சினார்க்கினியருக்கும் (தொல். எழுத்து. நச்சி. ப. 72, 73) இதுவே கருத்தாம். ஆனல் இவ்வாசிரியர் "குற்றுகரம் ஆவிவரில் சிதையும்" (நேமி. 14) எனக் கூறுகிறார். நன்னூலாரும், "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" (நன். 164) என்பர்.

நாடுரி

நாழி + உரி = நாடுரி

இதற்கு உரிய விதி (நேமி. 19) தொல்காப்பியத்தோடு (தொல். 240) ஒத்துள்ளது. "உரியின் வழியே யகர உயிர் மெய்யாம்" (நன். 174) என்பது நன்னூலார் சிறப்பாக எடுத்து மொழிந்ததாகும்.

தொண்ணூறு, தொள்ளாயிரம், இவற்றிற்கு உரிய விதி (நேமி. 21) தொல்காப்பியத்தோடு (தொல். 445) ஒத்துள்ளது.

சொல்லதிகாரம்

மொழியாக்க மரபு

இவ்வியலில் 14 நூற்பாக்கள் உள்ளன. கிளவியாக்கத்தைப் பெரிதும் தழுவிச் செல்கின்றது. எனினும் அவ்வியலில் இருந்து மிகச்சில விதிகளையே ஆசிரியர் எடுத்துக் கொள்கின்றார்.

உயர்திணை

மக்களையும் தேவரையுமே உயர்திணை என்பர் தொல்காப்பியர். இவர் "மக்கள் நரகரே வானோர் எனும் பொருள்கள், தொக்க உயர்திணையாம்" (நேமி 27) எனக் கூறுகிறார். நன்னூலாரும் (நன். 261) இக்கருத்தினரே எனினும் நரகரைச் சேர்த்தல் பொருத்தமில்லை என்பது தெய்வச்சிலையார் கருத்து (தொல் சொல். தெய்வ. ப. 11, 12). மக்களிலும் நன்கு மதிக்கப்படுகின்றவர்களே உயர்திணையாவர் என்னும் தொல்காப்பியக்கருத்து (தொல். 484) நுணுகி எண்ணுதற்குரியது.

செப்புவழுவமைதி

செப்பிற்கு மறுத்தல், உடன்படுதல், ஆகிய இரண்டுமே உரியன. வினா எதிர் வினாதல், உற்றதுரைத்தல், ஏவல், உறுவது கூறல் ஆகிய நான்கும் மறுத்தற்கோ அன்றி உடன்படுதற்கோ நேரிதாக உரியவன்றேனும் குறிப்பாகத் தம் கருத்தைத் தருதலின் இவையும் செப்பே என்பர் (நேமி. 31). தொல்காப்பியர் வினா எதிர் வினாதலை மட்டும் விதந்து செப்பில் அடக்குவர் (தொல். 497).

"சுட்டுமறை நேர் ஏவல் வினாதல்
உற்றதுரைத்தல் உறுவது கூறல்
இனமொழி எனும் எண் இறையுள் இறுதி
நிலவிய ஐந்தும் அப் பொருண்மையின் நேர்ப" (நன். 386)

எனச் செப்பை நன்னூலார் எண்வகைப் படுத்துவர்.

"உயர்வும் இழிவும் உவப்பும் சிறப்பும்
அயர்வில் திணைபால் மயங்கும் - செயிரில்
வழக்கும் தகுதியுமாய் வந்தொழுகும் சொற்கள்
இழுக்கல்ல முன்னை இயல்பு"[1] (நேமி. 35)

"பெண் ஆண் ஒழிந்த பெயர்தொழில் ஆகியசொல்
உண்மை இருதிணைமேல் உய்த்தறிக[2] - எண்ணி
இனைத்தென்று அறிந்த சினைமுதற் பேர்க்கெல்லாம்
வினைப்படுப்பின் உம்மை மிகும்"[3] (நேமி. 36)

"பொதுப்பிரிபால் எண்ணொருமைக் கண்ணன்றிப் போகா[4]
பொதுத்தொழிலை ஒன்றாற் புகலார்[5] - மதித்த
ஒருபொருள்மேல் பலபெயர் உண்டானால் அவற்றிற்கு
ஒருவினையே சொல்லுக ஓர்ந்து"[6] (நேமி. 37)

இவ்விலக்கணங்கள் தொல்காப்பியக் கருத்தினை அடியொற்றி[7], முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோற் போற்றியமைக்கு எடுத்துக்காட்டாக அமையக் காணலாம்.

## வேற்றுமை மரபு

இதன்கண் ஏழு வேற்றுமைக்குரிய உருபுகளும் அவற்றிற்கு உரிய பொருளும் மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. எழுவாய் வேற்றுமையின் இலக்கணம் சுருங்கிய சொல்லால் விரித்துப்பொருள் விளங்கச் சொல்லி இருப்பது அறிந்து இன்புறத்தக்கதாகும்.

---

1. தொல். 500
2. தொல். 538
3. தொல். 516
4. தொல். 527
5. தொல். 529
6. தொல். 525
7. அடிக்குறிப்புகள் 1-6 அவ்வவ்விடங்களில் தழுவப்பெற்ற தொல்காப்பிய நூற்பாக்களைக் குறிக்கின்றன.

"பெயர் எழுவாய் வேற்றுமையாம் பின்பதுதான் ஆறு
பயனிலையும் ஏற்கப்படுதல் – கயல் விழியாய்
ஈற்றின் உருபாறும் ஏற்றல் முக்காலமும்
தோற்றுமை நிற்றல் துணிபு" (நேமி. 41)

உருபு மயங்கியல்

இது வேற்றுமை மயங்கியல் எனவும் சில படிகளில் காணப்படு கிறது. இதை ஆசிரியர் மூன்று நூற்பாக்களால் விரித்துப் பேசுகின்றார். வேற்றுமை மயக்கம் என்றால் என்ன என்பதைத் தொல்காப்பியத்திலுள்ள கருத்துக்களின் சாரமாகத் தொகுத்துக் கூறியிருக்கும் திறம் காண்பதற்குரியது.

"வேற்றுமை யொன்ற னுரிமைக்கண்வே றொன்று
தோற்றல் உருபு தொகவருதல் – ஏற்ற பொருண்
மாறினுந் தானிற்றல் வந்தொன்றின் ஒன்றேற்றல்
தேறவரு மெய்ந்நூற் றெளிவு" (நேமி. 45)

ஆகுபெயர் இலக்கணமும் இவ்வியலில் மிகச்சுருக்கமாகக் கூறப் படுகின்றது (நேமி. 47).

விளி மரபு

தொல்காப்பியத்தோடு ஒத்துச் செல்லும் இவ்வியலை ஆறு நூற்பாக்களில் (நேமி. 48-53) விரித்துக்கூறியுள்ளார். ஆனால் அங்குள்ள உயர்திணை விரவுப் பெயர், அஃறிணை விரவுப் பெயர் என்ற சிக்கல் ஈண்டில்லை.

பெயர் மரபு

இவ்வியலில் உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர், விரவுப் பெயர் எனப் பாகுபாடு செய்து அவற்றிற்கு உரிய பெயர்களை எல்லாம் விரித்துக் கூறும் ஆசிரியர் சில பெயர்கள் திரிந்து வரு மாற்றையும் கூறுகின்றார் (நேமி. 60).

அவையாவன :—

| | | |
|---|---|---|
| பெயர் | — | பேர் |
| பெயர்த்து | — | பேர்த்து |
| ஒடு | — | ஒடு |
| நீயிர் | — | நீர் |
| எவன் | — | என், என்னை |
| பொழுது | — | போது |
| யா | — | ஆ (யாடு, ஆடு போல்வன) |

கள் விகுதி

இவ்விகுதி அஃறிணைக்கு உரியதென்பர் தொல்காப்பியர். இவர், "கள்ளொடு வந்தால் இருதிணைக்கும் பன்மைப்பால், ஒள்ளிழையாய்த் தோன்றலும் உண்டு" (நேமி. 61) எனக் கூறுகின்றார். நன்னூலாரும் இக்கருத்தினரே (நன். 278, 280).

வினை மரபு

இவ்வியலை பனிரெண்டு நூற்பாக்களில் கூறுகின்றார்.

"சாற்றும் பெயர்வினை யெச்சங்கள் தாமடுக்கித்
தோற்றல் எதிர்மறுத்துச் சொன்னாலும் - ஏற்றபொருள்
குன்றாச் சிலசொல் இடைவந்து கூடியுடன்
நின்றுதல் மெய்ந்நூல் நெறி" (நேமி. 70)

இந்நூற்பாவில் தொல்காப்பியம் 718, 721, 722 ஆகிய மூன்று நூற்பாக்களின் கருத்துக்களும் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளதைக் காணலாம்.

இடைச்சொல் மரபு

இடைச்சொல் ஆறுவகைப்படும் என்பர் (நேமி. 75). அவை சாரியை, உருபுகள், தத்தம் குறிப்பில் பொருள் செய்குந, அசைநிலை, விகுதிகள் இசைநிறை என்பன. தொல்காப்பியர் உவம 'உருபுகளையும் இடைச்சொல் என்பர் (தொல். 735).

நன்னூலாரும் (நன். 420) இதனை ஏற்பர். வினைச்சொல்லில் காலமொடு வரும் இடைநிலைகளைத் தொல்காப்பியர் இடைச் சொல் என்றார். ஆனால் இவர் வினைச்சொற்கு ஈறாகிய விகுதி களை இடைச்சொல் என்பர். நன்னூலார் வினை (நன். 420) எனப் பொதுப்படக் கூறி இரண்டற்கும் ஏற்ப அமைத்துள்ளார்.

உரிச்சொல் மரபு

உரிச்சொல் இலக்கணம் கூறும் வகையில் தொல்காப்பிய ரையே (தொல் 782) பெரிதும் தழுவுகின்றார் (நேமி. 80). இவர் அவரால் கூறப்பெறாத உரிச் சொற்கள் சிலவற்றையும் கூறுகின்றார். 1. பொன்மை (நிறம்) (நேமி. 81) 2. நொடை (விலை) (நேமி. 81) 3. கொம்மை (இளமை) (நேமி. 83) 4. குரை (ஒலி) (நேமி. 84) என்பன.

எச்சமரபு

தொகை இலக்கணம்

உருபு தொகுதல், ஒட்டி ஒருசொல் நீர்மைப் படுகல் ஆகிய இரண்டையும் தொகை இலக்கணமாகக் கொள்வர் (நேமி 85). நன்னூலரும் (நன். 361) இக்கருத்தினரே. தொல் காப்பியத்துள் இவ்விலக்கணம் பரந்து படக் கூறப்பெற்றுள்ளது (தொல். 895-904)

பண்புத்தொகையுள் இருபெயரொட்டைக் கூறாது, ஆகு பெயர் இலக்கணத்துள் இருபெயரொட்டைக் கூறியுள்ளார் தொல்காப்பியர் (தொல் 598). இவ்வாசிரியர் பண்புத்தொகை யுள் அதனைக் கூறுகின்றார். 'பண்பும், இருபெயரொட்டும் தோன்றுமேல் அது பண்புத்தொகை' (நேமி. 86) என விளங்க உரைத்துள்ளார்.

அன்மொழித்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, வேற்றுமைத்தொகை ஆகிய மூன்று தொகைக் கண்ணும் பிறக்கும் என்பர் தொல்காப்பியர் (தொல். 901). இவ்வாசிரியர் வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை என ஐந்தொகைக்கண்ணும் பிறக்கும் என்பர் (நேமி 87). நன்னூலாரும் (நன். 369) இக்கருத்தினர். தொல்காப்பிய உரையாசிரியர்களும் ஐந்தொகை மேலும் அன்மொழி வருதலை ஏற்பர்.[8] ஆனால் தெய்வச் சிலையார் மட்டும் மறுப்பர் (தொல். சொல். தெய்வ ப. 238)

செய்யும் என்னும் பெயரெச்சம் சில இடங்களில் ஈற்று மிசை உகரம் மெய்யோடும் கெடும் என்பர் தொல்காப்பியர் (தொல் 723). (எ-டு) வாவும் புரவி=வாம்புரவி.

இவர் செய்யும் என்னும் பெயரெச்சத்து 'ஈற்றின் மிசைச் சில் உகரம் மெய்யொடும் போம்; அவ்வுகர மெய்யொடு அருகில் நிற்கும் ஒற்றொடும் போம்' (நேமி. 87) என்பர்.

(எ-டு) அரியும்வாள்—அரிவாள் (இங்கு யு என்ற உயிர் மெய்யும் மகர ஒற்றும் கெட்டன) இவ்விதி தொல்காப்பியத்துள் காணாததாம். நன்னூலார், "முற்றேல், உயிரும் உயிர் மெய்யும் ஏகலும், உளவே" (நன். 341) என முற்றிற்கும் இலக்கணம் கூறுவர்.

இலக்கணங்களில் காலமுன், இடமுன் எனக்கூறப்படுதல் உண்டு. அதனை இவ்வாசிரியர் "முன்மொழிதான் காலம் இடத்தால் கருத்தொடும், சேர்த்தறிதல் மேலையோர் கண்டவிதி" (நேமி. 88) என விதியாகக் கூறுகின்றார்.

---

8. தொல். சொல். இளம். ப. 187, 188; தொல். சொல். சேனா. ப. 220; தொல். சொல். நச்சி. ப. 242.

பொருள்கோள் ஒன்பதென்பர் இவர் (நேமி. 92). நன்னூலாரும் எட்டென்பர் (நன். 411). ஆனால் தொல்காப்பியர் நான்கென்பர் (தொல். 887). "பொருள் உணர்த்தும் முறையில் எல்லாச் சொற்களும் வெளிப்படையாகவோ அல்லது குறிப்பாகவோ பொருளுணர்த்தும்; முது சொல் மந்திரம் ஆகிய இரண்டும் பொருள் உள்ளனவாயும், பொருள் இல்லனவாயும் வரும்" (நேமி. 93) என இவர் கூறுவது புதியதாகும்.

(எ-டு) "ஆற்றில் கெட்ட கழுதைப் பாக்கம் ஊரிலிருந்த குயவனுக்கு உப்பாம்" — இது முதுமொழியில் பொருளற்றது.

"கெட்டார்க்கு நட்டாரில்லை" — இது முதுமொழியில் பொருள் உடையது.

"திரிக, திரிக, திரிக சுவாகா"

இது மந்திரத்தில் பொருளற்றது.

"கன்று கொண்டு கறவையும் வத்திக்க சுவாகா"

இது மந்திரத்தில் பொருளுடையது.

இளம்பூரணர், "மந்திரப் பொருள் வயின் ஆகுநவும்" (தொல். 932) என்பதற்குத்

"திரிதரு சுவாகா கன்று கொண்டு
கறவையும் வத்திக்க சுவாகா"

என்ற ஒன்றைக் காட்டியிருப்பது (தொல். சொல். இளம். ப. 204) ஈண்டு ஒப்பு நோக்குதற்குரியது.

புறனடையில் (நேமி. 95) முற்கு, வீளை முதலிய எழுத்தில் ஒலிகள் பொருள்படினும் இலக்கண முடிபல்ல என்று கூறியிருப்பது புதிய செய்தியாகும்.

இவ்வாசிரியர் காலத்தோடு ஒத்து எழுந்தநூல் நன்னூலாதலின் அதனோடு இதற்குள்ள ஒற்றுமை வேற்றுமையையும் ஈண்டு காண்பது பொருத்தமாகும்.

நன்னூல் அருப்பொருள் ஐந்தையும் யாவரும் உணர விரித்து உரைப்பதற்காக எழுந்து, எழுத்துச் சொல் அளவி லேயே நின்றுவிட்டது. இந்நூல் எழுத்து, சொல் இரண்டை மட்டுமே நுவல எழுந்து இரண்டுடன் முடிந்து நிற்கிறது. நன்னூல் இரு அதிகாரங்களிலும் ஐயைந்து இயல்களை நெறியாகக் கொண்டுள்ளது. இந்நூல் எழுத்ததிகாரத்தில் உட்பிரிவின் றியும் சொல்லதிகாரத்தில் ஒன்பது உட்பிரிவுகளையும் உடையதா யுள்ளது. நன்னூலில் தொல்காப்பியத்தில் பரந்தும், விரிந்தும் கிடக்கின்ற பல்வேறு விதிகளில் பெரும்பாலானவற்றைத் தொகுத்துக் கூறப்பட்டு உள்ளது. இந்நூல் தொல்காப்பியத்துள் பரந்தும், விரிந்தும் கிடக்கின்ற பல்வேறு விதிகளில் சிறு பான்மையானவற்றையே முகந்து கூறுகின்றது.

வடமொழி இலக்கணம் கூறும் வகையில் நன்னூல் ஒரு இயலையே (பதவியல்) அமைத்துக் கூறுகிறது. இந்நூலில் அவ் விதிகள் இரு நூற்பாக்கள் (நேமி. 10, 11) அளவிலேயே உள்ளன. நன்னூலில் ஆசிரியம், வெண்பா ஆகிய இருதிறமாய சூத்திர யாப்புண்டு. இந்நூல் முழுவதும் வெண்பா யாப்பிலேயே அமைந்துள்ளது. நன்னூல் தொல்காப்பிய மரபியல் கருத்துக் களையும் பாயிரத்தில் அடக்கிக் கூறுகின்றது. இந்நூலில் தொல்காப்பிய எழுத்துச், சொல் ஆகிய இரு அதிகாரங்களின் கருத்துக்களே உள்ளன. நன்னூல் தோன்றிய காலத்தி லிருந்தே தக்க விளக்கஉரை கூறும் உரையாசிரியர்களின் புலமை நலத்தோடு ஒன்றி வளர்ந்தது. இந்நூற்குப் பெயர் தெரியா ஒருவர் உரையே அமைந்துள்ளது. ஒரே பேரரசன் காலத்தில் தோன்றி, ஒரே சமயத்தவரால் எழுதப்பெற்ற இவ்விரு நூல் களுள் ஒன்றற்குச் செல்வாக்கு வளர்ச்சியும், பிறிதொன்றற்கு அஃதின்றியும் இருப்பதற்குக் காரணம், நுவலும் பொருள் திறனும் அரசியல், உரைவளச் செல்வாக்குகளுமே ஆகும்.

# 20

# தமிழ் இலக்கண அறிஞர்கள் விளக்கும் ஒலிப்பிறப்பு முறை

க. முருகையன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

## 0.0. முன்னுரை

பொருள்கள் அதிரும்போது காற்றில் ஏற்படும் அழுத்த வேறுபாடு செவிப்புலனில் விளைவிக்கும் உணர்வைத்தான் நாம் ஒலி என்று கூறுகின்றோம். பொருளின் அதிர்வெண் (frequency), அதிர்வு வீச்(amplitude)சால் உண்டாகும் உரப்பு (intensity or loudness), அதிர்வு வீச்சு நீடிக்கும் காலம் (duration) ஆகிய வற்றைப் பொறுத்துத்தான் ஒலிகளின் தன்மை அமைகின்றது. பெரும்பாலான பேச்சொலிகள் மனிதனுடைய பேச்சுப்பொறி (vocal apparatus)யில் உள்ள காற்றின் அதிர்வினாலேயே உண்டாகின்றன. இக்காற்றதிர்வு பேச்சுப் பொறியில் உள்ள காற்றின் அளவு(volume)க்கும் அக்காற்று அடங்கி இருக்கும் அறையின் அமைப்பு(shape)க்கும் அவ்வறையில் இருந்து காற்று வெளியேறும் வழியின் அமைப்பு(opening)க்கும் ஏற்ப மாறுபடும்.

## 0.1. ஒலிப்பிறப்பு

பேச்சுப் பொறியில் உள்ள உறுப்புக்களை இயக்கிப் பல அளவுகளைக் கொண்ட காற்றறைகளை அமைப்பதன் மூலம் அவ்வறைகளில் தேங்கும் காற்றைப் பலவகைப்பட்ட வழிகளின் வாயிலாகச் செலுத்தி முயற்சி வேறுபாட்டினை ஏற்படுத்துவதன் மூலம் பல வேறுபட்ட அதிர்வெண்களையும் உரப்பையும் கொண்ட எண்ணிறந்த பேச்சொலிகளை உண்டாக்க முடியும்.

பேச்சொலிகளை எழுப்ப உதவும் உறுப்பு, ஒலி எழுப்பி (articulator) ஆகும் தன் கிடைநிலையிலிருந்து இயங்கி, வாய் வழியாக வரும் மூச்சுக்காற்றைத் தடைப்படுத்த உதவும் உறுப்பு இயங்குறுப்பு (active articulator) ஆகும். காற்றுத்தடையை ஏற்படுத்துவதற்காக இயங்குறுப்பால் நெருங்கப்படும் உறுப்பு நிலையுறுப்பு (passive articulator) ஆகும். இயங்குறுப்பு நிலையுறுப்பை அணுகி அமையும் அமைப்பு பிறப்பாக்கம் (manner of articulation) ஆகும். எனவே வாய் வழியே இயல்பாகச் செல்லும் மூச்சுக்காற்றை ஒலியுறுப்புக்களால் கட்டுப்படுத்துவதே ஒலித்தலாகும். இவ்வாறு ஒலியுறுப்புக்களைக் கொண்டு பல்வேறு வித வடிவத்தையும் கொள்ளளவையும் கொண்ட காற்றறைகளை அமைத்துக் காற்றுப்போக்கைக் கட்டுப்படுத்தி அதனைப் பலவித முயற்சி வேறுபாட்டுடன் வெளிப்படுத்த முடியும். இவ்வகைக் காற்றறைகளில் உள்ள காற்றின் அதிர்வால்தான் பேச்சொலிகள் பிறக்கின்றன.

## 1.1. ஒலியுறுப்புக்கள்

நுரையீரல் (lung), மூச்சுக்குழல் (trachea), தொண்டை (larynx), மேற்றொண்டை (pharynx), பேச்சுக் குழல் (oral cavity), மூக்கறை (nasal cavity) ஆகிய உறுப்புக்களால் ஆகிய உள்ளிடத்தில் உள்ள காற்றே பேச்சொலிகளை எழுப்ப உதவுகின்றது. இது ஒரு நீண்ட காற்றுக் குழல் போல் உள்ளது. குரல்வளை

மடல்கள் (vocal cords), நா, இதழ், உள்நாக்கு ஆகியவை ஒலிகளை உண்டாக்க உதவும் இயங்குறுப்புக்களாகும். தொண்டை, மேற்றொண்டை, அண்ணம், பல் ஆகியவை பேச்சொலிகளை உண்டாக்க உதவும் நிலையுறுப்புக்களாகும்.

## 1.2. ஒலியுறுப்புக்களின் வேலை

ஒலியுறுப்புக்களை வெவ்வேறு நிலையில் அமைப்பதன் மூலம் காற்றுக்குழலின் அமைப்பை மாற்றிப் பலவிதமான காற்றறைகளை ஏற்படுத்தலாம். இவ்வகைக் காற்றறைகளின் வழியே மூச்சுக் காற்றைக் குரல்வளை (glottis) முதல் இதழ் இறுதியாகவும் அதற்கும் மேலும் தடையின்றிச் செலுத்தலாம். அல்லது மூச்சுக் காற்றை முழுவதும் தடுத்து நிறுத்தியோ ஒரு குறுகிய வழியின்மூலம் செலுத்தியோ பக்கவாட்டில் திருப்பியோ மூச்சுக் காற்றின் போக்கில் மாற்றங்களை விளைவிக்கலாம். அல்லது மூச்சுக் காற்றின் வேகத்தைக் கொண்டு ஏதாவதொரு இயங்குறுப்பை அதிர்வடையச் செய்யலாம். இவ்வாறு காற்றுக் குழலில் உள்ள காற்றை அதிர்வடையச் செய்து எண்ணிறந்த பேச்சொலிகளைப் பிறக்கச் செய்யலாம். எனவே ஒலிகளின் பிறப்பு முறையை விளக்கவேண்டுமானால் நாம் ஒலியுறுப்புக்களையும் அவற்றின் தொழிலையும் பற்றி அறிந்துகொள்ள வேண்டும்.

## 1.3. ஒலியுறுப்புக்களின் பிரிவு

நம் உடலில் பாதிக்கும் மேற்பட்ட பகுதி பேச்சொலிகளை உண்டாக்க உதவுகின்றது. அதாவது தலையிலிருந்து வயிறுவரை அமைந்துள்ள உறுப்புக்கள்-பேச்சொலிகளை எழுப்ப உதவுகின்றன. அவை ஒவ்வொன்றின் தொழிலுக்கும் ஏற்ப அவற்றை முறையே (1) உயிர்த்தலுக்கு உதவுவன, (2) குரல்

1. Bloch, B. and Trager, G. L., 1942, Outline of Linguistic Analysis, p. 13.

எழுப்ப உதவுவன, (3) ஒலித்தலுக்கு உதவுவன என்று மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இவை முறையே நெஞ்சு, தொண்டை, தலை[2] ஆகும். அதாவது, முதல் வகையைச் சேர்ந்த உறுப்புக்கள் நெஞ்சில் உள்ளன. இவை மூச்சுக்காற்று உள்ளும் புறமும் செல்ல உதவுகின்றன. இந்தக்காற்றின் மூலந்தான் நாம் பேச்சொலிகளை உண்டாக்குதற்கான சக்தியைப் பெறுகின்றோம். இரண்டாம் வகையைச் சேர்ந்த உறுப்புக்கள் தொண்டையில் அமைந்துள்ளன. இவை பெரும்பாலான பேச்சொலிகளுக்கு அடிப்படைச் சக்தியைக் கொடுக்கின்றன. மூன்றாம் வகையைச் சேர்ந்த உறுப்புக்கள் தலையில் அமைந்துள்ளன இவைதான் பேச்சுக்குழ(vocal tract)லின் வழியே செல்லும் காற்றில் மாற்றங்களை விளைவித்துப் பலவகையான ஒலிகளை உருப்பெறச் செய்கின்றன.

## 2.1. தமிழிலக்கணப் புலவர்கள்

தமிழிலக்கண ஆசிரியர்கள் அனைவருமே ஒலியுறுப்புக்கள் அனைத்தையும்பற்றிப் பேசுகின்றனர். ஆனால், வடமொழித் தொடர்பின் காரணமாகத் தொலகாப்பியர் ஒழிந்த ஏனையோர் ஒலியுறுப்புக்களின் தொழிலை முழுதும் அறியாதாராய் அவற்றை அப்படியே அடுக்கிச் சென்றுள்ளனர்.

### 2.1.1. தொல்காப்பியர்

தொல்காப்பியர் ஒலியுறுப்புக்களாக எட்டு உறுப்புக்களைக் கூறுகின்றார். இவ்வுறுப்புக்களை நெஞ்சில் உள்ளவை, மிடற்றில் உள்ளவை, தலையில் உள்ளவை என்று மூன்று பிரிவாகக் கூறுகின்றார் (தொல். 83). இவை முறையே உயிர்க்கும் பிரிவு, குரல் எழுப்பும் பிரிவு, ஒலி எழுப்பும் பிரிவு ஆகும். இவை காற்றுக் குழலின் முப்பெரும் அமைப்பாகும். பல், இதழ், நா, மூக்கு,

2. Abercrombie, B., 1967, Elements of General Phonetics, p. 21.

அண்ணம் ஆகியவை தலையில் அமைந்துள்ளன. இவைதான் ஒலிகள் தம் இறுதி வடிவத்தைப் பெறுதற்குக் காரணமாக உள்ளன. மேலே கண்ட எட்டு உறுப்புக்களையும் தொல்காப்பியர் காற்றறைகள், ஒலியெழுப்பிகள் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றார். காற்றறைகள் மூச்சோட்ட இயக்கத்தை உண்டாக்குதற்கோ தம்மிடம் உள்ள ஒலியுறுப்புக்களை இயக்கி ஒலிகளை உண்டாக்குதற்கோ பயன்படுகின்றன. நெஞ்சறை, தொண்டையறை, வாயறை, மூக்கறை ஆகியவை காற்றறைகளாகும். உந்தி(diaphragm)யின் தொழிலால் இயக்கப்படும் மூச்சுக்காற்றே நெஞ்சிலிருந்து கிளம்பி தொண்டையை அடைந்து அங்கிருந்து மூக்கு அல்லது வாய் வழியாக வெளியேறுகின்றது.

ஒலியெழுப்பிகள் (articulators) தலையில் அமைந்துள்ளன. தொல்காப்பியர் இவற்றை வரிசைப்படுத்தியுள்ள முறையை (தொ. 83) நோக்கும் போது அவர் ஒரு சிறந்த ஒலியியல் வல்லுநராகவும் உடற்கூற்றியல் அறிஞராகவும் விளங்குவதை அறியலாம். ஒலியெழுப்பிகளைத் தொடங்கும் போது முதலில் பல்லைக் குறிப்பிடுகின்றார். இங்கு அவர் மேற்பல்லைக் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். ஏனெனில் மேற்பல்லும் கீழிதழும் சேர்ந்து, 'வ்' (தொல். 98) ஒலியை உண்டாக்குகின்றன. அடுத்து அவர் குறிப்பிடும் உறுப்பு இதழாகும். இதழ்கள் 'ப், ம், உ, ஓ' (தொல். 87, 97) போன்ற ஒலிகளை உண்டாக்க உதவுகின்றன ஒலி எழுப்பிகளிலேயே அதிகமான ஒலிகளை உண்டாக்க உதவுவது நா. இதனை மூன்றாவதாகக் கூறிய தொல்காப்பியர் மூக்கை அடுத்த உறுப்பாகக் குறிப்பிடுகின்றார். இதுவும் மற்ற ஒலி எழுப்பிகளைப் போன்றே பிற காற்றறைகளிலிருந்து பெறும் சக்தியைக்கொண்டு ஒலிகளை உண்டாக்க உதவுகின்றது[3] (தொல். 100). இவ்வரிசையின் கடைசி உறுப்பு

3. முருகையன், க., 1972, தொல்காப்பியரின் ஒலியியல் கொள்கை, தொல்காப்பிய மொழியியல், p. 16.

அண்ணமாகும். இவ்வாறு உறுப்புக்களை முறைப்படுத்தி உள்ளதை நோக்கும் போது ஒலி எழுப்பிகள் அனைத்தும் தலையில் 'வட்ட' வரிசையில் அமைந்துள்ளதை அறியலாம்.




## 2.1.2. ஏனைய இலக்கண ஆசிரியர்கள்

அனைத்து இலக்கண ஆசிரியர்களும் ஒலியுறுப்புக்கள் எட்டென்று கூறியுள்ளனர். ஆனால் பெரும்பாலானோர் ஒலிகள் பிறக்கும் முறையைச் செம்மையாய் அறிந்துள்ளதாய்த் தோன்றவில்லை. எல்லோரும் ஒலியுறுப்புக்களை அவற்றின் தொழிலுக்கு ஏற்ப இரண்டு பிரிவுகளாகப் பகுத்துள்ள போதிலும் தொல்காப்பியரைத் தவிர மற்றவர்கள் அவற்றின் செயல்முறையை நன்கு விளக்கவில்லை. தொல்காப்பியர் பேச்சொலி உறுப்புக்களைக் காற்றறைகள், ஒலி எழுப்பிகள் என இரண்டாகப் பிரித்துள்ளதை முன்னமே (2.1.1) கண்டோம். நெஞ்சு, மிடறு, தலை ஆகியவை காற்றறைகள். பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகியவை ஒலியெழுப்பிகள். குணவீரபண்டிதரும் இதே அடிப்படையில்தான் ஒலியுறுப்புக்களைக் காற்றறைகள், ஒலி எழுப்பிகள் என்று இரு பகுதிகளாகப் பிரித்துள்ளார் (நேமி. 6). எனினும், அவர் ஒலியுறுப்புக்களை வரிசைப் படுத்தியுள்ள முறை ஒலிகளின் பிறப்புமுறைக்கு ஒத்ததாக அமையவில்லை. தொன்னூல் விளக்கம் ஒலியுறுப்புக்களைத் தலையாயவை, துணைபுரிபவை (தொ வி. 3) என இரு பிரிவாக்கியுள்ளது. மிடறு, நெஞ்சு, உச்சி

4. மனிதனின் பேச்சுப் பொறியின் படம் பிற்சேர்க்கை 2-ல் உள்ளது.

ஆகியவை முதற்பகுதியைச் சேர்ந்தவை. இதழ், மூக்கு, அண்ணம், நா ஆகியவை இரண்டாம்பகுதியைச் சேர்ந்தவை.

வீரசோழியம், நன்னூல், இலக்கணவிளக்கம் ஆகியவை எட்டு ஒலியுறுப்புக்களையும் ஒவ்வொன்றும் நான்கு உறுப்புக் களைக் கொண்ட இரண்டு பிரிவுகளாகப் பிரித்துள்ளன (வீர. 6, நன் 74 இ.வி. 9). வீரசோழியத்தின் ஆசிரியராகிய புத்தமித்திர னார் உந்தியிலிருந்து எழும் காற்று நெஞ்சு, தலை, மிடறு, மூக்கு ஆகிய நான்கிடங்களையும் அடைகின்றது என்றும் அண்ணம், பல், இதழ், நா ஆகியவற்றின் உதவியால் ஒலிகள் உருவாகின் றன என்றும் கூறுகின்றார். எனவே, இவர் கருத்தின்படி நெஞ்சு, தலை, மிடறு, மூக்கு ஆகியவை காற்றறைகளாகவும் அண்ணம் பல், இதழ், நா ஆகியவை ஒலி எழுப்பிகளாகவும் அமைகின்றன. (வீர. 6). நெஞ்சு, மிடறு, உச்சி, மூக்கு ஆகிய காற்றறைகளில் நிலைபெறும் காற்றுத் துகள்கள் (air molecules) இதழ், நா, பல், அண்ணம் ஆகிய ஒலி ஒழுப்பிகளால் பேச்சொலிகளாக மாற்றப் படுகின்றன என்று நன்னூலார் கூறுகின்றார் (நன். 74). இலக் கணவிளக்கம் செய்த வைத்தியநாத தேசிகர் உதானனினால் உண்டாகும் ஒலி உச்சி, மிடறு, நெஞ்சு, மூக்கு ஆகியவற்றை அடைந்து, இதழ், நா, பல், அண்ணம் ஆகிய உறுப்புக்களினிடத் தில் செறிந்து அவற்றின் தொழிலால் பேச்சொலிகளாகப் பிறக் றன (இ வி. 9) என்று கூறுகின்றார்.

### 2.1.3. தற்கால ஒலியியல் அறிஞர்கள்

தற்கால ஒலியியலார் பேச்சொலி உறுப்புக்களை காற்றறை கள், ஒலியெழுப்பிகள் என இருபெரும் பிரிவுகளாகப் பிரித்துள் ளார்கள். நெஞ்சு, மிடறு, தலை ஆகியவை காற்றறைகள். பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகியவை ஒலியெழுப்பிகள். ஒலி யெழுப்பிகள், ஒலி பிறக்கும் முறை ஆகியவற்றைப் பற்றித் தொல்காப்பியர் தரும் விளக்கம் தற்கால ஒலியியல் அறிஞர்

களின் விளக்கத்தோடு முற்றிலும் ஒத்துள்ளது. நன்னூல், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம், ஆகியவை உச்சி என்று ஒரு ஒலியுறுப்பைக் குறிப்பிடுகின்றன. தற்கால ஒலியியல் அறிவைத் துணைகொண்டு பார்க்கும்போது இதனை ஒலிகளை உண்டாக்க உதவும் உறுப்பாகக் கொள்ள இடமில்லை. வீரசோழியம், நன்னூல், இலக்கண விளக்கம் ஆகியவை நெஞ்சு, மிடறு, தலை ஆகியவற்றோடு மூக்கையும் சேர்த்து அதனையும் காற்றறை எனக்கொள்ளுமாறு அமைத்துள்ளன (வீர. 6, நன். 74, இ. வி. 9). மூக்கும் ஒரு காற்றுக் கொள்ளிடமாக அமைந்திருந்தபோதிலும் தானே தனித்து ஒலிகளை உண்டாக்க உதவுவதில்லை. இது வாயறையில் உண்டாகும் ஒலிகளை ஊக்குவிக்கும் (reinforcing) முகத்தான் ஒரு ஒலி எழுப்பியைப் போலத்தான் தொழில் புரிகின்றது.[6]

பேச்சொலிகளை உண்டாக்க உதவும் காற்றை உந்திமுதலா எழும் காற்று (வீர. 6) என்று புத்தமித்திரனாரும் நிறையுயிர் முயற்சியின் உள்வளிதுறப்ப எழும் காற்று என்று பவணந்தியும் குறிப்பிடுகின்றனர் (நன். 74). இவை நுரையீரல் புறக்காற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.[7] இந்த விளக்கம் ஒலியியல் அறிவியற்கு (phonetic science)ப் பொருந்துமாறும் உள்ளது. நேமிநாதம், இலக்கண விளக்கம் ஆகிய இரண்டும் பேச்சொலிகளை உருவாக்குவது உதானன் என்று கூறுகின்றன (நேமி. 6, இ. வி. 9). இவற்றைக் கொண்டு ஒலிகளை உண்டாக்கக் காற்று அவசியம் என்றும் அக்காற்று உந்தியிலிருந்து வருகின்றது என்றுந்தான் விளக்கலாம்.

உயிரொலிகளும் இடையின ஒலிகளும் மிடற்றில் பிறக்கின்றன என்றும் மெல்லொலிகள் உச்சியில் பிறக்கின்றன என்

6. Ladefaged, P., 1968, Elements of Acoustic Phonetics, p. 105.
7. Allen, W. S., 1953, Phonetics in Ancient India, p. 24,

றும் தொன்னூல் விளக்கம் சொல்லுகின்றது (தொ. வி. 3). மிடறு, நெஞ்சு, உச்சி ஆகிய இவை முதலிடங்கள் என்றும் இம்முதலிடங்களில் இதழ், மூக்கு, அண்ணம், பல், நா ஆகியவற்றைத் துணையிடங்களாகக் கொண்டு ஒலிகள் பிறக்கின்றன என்றும் வீரசோழிய ஆசிரியர் விளக்குகின்றார் (வீர. 6). இவ் விளக்கம் பொருந்துவதாகத் தெரியவில்லை.[8] ஏனெனில் ஒலிகளை உண்டாக்கக்கூடிய ஒலியெழுப்பிகள் ஏதும் நெஞ்சில் இல்லை. தொண்டையில் குரலொலி, குரல்வளை வல்லொலி, குரல்வளை உரசொலி ஆகியவற்றைத் தவிர வேறு ஒலிகளை உண்டாக்க இயலாது. பின்னிரண்டு ஒலிகளும் தமிழ் மொழியில் இல்லை. முன்னது ஒலியின் ஒரு கூறாக அமையுமேயின்றித் தனியொலியாகாது.[9]

## 2.2. பேச்சொலி உண்டாதல்

உந்தி கீழ் மேலாக அமிழ்ந்தெழுவதால் மூச்சுக்காற்று நுரையீரலிலிருந்து உள்ளும் புறமும் செல்கின்றது என்று தொல்காப்பியர் கூறுகின்றார். இவ்வகைக் காற்றியக்கமே ஒலிகளை உருவாக்க உதவுகின்றது. நுரையீரலிலிருந்து காற்று தொண்டை, தலை, ஆகியவற்றைக் கடந்து வெளியேறுகின்றது. தலையில்தான் ஒலி எழுப்பிகள் அமைந்துள்ளன. ஒலியெழுப்பிகள் தொழிற்பட்டு வாயறையைப் பல வடிவங்களில் அமைக்க உதவுவதோடு மூச்சுக் காற்றையும் பலவிதமாகத் தடைபடுத்திப் பல்வேறுபட்ட பேச்சொலிகளை உண்டாக்க உதவுகின்றன.[10] இங்கு, தொல்காப்பியர் பேச்சொலிகளை உண்டாக்குதற்கு இன்றி

8. Abercrombie, D., 1976, Elements of General Phonetics, pp. 25-28.
9. முருகையன், க., 1972, தொல்காப்பியரின் ஒலியியல் கொள்கை, தொல்காப்பிய மொழியியல், pp. 17-23.
10. Pulgram, E., Introduction to Spectrography of Speech, pp. 85-87.

யமையாது தேவைப்படும் மூச்சோட்டம், ஒலியெழுப்பிகள், ஆக்கம் ஆகிய மூன்றினையும் பற்றி விளக்குகின்றார் (தொல் 83). ஒலிகள் பிறக்கும் இடமும் முயற்சியும் பற்றிப் பேசும தொல்காப்பியர் ஒரே இடத்தில் பிறக்கும் ஒலிகளை அவற்றின் ஆக்கம் (தொல் 93) வேறுபடுதற்கு ஏற்ப வேறுபட்ட ஒலிகளாகத் தோன்றுகின்றன என்று மேலும் விளக்குகின்றார். இலக்கண ஆசிரியர்கள் பலரும் பேச்சொலிகளின் பிறப்பாக்கம்பற்றி முயற்சி (வீர. 6), தொழில் (நன். 74), பண்ணை (இ. வி 9) என்று குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.

### 3. ஒலித்தல்

பேச்சொலிகளை உண்டாக்குதற்கு வேண்டிய மூன்று முக்கிய அம்சங்களைப் பார்த்தோம். அதாவது (1) இயங்குறுப்பு தன் இயல்பான நிலையிலிருந்து (2) நிலையுறுப்பை நோக்கி எழுந்து அமையும் (3) ஆக்கம். இவற்றைக் கொண்டு பேச்சொலிகளை எளிதில் விளக்கலாம். இம்மூன்றின் முற்றுத்தொழிலைத்தான் நாம் ஒலிகளின் பிறப்பு என்று குறிப்பிடுகின்றோம் இதனைத் தெள்ளிதின் விளக்கியுள்ள இலக்கணப் புலவர் தொல்காப்பியரே யாவார்.

### 3.1. உயிரொலி

தொல்காப்பியருடைய கருத்தின்படி பெரும்பாலும் அனைத்து ஒலிகளுமே வாயறையில்தான் பிறக்கின்றன (தொல். 85-98). குரலொலியும் (தொல். 84), மூக்கறை ஒலியும் (தொல் 100) தான முறையே தொண்டை, மூக்கறை ஆகியவற்றில் பிறக்கின்றன. தொண்டையில் உண்டாகும் குரலொலி வாயறையின் அமைப்பிற்கு ஏற்ப மாற்றமடைந்து பலவகை உயிரொலிகளாக உருவாகின்றது. குரல்வளை மடலகளின் நிலையான இசையே உயிரொலிகளைத் தோற்றுவிக்கின்றது. இது

அனைத்து உயிரொலிகளுக்கும் பொதுவானது (தொல். 84).[11]

வாய் திறந்த நிலையில் இருக்கும்போது நடுவுயிர்கள் பிறக்கின்றன (தொல். 85). நாவின் முன் விளிம்பு கீழ் முன்பல்லின் ஈற்றைத் தொட்ட நிலையில் இருக்கும்போது நாவின் முன் பகுதி உயர்ந்து அமைவதால் முன்னுயிர்கள் பிறக்கின்றன (தொல் 86). இதழ்கள் குவிந்தமையும் போது நாவின் பின் பகுதி உயர்ந்தமைவதால் பின்னுயிர்கள் பிறக்கின்றன (தொல். 87).

தொல்காப்பியரைத் தவிர மற்ற இலக்கண ஆசிரியர் அனைவரும் உயிரொலிகள் தொண்டையில் பிறப்பதாகக் கூறுகின்றனர் (நன். 75, இ. வி. 10, தொ. வி. 3, முத்து 43) இதனைக் கொண்டு உயிரொலிகள் அனைத்தும் குரலொலிகள் என்று ஒருவாறு விளக்கலாமே தவிர உயிரொலிகள் பிறப்பதற்கும் தொண்டைக்கும் வேறு எந்தத் தொடர்பையும் காட்ட இயலாது.

நன்னூலாரும் இலக்கண விளக்கம் உடையாரும் உயிரொலிகள் பிறக்கும்போது ஏற்படும் வாயமைப்பு (அங்காப்பு-நன். 76, இ. வி. 11). நாநிலை (அண்பல் முதல் நாவிளிம்பு உற-நன். 77, இ. வி. 11) பற்றி ஓரளவுக்கு விளக்கி இருந்தபோதிலும் இவர்களும் உயிரொலிகள் தொண்டையிலிருந்து பிறக்கின்றன என்றே கூறுகின்றனர். நாம் முன்பே (2.1.3.)பார்த்ததுபோல் குரலொலி, குரல்வளை வல்லொலி, குரல்வளை உரசொலி ஆகியவை மட்டுந்தான் தொண்டையில் பிறக்கின்றன. எனவே உயிரொலிகள் பிறக்கும் முறைபற்றிய இவர்களின் கூற்றிற்குப் பொருத்தமான விளக்கம் எதும் கொடுக்க இயலாதநிலை ஏற்படுகின்றது. உயிரொலிகளின் பிறப்புபற்றி முத்து வீரியரும் ஏறத்தாழ இதே விளக்கத்தைத்தான் வழங்கியுள்ளார் என்றாலும் முன்னுயிர்கள் பற்றிய அவரது கூற்று மேலும் குழப்பத்தைத் தருகின்றது (முத்து. 45). மேல்வாய்ப்பல்லடி நா விளிம்புற இவ்வுயிர்கள்

11. Abercrombie, D., 1967, Elements of General Phonetics, p. 55.

பிறக்கும் என்று கூறுகின்றார். வாயின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள நா மேல்வாய்ப்பல்லின் அடியைத் தொட்டால் வாய்வழி அடைபட்டு நுரையீரலிலிருந்து வரும் காற்று தடுக்கப்படும். வாயில் ஏற்படும் தடையினால் உண்டாகும் ஒலி உயிரொலியாகாது. வாய்வழியே மூச்சுக்காற்றுத் தடையின்றி வெளியேறும்போதுதான் உயிரொலிகள் உண்டாகும்.[12]

## 3.2. மெய்யொலி

தொல்காப்பியரைத்தவிர மற்ற இலக்கண ஆசிரியர்கள் அனைவரும் உயிரொலி போன்றே இடையின ஒலிகளும் தொண்டையில் பிறக்கின்றன என்றும் மெல்லொலிகள் மூக்கிலும் வல்லொலிகள் நெஞ்சிலும் பிறக்கின்றன என்றும் கூறுகின்றனர் (நன். 75, இ. வி 10, தொ. வி. 3, முத்து. 43). வைத்தியநாத தேசிகர் மெல்லின ஒலிகளைப் பற்றி விளக்கும்போது மூக்கிசை, (இ வி. 10) என்று கூறுகின்றார். இது, பிறப்பால் வல்லொலியையொத்த மெல்லொலி மூக்கறையில் வலிபெற்று ஒலிக்கின்றது என்று விளக்கம் தருதற்கு ஏதுவாக உள்ளது. இதைத் தவிர மற்றைய விளக்கங்கள் யாவும் உடற்கூற்றியலோடு ஒத்து அமையவில்லை. உயிரொலிகள்பற்றிய தொல்காப்பியரின் விளக்கம் தற்கால ஒலியியல் அறிஞர்களும் வியக்கும் வண்ணம் அமைந்துள்ளது. குரல்வளை மடல்களால் உண்டாகும் குரலொலி (தொல். 84) வாயறையின் வடிவமைப்பிற்கு ஏற்ப மாற்றம் பெற்று உயிரொலியாக மாறுகின்றது (தொல் 85-87) என்றும் வாயறையில் உள்ள ஒலி எழுப்பிகள் இயங்கி மூச்சுக் காற்றின் போக்கில் தடையை விளைவிப்பதால் வல்லின, இடையின ஒலிகள் பிறக்கின்றன (தொல். 89-99) என்றும் வல்லொலியின் பிறப்பு முயற்சியோடு மூக்கறையில் விளையும் ஒலியூக்க(resonance)மும் சேர்ந்து, அதாவது வாயறையில் அடைபட்ட காற்று

12. Ladefoged, P., 1966, Elements of Acoustic Phonetics, p. 105.

மூக்கின் வழியே வெளியேறும்போது மெல்லொலிகள் பிறக்கின்றன (தொல். 100) என்றும் தொல்காப்பியர் பேச்சொலிகளின் பிறப்பை விளக்குகின்றார்

3.2.1. வல்லொலி

தொல்காப்பியம், முத்துவீரியம், நன்னூல், இலக்கண விளக்கம் ஆகிய நான்கும் வல்லொலிகள் ஆறு என்று கூறுகின்றன (தொல். 89-91, 93, 94, 97, முத்து. 47–51, 57, நன். 78-81, 86, இ. வி. 12). 89-91 ஆகிய தொல்காப்பிய நூற்பாக்களை நோக்கும்போது 'க், ச், ட்' ஆகியவற்றின் பிறப்பாக்கம் தெளிவுற விளக்கப்படவில்லை என்பதை அறிகின்றோம். 93, 94, 97 ஆகிய நூற்பாக்களில் 'த், ப், ற்' ஆகியவற்றிற்குக் கூறப்பட்டுள்ள முயற்சியைக் கொண்டு வல்லொலிகள் அனைத்தும் தடையொலிகள் என்று கொள்ளவேண்டியுள்ளது. நன்னூல், முத்துவீரியம், இலக்கண விளக்கம் (நன். 79 முதலியவை, முத்து. 47 முதலியவை, இ. வி. 12) ஆகியவை இந்த ஆறு ஒலிகளையும் தடையொலிகள் என்று விளக்கியுள்ளன.

தடையொலிகளை உண்டாக்கும்போது ஒலியெழுப்பிகள் கொள்ளும் அமைப்பைத் தொல்காப்பியர் தெளிவாகவும் முழுமையாகவும் விளக்கியுள்ளார். இவருடைய விளக்கம் தற்கால அறிவியல் வளர்ச்சியையும் பல நுண்கருவிகளையும் துணைகொண்டு ஆய்ந்து கூறும் எந்த ஒலியியல் அறிஞனின் விளக்கத்திற்கும் குறைந்ததில்லை. 'த்' (தொல். 93), 'ற்' (தொல். 94) ஆகிய இரண்டும் நாவின் நுனியைக்கொண்டு பிறப்பிக்கப்படுகின்றன. பரந்த நுனி நா (தொல். 93), அதாவது நுனிநா விரிந்து அமையும்போது தகர மெய்யும் அணரிய நுனிநா (தொல். 94), அதாவது நா நுனி கூராகி மேலெழுந்து அமையும்போது றகர மெய்யும் பிறக்கின்றன. நன்னூலும் முத்துவீரியமும் நாமுடி (top of the tongue), நுனிநா (tip of the tongue நன். 80, 85, முத்து. 50, 57) ஆகிய நாவின் அமைப்புகள்

முறையே 'த், ற்' ஆகிய ஒலிகளை உண்டாக்க உதவுகின்றன என்று கூறுகின்றன. இவ்வாறு இருவேறு ஒலி எழுப்பிகள் குறிப்பிடப்பட்டிருந்த போதிலும் அவை ஒலி எழுப்பிகளின் சரியான அமைப்புமுறையினை தெளிவாகவும் விளக்கமாகவும் வேறுபடுத்திக் காட்டவில்லை.

நுனி நா, நுனி அண்ணத்தைத் தொடும்போது 'ட்' பிறக்கின்றது என்று தொல்காப்பியம் (தொல். 91), நன்னூல் (நன். 79), இலக்கண விளக்கம் (இ. வி. 12) ஆகியவை கூறுகின்றன. இதிலிருந்து 'ட்' ஒரு வளைநா ஒலி என்பது பெறப்படவில்லை. ஆனால் முத்துவீர உபாத்தியாயரின் விளக்கம் ('நுனிநா அண்ணம் நோக்க' - முத்து. 49) இது வளைநா ஒலி என்பதை விளக்குகின்றது. நுனிநா அண்ணம் நோக்க என்பது நாவினது நுனி அண்ணத்தை நோக்கி வளைந்து மேலெழுவதைக் குறிக்கும் இவ்வாறு நாநுனி வளைந்து அமையும்போது உண்டாகும் ஒலியைத்தான் ஒலியியல் அறிஞர்கள் வளைநா ஒலி என்று கூறுவர்.[13] வளைநாவைக் குறிக்க முத்துவீரியம் தரும் விளக்கம் மிகவும் வியக்கத்தக்கது.

### 3.2.2. மெல்லொலி

தொல்காப்பியர் (தொல். 100), வைத்தியநாத தேசிகர் (இ. வி. 10) தவிர மற்ற இலக்கண ஆசிரியர் அனைவரும் மெல்லொலிகள் மூக்கில் பிறக்கின்றன என்று கூறுகின்றனர். இது மெல்லொலிகளின் பிறப்பைச் செம்மையுற விளக்குவதாக அமையவில்லை. வைத்தியநாத தேசிகர் மூக்கிசை என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். இவ்வகை ஒலிகள் மூக்கில் வளி பெறுகின்றன என்று விளக்குவதற்கு இது ஒருவாறு பயன்படுகின்றது. தொல்காப்பியரின் விளக்கம் செம்மையாகவும் முழுமை

13. Abercrombie, D., 1967, Elements of General Phonetics, p. 51.

யாகவும் அமைந்துள்ளது. மெல்லொலிகள் அனைத்தும் பிறப்பாக்கத்தால் தம்மோடொத்த அடைப்பொலிகளைப் போன்றவையே. ஆனால், மெல்லொலிகளை உண்டாக்கும்போது வாயறையில் அடைபட்ட காற்று அடைப்பு நீங்கும்படியாக வெடித்து வெளியேறுவதில்லை. வாயறையின் அடைப்பு அப்படியே இருக்க அடைபட்ட காற்று மூக்கறையின் வழியாக வெளியேறுகின்றது. இவ்வாறு வாயறையில் தடுக்கப்படும் காற்று மூக்கறையின் வழியே செல்லும்போது வாயறையில் உண்டாகும் அடிப்படை ஒலி மூக்கறையில் வலிபெற்று மெல்லொலிகளாகின்றது.[14] இது தொல்காப்பிய நூற்பாவிற்கு மிகவும் பொருத்தமான விளக்கமாகும்.

யகர ஒலியின் பிறப்புபற்றித் தொல்காப்பியமும் (தொல் 99) இலக்கண விளக்கமும் (இ. வி. 12) மிகவும் தெளிவான விளக்கம் தந்துள்ளன. நுரையீரலிலிருந்து வரும் காற்று மிடற்றில் குரலை எழுப்பி நுனிநா அண்ணத்தை நெருங்கி அமைவதால் அவ்வமைப்பிற்குப் பின்னிடத்தில் வந்து செறிந்து, நெருங்கி அமைந்துள்ள ஒலி எழுப்பிகளின் ஊடே உரசிக்கொண்டு வெளியேறுவதால் யகர ஒலி உண்டாகின்றது என்று இந் நூற்பாக்களுக்கு விளக்கம் தரலாம். நன்னூல் (நன். 82), முத்து வீரியம் (முத்து. 52) ஆகிய இரண்டும் முதல் நா பின்னண்ணத்தை அணுகும்போது யகரம் பிறக்கும் என்று கூறுகின்றன. யகரம் முன்வாயில் பிறக்கும் ஒலி ஆதலால் இக்கூற்று சற்றும் பொருத்தமற்றதாக உள்ளது.

ரகர, ழகர ஒலிகளின் பிறப்பு வேறுபாட்டினை எந்த இலக்கண ஆசிரியரும் எடுத்துக்காட்டவில்லை. தொல்காப்பியம், நன்னூல், முத்துவீரியம், இலக்கண விளக்கம் ஆகியவை நுனி நாவின் கூரியமுனை மேலண்ணத்தை ஒற்ற இவ்வொலிகள் பிறக்கின்றன என்று (தொல். 95, நன். 83, முத்து. 53, இ. வி. 12)

14. Ladefoged, P., 1966, Elements of Acoustic Phonetics, p. 105.

கூறுகின்றன. இந்நூலாசிரியர்கள் மருங்கொலிகளைப் பற்றி நன்கு விளக்கியுள்ளார்கள் (தொல். 9, நன். 84, முத்து. 54, 55, இ. வி. 12). இயங்குறுப்பு நிலையுறுப்போடு பொருந்தி அமைவதால் லகர ஒலியும் நிலையுறுப்பை இயங்குறுப்பு தடவுவதால் ளகர ஒலியும் பிறக்கின்றன. வாயறையின் நடு இடம் நுனி நாவினால் அடைபட்டிருக்க நாவின் பக்க ஓரங்கள் தடித்து அமைவதால் வாயின் இரு மருங்குகளிலும் ஏற்படும் இடைவெளிகளின் வழியாக மூச்சுக்காற்று வெளியேறும்போது இவ்வகை ஒலிகள் உண்டாகின்றன. ளகர ஒலிபற்றி முத்து வீரியர் தரும் விளக்கம் தற்போது இவ்வொலி ஒலிக்கப்படும் முறையை முழுதும் ஒத்துள்ளது. இவர் இயங்குறுப்பு நிலையுறுப்பைத் தடவ இவ்வொலி பிறக்கின்றது என்று கூறுகின்றார். இயங்குறுப்பு நிலையுறுப்பை வருடும்போது ரகரம் போன்ற ஒலிகள்தான் பிறக்கும்.

வகரம் ஒரு உரசொலியாகும். இவ்வொலி கீழ் இதழ் மேற்பல்லோடு மிகவும் நெருங்கி அமையும்போது ஏற்படும் சிறிய இடைவெளியின்வழியாக மூச்சுக்காற்று உரசிக்கொண்டு வெளியேறும்போது உண்டாகின்றது. தொல்காப்பியத்தைத் தவிர வேறெந்த இலக்கண நூலும் இவ்வகையான நுண்ணிய விளக்கத்தைத் தரவில்லை. தொல்காப்பியர் இங்கு இயைய (தொல். 98) என்ற சொல்லை ஆள்வதன் மூலம் ஒலி எழுப்பிகளின் அமைப்பு முறை, உரசொலிக்கான பிறப்பாககம் என்பதைத் தெளிவித்துள்ளார். இவர் இயைந்து (தொல் 87) என்ற சொல்லை முழுதும் ஒட்டி அமையும் தன்மைக்கும் இயைய என்ற சொல்லை சிறிதே இடம் விட்டுப் பொருந்துவதைக் குறிப்பதற்கும் பயன்படுத்தியுள்ளார்.

### 3.3. சார்பெழுத்து

தொல்காப்பியர் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்றவற்றைச் சார்பெழுத்துக்கள் என்று கொள்கின்றார்.

இவை தத்தம் முதலெழுத்துக்கள் பிறக்கும் இடத்திலேயே சிறு சிறு வேறுபாடுகளுடன் பிறக்கின்றன (தொல். 101). பவணந்தி ஆய்தம் தலையில் பிறக்கின்றது என்று கூறுகின்றார் (நன். 87). ஒலியுறுப்புகளைப்பற்றிய நன்னூலாரின் விளக்கத்தை நோக்கும் போது தலை என்ற சொல்லுக்கு வேறு பொருள் தர இயலவில்லை. அதனைத் தன் முதல் பொருளிலேயே கொள்ளவேண்டி உள்ளது. எனவே பவணந்தி முனிவரின் விளக்கம் சற்றும் பொருத்தமற்றதாகக் காணப்படுகின்றது. தலை என்பதற்கு வேறு பொருள் உண்டாகும்படி அதனை ஒரு ஆகுபெயராகக் கொண்டாலொழிய தலையை ஒலியுறுப்புக்களில் ஒன்றாக வைத்து எண்ண முடியாது. வைத்தியநாத தேசிகர் ஆய்தம் நெஞ்சில் பிறப்பதாகச் சொல்கின்றார் (இ. வி. 13). இன்றளவும் வளர்ந்துள்ள ஒலியியல் அறிவியலில் (phonetic science) நெஞ்சை ஒரு ஒலியெழுப்பியாக யாரும் கண்டறியவில்லை. நெஞ்சில் ஒலி பிறப்பதற்கான அமைப்பு ஏதும் இல்லை.[15]

## 3.4. ஒலி அழுத்தம்

தமிழிலக்கண வித்தகர்கள் ஒலி அழுத்தம் (supra segmental feature) பற்றியும் கூறியுள்ளார்கள். உரப்பு (loudness), இசை (pitch), ஒலி நீட்டம் (length), ஒலி ஏற்றம் (intonation) போன்றவற்றைப் பற்றிப் பேசியுள்ளபோதிலும் ஒலி நீட்டம் தவிர்ந்த மற்றவை தமிழில் ஒலியன்களாக அமையவில்லையாதலால் இவற்றைப்பற்றி விளக்கமாகக் கூறவில்லை.

## 4. முடிவுரை

தொல்காப்பியத்தை நோக்குவோர்க்கு இலக்கண உலகில் தமிழ் மொழிக்கு உள்ள ஆழமும், அகலமும், செறிவும், திண்மையும் நன்கு விளங்கும். தொல்காப்பியத்தின் ஆக்க அடிப்

15. Allen, W. S., 1954, Phonetics in Ancient India, p. 24.

படையில் ஐயங்கொள்வோரும் அதன் கொள்கைகளை மறுப்போரும் கட்டாயமாக உணர்ந்து கொள்ளவேண்டியது ஒன்று உண்டு. தெளிவும் விளக்கமும் செம்மையும் முழுமையும் கொண்டு வேரூன்றித் தழைத்து நின்ற இலக்கணப் பரம்பரை தொடர்பற்றுப்போய்விட்டது. கால இடையீட்டால் நாம் அக் கொள்கைகளினின்றும் பிரிந்து அவற்றை முழுதும் மறந்த நிலையில் உள்ளோம். பிற்காலத்தில் வந்த அரசியல், சமய, சமுதாயத் தொடர்பின் விளைவால் இலக்கணப் புலவர்களும் பழமையை மறந்து வேறுபட்ட பண்பாட்டினை ஏற்று சமூக அமைப்பின் ஏற்றத்தாழ்விற்கு அடிமைப்பட்டுப் புதிய பரம்பரையை உருவாக்கி அதனைப் பின்பற்றியும் வந்திருக்கின்றனர். பறிபோன கொள்கைக் களஞ்சியத்தை இரவல்பெற்றும் அதனை ஆய்ந்துணரும் ஆற்றலற்றவர்களாய் பிறர் மதம் பேணத் தலைப்பட்டதன் பயனாய் சில தவறான இலக்கண விளக்கங்களைத் தந்துள்ளனர். எனவேதான், பிற்கால இலக்கணக் கொள்கைகளை உரிமைகோடலும் விளக்குதலும் பல இடங்களில் இயலாது போகின்றன ஆனால் தற்கால மொழியியல் அறிவு நம் பழைய இலக்கணக் கொள்கைகளை அறிந்துகொள்ளப் பெரிதும் துணைபுரிகின்றது. இந்த அறிவுத்துணையுடன் தொல்காப்பியத்தை அணுகினால் அது தற்கால மொழியியல் கொள்கை எதற்கும் தாழ்ந்ததன்று என்பது விளங்கும்; இலக்கணத்துறையில் நாம் பெற்றிருந்த வளர்ச்சி தெளிவாகும்.

## பிற்சேர்க்கை 1.

### 1.1. தமிழிலக்கண நூல்களில் காணப்படும் ஒலியுறுப்புக்களும் பிறப்பாக்கமும்

| நூலின் பெயர் | ஒலியுறுப்புக்கள் | | | | | | | | பிறப்பாக்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | காற்றறை | | | ஒலியெழுப்பி | | | | | |
| தொல்காப்பியம் | தலை | மிடறு | நெஞ்சு | பல் | இதழ் | நா | மூக்கு | அண்ணம் | ஆக்கம் |
| நேமிநாதம் | நெஞ்சு | தலை | கண்டம் | நா | அண்ணம் | இதழ் | எயிறு | மூக்கு | — |
| தொன்னூல் | மிடறு | உரம் | உச்சி | இதழ் | மூக்கு | அண்ணம் | பல் | நா | — |
| வீரசோழியம் | உரம் | சிரம் | கண்டம் மூக்கு | | அண்ணம் | பல் | இதழ் | நா | முயற்சி |
| நன்னூல் | உரம் | கண்டம் | உச்சி மூக்கு | | இதழ் | நா | பல் | அண்ணம் | தொழில் |
| இலக்கண விளக்கம் | உச்சி | மிடறு | உரம் மூக்கு | | இதழ் | நா | பல் | அண்ணம் | வினை |

## 1.2. பிறப்பாக்கம்

| நூலின் பெயர் | குரல் ஒலி | உயிரொலி (உயிர்) | அடைப்பொலி (வல்லினம்) | மூக்கின ஒலி (மெல்லினம்) | உரசொலி | தொடரொலி (இடையினம்) | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | உயிர்போலி | | வருடொலி | மருங்கொலி |
| | | | | | வ் | ய் | ழ் | ர் | ல், ள் |
| தொல்காப்பியம் | மிடற்று வளி | — | ஒற்ற, இயைந்து | மூக்குவளி | இயைய | கண்ணுற்றடைய | வருட | ஒற்ற | ஒற்ற, வருட |
| இலக்கண விளக்கம் | — | — | உற, ஒற்ற | மூக்கிசை | உற | கண்ணுற்றடைய | வருட | வருட | ஒற்ற, வருட |
| நன்னூல் | — | — | உற | — | உற | உற | வருட | வருட | ஒற்ற, வருட |
| முத்து வீரியம் | — | — | அழுந்த, இருக்க, அண்ணம் நோக்க, உற | — | உற | உற | வருட | வருட | உற, தடவ |

## 1.3. ஒலி எழுப்பிகள்

| நூலின் பெயர் | நடுவுயிர் | முன்னுயிர் | பின்னுயிர் | kṅ | cñ | ṭṇ | tn | pm | ṟṉ | v | y | rḻ | lḷ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தொல்காப்பியம் | அங்காப்பு | அண்பல் முதல்,<br>நாவிளிம்பு | இதழ்குவிவு | முதல்நா,<br>முதலண்ணம் | இடைநா,<br>இடையண்ணம் | நுனிநா,<br>நுனியண்ணம் | அண்ணம்<br>நண்ணிய<br>பல்முதல்<br>மருங்கு,<br>பரந்த நாநுனி | இதழ் | அணரிய<br>நுனிநா,<br>அண்ணம் | பல், இதழ் | அண்ணம் | அணரிய<br>நுனிநா,<br>அண்ணம் | வீங்கியநா<br>விளிம்பு, அண்<br>பல் முதல் |
| இலக்கண<br>விளக்கம் | அங்காப்பு | அங்காப்பு,<br>அண்பல்முதல்,<br>நாவிளிம்பு | இதழ்குவிவு | முதல்நா,<br>முதலண்ணம் | இடைநா,<br>இடையண்ணம் | நுனிநா,<br>நுனியண்ணம் | அண்பல் அடி<br>நாமுடி | மீகீழிதழ் | அண்ணம்,<br>நுனிநா | மேல்பல்,<br>இதழ் | அண்ணம் | அண்ணம்,<br>நுனிநா | அண்பல் முதல்,<br>அண்ணம், நா<br>விளிம்பு வீக்கம் |
| நன்னூல் | அங்காப்பு | அங்காப்பு,<br>அண்பல்முதல்,<br>நாவிளிம்பு | இதழ்குவிவ | முதல்நா,<br>முதலண்ணம் | இடைநா,<br>இடை யண்ணம் | நுனிநா,<br>நுனியண்ணம் | அண்பல் அடி,<br>நாமுடி | மீகீழிதழ் | அண்ணம்,<br>நுனிநா | மேல்பல்,<br>இதழ் | அடிநா, அடி<br>அண்ணம் | அண்ணம்,<br>நுனிநா | அண்பல் முதல்,<br>அண்ணம், நா<br>விளிம்பு வீக்கம் |
| முத்துவீரியம் | அங்காப்பு | அங்காப்பு,<br>மேல்வாய்ப்பல்,<br>அடிநா<br>விளிம்பு | இதழ்குவிவு | அடிநா,<br>அடி அண்ணம் | இடைநா,<br>இடையண்ணம் | நுனிநா,<br>நுனியண்ணம் | அண்பல் அடி,<br>நாமுடி | இரண்டு இதழ் | அண்ணம்,<br>நுனிநா | மேலிதழ் | அடிநா, அடி<br>அண்ணம் | அண்ணம்,<br>நுனிநா | அண் மேல்<br>பல் வாய்,<br>அடி,நா நா<br>விளிம்பு நுனி |

## பிற்சேர்க்கை 2.

## மனிதனின் பேச்சுப்பொறி




காற்றறை

I நெஞ்சு, II மிடறு, III தலை

ஒலி எழுப்பிகள்

1. பல், 2. இதழ், 3. நா, 4. மூக்கு, 5. அண்ணம்

மேற்கோள் நூல்கள்

அகத்தியலிங்கம், S. & முருகையன் K (பதிப்பர்) 1972 — தொல்காப்பிய மொழியியல், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர்.

இளவரசு, S. M 1963 — இலக்கண வரலாறு, Ideal Press, சென்னை.

சாமிகவிராயர் — சாமிநாதம்

சுப்பிரமணியன், S. V. 1967 — இலக்கணத்தொகை-எழுத்து, பாரிநிலையம், சென்னை.

Abercrombie, D. 1965. — Elements of General Phonetics, Edinburgh University Press, Edinburgh.

Allen, W. S. 1953. — Phonetics in Ancient India, Geoffrey cumberlege, Oxford University Press, London.

Bloch, B. & Trager, G. L. 1942 — Outline of Linguistic Analysis, Linguistic Society of America, Baltimore.

Heffner, R. M. S. 1964 — General Phonetics, The University of Wisconsin Press, U. S. A.

Ladefoged, P. 1966 — Elements of Acoustic phonetics, Oliver and Boyd, Edinburgh.

Pike, K. L. 1964 — Phonetics, Ann Arbor, University of Michigan Press.

Pulgram, E. 1959 — Introduction to the Spectrography of speech, Mouton and Co., S-Gravenhage.

# 21

# தெய்வச்சிலையாரின் இலக்கணக் கொள்கை

சு.ப. அண்ணாமலை

*மதுரைப் பல்கலைக்கழகம்*

0. தெய்வச்சிலையார் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு மட்டுமே உரை வரைந்துள்ளார். இவ்வதிகாரத்திற்கு ஏனையோர் வரைந்த உரைகள் தம்முள் மாறுபடும் இடங்களிலும், அவை அனைத்தினும் தெய்வச்சிலையார் மாறுபடும் இடங்கள் மிகுதி ஆகும். காலத்தால் சேனாவரையர்க்கும், நச்சினார்க்கினியர்க்கும் பிற்பட்ட இவர், பல நூற்பாக்களுக்கு அவர்தம் உரைகளினின்றும் துணிவுடன் மாறுபட்டு, இலக்கணவியலில் தம் கொள்கைகள் யாவையெனப் புலப்படுத்தியுள்ளார். அவரது உரையினின்று அக்கொள்கைகளுள் சிலவற்றை எடுத்துக்காட்டி, அவை, ஏனையோர் உரையினும், தொல்காப்பியரின் கருத்துடன் மிக இயைந்திருத்தலையும், இற்றை மொழியியலாரின் கருத்துடன் ஒப்பக் காணுமாறு அமைந்திருத்தலையும் சுட்டுவது இக்கட்டுரையின் நோக்கம். இங்குத் தெய்வச்சிலையாரின் இலக்கணக் கொள்கை, (1) மொழி, (2) தொடரியல், (3) சொல்லியல் என்னும் முத்தலைப்பில் ஆயப்பெறும்.

## 1.0. மொழி

மொழி பற்றிய பொதுவுண்மைகள் இரண்டினைத் தெய்வச் சிலையார் பெயரியல் முதற்பா(தொல். 640)வுரையில் எடுத்தோது கின்றார். அவை, மொழி காரணமற்றது என்பதும், சொற்கள் அடைவுபடத் தொடர்புபடுதலின் பொருள் உணர்த்தும் என்பதும் ஆகும்.

1.1. இவற்றுள், முதல் உண்மையைப் புலப்படுத்தும் அவரது உரை வருமாறு: "இன்னும்.......எல்லாச் சொல்லும் எல்லாப் பொருளையும் குறித்து நிற்கும் என்றவாறு. எனவே, இச்சொல் இப்பொருள் உணர்த்தும் என்னும் உரிமை இல என்றவாறும். என்னை உரிமையிலவாகியவாறு எனின், உலகத்துப் பொருள் எல்லாவற்றையும் பாடை தோறும், தாம் அறிகுறியிட்டு ஆண்டதனை அல்லது, இவ்வெழுத்தினான் இயன்ற சொல் இப் பொருண்மை உணர்த்தும் என எல்லாப் பாடைக்கும் ஒப்ப முடிந்தோர் இலக்கணம் இன்மையான் என்க" (தொல். சொல். தெய்வ. ப 108).

"சொல் எல்லாம் பொருள் உணர்த்துதல் மாலையவே; உணர்த்தாதன இல்லை" என்றே சேனாவரையர் இந்நூற்பா விற்கு உரை வகுப்பத் (தொல். சொல். சேனா. ப. 105) தெய்வச்சிலையார் உரை ஒன்றே, சொல் அறிகுறியே என்னும் உண்மையை, இற்றை மொழியியலார் கூறுவதே போல, எடுத் தோதுகின்றது. அவர் இக்கருத்தை, "மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்னும் தொல்காப்பிய நூற்பா (தொல். 877) உரையிலும் கூறுகின்றார். அது வருமாறு:— "இச்சொற்குப் பொருள் இதுவென நியமித்தற்குக் காரணம் விளங்கத் தோன்றா. எனவே காரணம் உளது என்பதூஉம், அது புலனாகாது என்பதூஉம் கூறியவாறும். என்னை புல னாகாமை எனின், மிகுதல் என்பதற்குப் பொருளாவது, முன்பு

நின்ற நிலையிற் பெரிதாதல் அப்பொருண்மை அச்சொல் காட்டு தற்குக் காரணம் உரைப்பரிது ஆதலான்...... பொருள்மேற் சொல் நிகழ்தல் தொன்றுதொட்டு வருகின்றது...... (தொல். சொல். தெய்வ. ப. 212, 213). சொல்லினின்றும் எழுத்தைப் பிரித்து அஃது இன்ன பொருள் உடையது என்று கூறும் மரபு தமிழகத்தில் இல்லை என்று, அடுத்த நூற்பாவிற்கு (தொல். 878) உரை (தொல். சொல் தெய்வ. ப 213) வரைகின்றார். இவ் விரைகளால், எழுத்து பொருள் இலது என்பதும், எழுத்துத் தொடர்ந்து சொல்லாகிய வழியே அது பொருள்மேல் நிகழும் என்பதும் அஃது ஓர் அறிகுறியே என்பதும் தெளிவாம்.

1.2 அடைவுபடச் சொற்கள் தொடர்பு படுதலால் பொருளை உணர்த்தும் என்பதைப் புலப்படுத்தும் தெய்வச்சிலையாரின் உரைப்பகுதி வருமாறு :- "பொருளின்றி வழங்கும் சொல் இல என்றவாறும். என்னை? முயற்கோடு எனச் சொல் நிகழுமன்றே, அதனாற் குறிக்கப்பட்ட பொருள் யாங்கது? எனின், அறியாது கடாயினாய், முயல் என்பதற்குப் பொருண்மை காண்டி; கோடு என்பதற்குப் பொருண்மை காண்டி; இவை இரண்டு பொருளும் தனித்தனி உளவாதலின், இவை தனிமொழிக்கண் பொருள் குறித்து நின்றன; தொடர்மொழி யாயுழி, உள்ள பொருளோடு, அதன்கண் இல்லாத பொருளை அடுத்தமையான் ஆண்டு இன்றா யிற்று அல்லது, இல்பொருள்மேல் வழக்கின்று என்று கொள்க" (தொல் சொல். தெய்வ ப. 107).

இவ்வுரை, தொடர்க்கண் நின்ற சொற்கள், பொருளால அடைவு பெற்று இருக்க வேண்டும் என்னும் மொழியியல்பைத் தெளிவு படுத்துகின்றது. மற்றும் மொழி எனப்படுவது, சொற் கள் அடைவுபடத் தொடர்பு பட்டு நிற்கும் தொடர்களே என்ப தையும் புலப்படுத்துகின்றது. மற்றும், தொடர்கள், சொல் என்னும் கருத்துருவங்களைக் கொண்டு அமைக்கப்படுவன என் றும், அத்தொடர்கள் பொருள் உணர்த்தாவாயின், அது சொல்

விற்குப் பொருள் இன்மையால் அன்று; அவை அடைவின்றித் தொடர்புற்றமையாலே ஆகும் என்றும் புலப்படுத்தி, இற்றை மொழியியலார் அண்மை உறுப்பு (Immediate Constituent) எனக் கூறும் தத்துவத்தை உட்கொண்டிருப்பது போலத் தோன்று கிறது

1.3. மொழியின் பொதுவியல்பு பற்றி அவர் உரைக்கும் மற்றொரு கருத்து, பிறமொழிச் சொற் கலப்புப் பற்றியதாகும்.

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி" (தொல். 883)

என்னும் நூற்பாவிற்கு, பன்னிரு நிலம் என்பன பிறநாடு என்பாரும் உளர் என்று கூறி, அவை பழந்தீபம், கொல்லம், கூபகம், சிங்களம், கன்னடம், வடுகம், கலிங்கம், தெலுங்கம், கொங்கணம், துளுவம், குடகம், குன்றகம் என்று காட்டி, அந் நிலத்து வழங்கும் சொல்லாகிச் செஞ்சொல்லின் வேறுபட்டுச் சான்றோர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா என உரை வரைந்துள்ளார் (தொல். சொல். தெய்வ. ப. 218, 219). இக் கருத்து நச்சினார்க்கினியர்க்கும் (தொல். சொல். நச்சி. ப. 224) உடன்பாடு.

## 2.0. தொடரியல்

தொல்காப்பியர் தொடரைப் புணர் மொழி என்று கூறுவார் (தொல். 112). அவர் தொடர்மொழி எனக் கூறுவது, இரண் டின் மேற்பட்ட எழுத்தால் ஆகிய சொல்லை எனினும், சேனா வரையர் (தொல். சொல். சேனா. ப. 2), நச்சினார்க்கினியர் (தொல். சொல். நச்சி. ப. 2), தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப. 5), முதலிய உரைகாரர், சொல் தனிமொழியும் தொடர்மொழியும் என இருவகைப்படும் என்று கொண்ட னர். சொல், மொழி, கிளவி ஆகிய சொற்களை இவ்விரு பொருள்களிலும் தொல்காப்பியர் ஆள்கின்றார் என்பது அவர்கள்

கருத்து. இம் மூவருள், தெய்வச்சிலையாரே, "சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தொடர்மொழி, தனிமொழியென இருவகைப்படுத்தினர்" (தொல். சொல். தெய்வ. ப. 5) என்று கூறுகின்றார். தொடரின் பொருண்மை கேட்டார்க்குப் பயன் தருவது என்றும், சொல்லின் பொருண்மை, தன்னளவில் நிற்பது என்றும், பயன்தரும் பொருண்மை உடையதாகிய தொடர் மொழியே சிறப்புடையது என்றும் கொள்கின்றார். பொருள் உணர்த்துதற் சிறப்புடைமையால், தொடர் மொழியைச் சொல்லதிகாரத்துள் முதற்கண் நான்கு இயலிற் கூறித் தனிமொழியை அடுத்துக் கூறினர் தொல்காப்பியர் என்பது தெய்வச்சிலையார் கொள்கை (தொல். சொல். தெய்வ. ப. 6). இதற்கு ஏற்பக் "கிளவியாக்கம்" என்னும் சொல்லிற்கு, ஏனை உரைகாரர் போலாது, சொல்லினது தொடர்ச்சி எனப் பொருள் கூறிச், "சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள்மேல் ஆகும் நிலைமையைக் கிளவியாக்கம் என்றார்" (தொல். சொல். தெய்வ. ப. 7) என்று விரிக்கின்றார். சேனாவரையர் இச்சொல் லுக்கு, வழுக்களைந்து சொல்லை ஆக்கிக்கொள்வது என, நான்கு சொல்லுக்கும் பொதுவிலக்கணம் என்னும் பொருள்பட உரைத் தார் (தொல். சொல். சேனா. ப. 3). எனினும், கிளவியாக்கவிய லின் உரைத் தொடக்கத்தில், தொடர்மொழி பற்றிய விளக் கத்தைத் தருகின்றார் (தொல். சொல் சேனா ப. 2)

தெய்வச்சிலையார், சொல்லிலக்கணம் அறிந்ததனால் பயன் இதுவெனக் கூறப் புகுந்து, "தொடர்மொழியாகிய வாக்கியத் தினைப் பிரித்துப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனக் குறியிட வேண்டுதலின் அதன்பின் கூறப் பட்டது" (தொல். சொல். தெய்வ. ப. 6) என்று எழுதுகின்றார்.

இவற்றால் அவரது இலக்கணக் கொள்கை புலப்படுகின்றது. அது, 'பொருளைச் சுட்டுவதில் தொடர் மொழியே முதன்மை யுடையது. பொருள் தொடர்மொழியாகவே முதற்கண் அமை

கின்றது. அதற்கு உறுப்புக்களாக வருவனவே தனிமொழிகள். அவ்வாறு உறுப்புக்களாக வரும் நிலைகொண்டே அவற்றிற்குப் பெயர், வினை, இடை, உரி எனக் குறி (பெயர்) இடல் வேண்டும்' என்பதாகும். இக்கொள்கை தொல்காப்பியர் கருத்தோடு இயைவதே.

> "கூறிய முறையின் உருபுநிலை திரியாது
> ஈறு பெயர்க்காகும் இயற்கைய என்ப" (தொல். 553)

> "பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
> தொழில்நிலை யொட்டும் ஒன்றலங்கடையே" (தொல். 554)

எனப் பெயர்ச் சொல்லின் இலக்கணத்தை, அது வேற்றுமை ஏற்பது என்றும், காலம் காட்டாதது என்றும் கூறி,

> "வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும்" (தொல். 683)

என வினைச் சொல்லின் இலக்கணத்தை, அது வேற்றுமை ஏலாதது; காலங்காட்டுவது என்றும் தொல்காப்பியர் வகுத்தல், அவர் தொடர்க்கு உறுப்பாகும் நிலை நோக்கியே, சொற்கட்குப் பெயர், வினை யெனக் குறியிடக் கருதுகின்றார் என்பதைக் காட்டும்.

## 2.1. அல்வழித்தொடர்

தொல்காப்பியர் தொடர்மொழி இலக்கணத்தைக் கிளவியாக்கம் தொட்டு விளிமரபு ஈறாக நான்கு இயல்களின்கண்ணும் உரைத்தார் என்றும், கிளவியாக்கத்துள் அல்வழித் தொடரும் ஏனையவற்றுள் வேற்றுமைத் தொடரும் உரைத்தார் என்றும் தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப. 5, 6) கொள்கின்றார். வேற்றுமை நால்வகைச் சொற்கும் பொதுவிலக்கணம் என்றும், பெயரோடு இயைபுடையது என்றும் சேனாவரையர் கூறுவார் (தொல். சொல். சேனா. ப. 105).

மொழியியற் பார்வையில் கிளவியாக்கத்தை நோக்கின், அது தொடர்மொழி யிலக்கணமே என்பதுப், அது, அடைவு (Concord), சொல்தேர்வு (Selectionl restrictions), சொல்வரவு என்பவைபற்றிக் கூறுகின்றது என்பதும் அறியப்படும். தெய்வச்சிலையாரின் உரை, இவ்விலக்கணங்களோடு ஒப்புநோக்கு மாறு அமைந்திருக்கின்றது. மேலும் ஏனை உரைகாரர், தொல் காப்பியர் அமைக்கும் வைப்பு முறைச் சிறப்பை நோக்காது வழுவியுரைக்கும் இடங்களிலும், தெய்வச்சிலையார் உரை வழாது, தொடரியற் செய்திகளை நூற்பாக்களினின்று எடுத்துக் காட்டுகின்றது.

## 2.11. அடைவு

பயனிலையாக வரும் சொல்லுடன் எழுவாய் சொன்னிலை யால் மட்டுமன்றிப் பொருள் நிலையாலும் பொருந்தல் வேண்டும் என்பது அடைவு விதிகளுள் ஒன்று. எழுவாய் பலரை அல்லது பல பொருளைக் குறிக்கும் எண்ணடிப் பெயராக, பலராலும் தொகையறியப்பட்ட பெயராக இருப்பின், அது உம்மை பெற்ற பின்னரே பயனிலை கொடுக்க வேண்டும் என்று தொல்காப்பியர் விதிக்கின்றார் (தொல். 516). அவர் கருத்தை ஒட்டி, இவ்வெழு வாய்க்குத் "தொழிற்படு தொகை" எனத் தெய்வச்சிலையார் பெயரிடுகின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 28, 29). "தேவர் முப்பத்து மூவரும் வந்தார்" என்பது தொழிற்படு தொகை என் றும், தேவர் முப்பத்து மூவர் என வாளா நிற்பது தொழிற்படாத் தொகை என்றும் காட்டுகின்றார். ஒத்த பயனிலை கொள்ளுதல், கொள்ளாமை பற்றியே இப்பெயர் வேறுபாடு அமைந்து, இந் நூற்பா அடைவுபற்றிய தொடரிலக்கணம் கூறுகின்றது என்ப தைத் தெளிவுறுத்தும்.

## 2.12. சொல் தேர்வு

வாக்கியத்தின் பொருளமைதிக்கு ஏற்ற சொற்களைத் தேர்ந்து, அதற்கு உறுப்பாக்குக என்பது இற்றை மொழியியலார்

கூறும் தொடரியல் விதிகளுள் ஒன்று. இக்கருத்தையே முன்பும் கொண்டு, தொல்காப்பியர் வகுக்கும் விதிகள் ஆயத்தக்கவை. அவை, பெரும்பான்மை, எழுவாயாக அமையும் சொல்லை அல்லது தொடரைத் தேர்வது பற்றியனவாக உள்ளன. அவற்றுட் சில பற்றித் தெய்வச்சிலையாரின் கருத்தைக் காண்போம்.

## 2.121. உறழ்தல்

அச் சொல்தேர்வு விதிகளுள், உறழ்வு பற்றிய விதியும் ஒன்று. அது, பொருள்களை உறழ்ந்து வினவும் செப்பும் அமைக்குங்கால், முதற்பொருளுடன் முதற்பொருளையும், சினைப் பொருளுடன் சினைப்பொருளையும் உறழ்க என்பது (தொல்.499). இவளோ அவளோ கற்புடையாள்; வலக்கண்ணோ இடக்கண்ணோ துடித்தது, என்பன இவ்விதிக்கு எடுத்துக்காட்டு. அடுத்து வருவதாகிய,

> "தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
> பகுதிக் கிளவி வரைநிலை யிலவே" (தொல்.500)

என்னும் நூற்பாவிற்கு, ஏனைய உரைகாரருடன் மாறுபட்டு, இது முன்னை நூற்பாவுடன் தொடர்புடையது என்று கொண்டு, உரைவகுக்கின்றார் தெய்வச்சிலையார். சில காரணம் பற்றி முதற் பொருளையும் சினைப் பொருளையும் உறழலாம் என்பது அவர் உரையின் கருத்து. தொல்காப்பியரின் வைப்பு முறையை நோக்காது ஏனை உரைகாரர் உரைக்கும் இடங்களுள் ஒன்றாகிய இங்கு, அதனை மறவாது தெய்வச்சிலையார் உரை வகுக்கின்றார். "இதற்கு இது தகுமோ எனப் பண்பினான் ஆதல் தொழிலினான் ஆதல் உறழ நிற்பது தகுதி" என்று விளக்கி, "இந்நங்கை கண் நல்லவோ இக்கயல் நல்லவோ" இது பண்பு. இம் முகிலோ இவன் கையோ கொடுக்க வல்லது' இது தொழில். இவை வினா. செப்பு வருமாறு: 'கயலின்

கண் நல்ல' என்றானும் ஒக்கும் என்றானும் உரைப்பது" (தொல். சொல். தெய்வ. ப. 20) என்று அவர் உரைக்கின்றார் இவை உறழ்வு வாக்கியத்தில் நோக்கத்தக்க சொல் தேர்வுக்குத் தொல்காப்பியர் வகுக்கும் புறனடை என்று எடுத்துக்காட்டுதல் தெய்வச்சிலையாரின் நோக்கம்.

## 2.122. நிலையாப் பொருள் உம்மை பெறல்

நிலையாமைப் பண்புடைய பொருளை உம்மை கொடுத்துத் தொடரில் அமைக்க என்பது தொல்காப்பிய விதி (தொல்.517). இதற்குப், 'பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை,' என எடுத்துக்காட்டி மண்ணுப்பொருள், என்பது இல்லாப்பொருள் எனக்கொண்டு, உம்மை, எச்ச உம்மை என்றும் கொண்டார் சேனாவரையர் (தொல். சொல். சேனா. ப 29). நச்சினார்க்கினியரோ, "யாக்கையும் நிலையாது" (தொல் சொல் நச்சி. ப. 25) எனக் காட்டி, உம்மை எச்சவும்மை என்றார். தெய்வச்சிலையார் மண்ணுப்பொருள் நிலையாப் பொருள் என்றே கொண்டு, "சக்கரவர்த்தி யாக்கையும் நிலையாது" என்று எடுத்துக் காட்டுகின்றார் (தொல். சொல் தெய்வ. ப 29). இதில் உம்மை எப்பொருட்டு என அவர் கூறாராயினும் சிறப்பும்மையென அறிக. நிலையாப் பொருளை வாளா கூறல் வேண்டின் யாக்கை நிலையாது எனக் கூறலே அமையும். உம்மை வேண்டுவதின்று. உம்மை கொடுப்பின், யாக்கையோடு இளமை, செல்வம் ஆகியனவும் நிலையா என்று உணரப்படுமே யன்றி, யாக்கையின் நிலையாமையை வற்புறுத்துவதாகாது. எச்சவும்மையால் விளைந்தது, நிலையாப் பொருள்களை இத்துணை என்று எண்ணிக் கொள்ளும் அவ்வளவே. ஆனால் தெய்வச்சிலையாரின் காட்டு ஆகிய "சக்கரவர்த்தி யாக்கையும் நிலையாது", என்பதன் கண் உள்ள சிறப்பும்மை, யாக்கை நிலையாப் பொருளே என்பதை அடைமொழியின் துணைகொண்டு தேற்றுகின்றது. எழையும

தன் யாக்கை நிலையெனக் கருதி மயங்குங்கால் இவ்வாறு நிலையாமையை வலியுறுத்துதல் தேவையன்றோ?

2 123 இரட்டைக் கிளவி

பல பெயர் அடுக்கி ஒரு வினை கொண்டு முடிதல் என்னும் தலைப்பில் ஆறு நூற்பா (தொல். 525-530) வகுத்து, ஏழாவதாக'

"இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா" (தொல். 531)

என்று விதிக்கின்றார் தொல்காப்பியர். ஏனைய உரைகாரர் (தொல். சொல். இளம. ப. 26; சேனா. ப. 39; நச்சி. ப. 33, 34) இதற்குச், 'சுருசுருத்தது, கொறுகொறுத்தார்' என எடுத்துக் காட்டிச் சொல்லிலக்கணமே கொண்டனர். தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப. 36) இதன் வைப்பு முறையை நோக்கி, "ஒன்றொன்றாக வந்தன, இரண்டிரண்டாக நீக்குக" என எடுத்துக் காட்டுகின்றார். இது எழுவாய் அல்லது செயப்படு பொருளைத் தேர்ந்துகொள்ளுதல் பற்றிய விதியாகும். ஏனை உரைகாரர் காட்டும் சொல்லிலக்கணம், தொடரிலக்கணங்களிடையே பொருந்தாக் கூற்றாக நிற்கும். தெய்வச்சிலையார் காட்டுவனவற்றை இரட்டைக் கிளவி எழுவாய், இரட்டைக் கிளவிச் செயப்படுபொருள் எனலாம் இவை தனிப்பொருள் உடையன. பிரித்து, 'ஒன்றாக வந்தன', எனின் பொருள் மாறிவிடும்.

2 124. இனம் சேர எண்ணுதல்

பெயர்களை அடுக்கி, ஒரு பயனிலை கொடுத்தல் பலவகை என்றோம். அவற்றுள் மற்றொரு வகை, பலரைக் குறிக்கும் பெயர்களை அல்லது பல்வகைப் பெயர்களை அடுக்கி ஒரு பயனிலை கொடுத்தல் இங்கு அடுக்கப்படும் பெயர்கள் ஓர் இனத்தைக் குறிக்கவேண்டும்; குறித்தால்தான் அவை பயனிலையுடன் அடைவு கொள்ளும் என்று தெய்வச்சிலையார் கருதுகின்றார். இனஞ்சேர எண்ணுதவழி, அப்பெயர் ஒவ்வொன்றும் ஒரு பயனிலை கோடற்

குரியனவாய்த் தனி வாக்கியத்தை உருவாக்குமே யன்றி, அடுக்கி ஒரு வாக்கியமாய் நில்லா.

"உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்
பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்கு வழிப் பட்டன" (தொல்.532,533)

என்று ஒரு நூற்பாவிற்குப் பாடங்கொண்டு (தொல். சொல். தெய்வ ளவி. 48) அதன்கண் இக்கருத்தைக் காண்கின்றார் தெய்வச்சிலையார் (ப. 37,38) 'முனிவரும் சான்றோரும் அந்தணரும்' என்றும் 'மாவும் மருதும் புன்னையும் ஞாழலும்' என்றும் 'எறிவாரும் எய்வாரும் வெட்டுவாரும் குத்துவாரும்' என்றும் எடுத்துக்காட்டுகின்றார் (ப. 38). இங்குத் தொல்காப்பியரின் வைப்பு முறையை மனத்திற்கொண்டு இந்நூற்பாவிற்குப் பாடம் கொள்கின்றார். ஏனைய உரைகாரர் (தொல். சொல். இளம். ப. 26,27; சேனா. ப. 40; நச்சி. ப. 34; கல்லாடம் ப 43,44) இதன் முதலடியை முன்னைய நூற்பாவின் இறுதியடியாகப் பாடங்கொண்டு, வேறு உரை வகுப்பர்.

2.2. வேற்றுமைத் தொடர்

வேற்றுமைத் தொடர் பற்றிய தெய்வச்சிலையாரின் கருத்துக்களை அடுத்துக் காண்போம்.

2 21. எழுவாய் வேற்றுமை

ஆயன் சாத்தன் வந்தான் என்ற தொடரில், ஆயன் என்பது சாத்தனுக்கு அடையாகி, இருபெயரும் ஒரு பொருட்கண் வந்தன என அவர் எழுதுவதும் (தொல். சொல். தெய்வ ப. 50), சாத்தன் தலைவனாயினன் என்பதில், தலைவனாதல் என்னும் திரிபு குறிக்கப்பட்டது என எழுதுவதும் (தொல் சொல். தெய்வ. ப. 52), இற்றை மொழியியலார் கூறும் உள் வட்டத் தொடரை (endo-centric construction) நினைவூட்டுகின்றன.

2.22 சாத்தன் வணிகன் என்ற வாக்கியத்தில் பணிநிலை ஆகிய பெயர் முற்பெயரோடு ஒட்டுப்படாது நிற்பது எனத் தெய்வச்சிலையார் விளக்குதல் (தொல். சொல் தெய்வ. ப 52) கருதத்தக்கது. இது மொழியியலார் கூறும் புறவட்டத் தொடர் (exocentric construction) என்பதை நினைவுறுத்துவது. இவ்விருவகைத் தொடர்கட்கும் நாம் இன்று காணும் வேறுபாட்டைத் தெய்வச்சிலையார், தம் போக்கில், ஒட்டுப்பட்டு நிற்றல், ஒட்டுப்படாது நிற்றல் என விளக்குகின்றார். இக்கருத்துப் படிமம் (concept) அவர்க்குத் தொகாநிலைத் தொடர்கள் தொடர்பாகவும் உண்டு என்பதைப் பிறிதோரிடத்தில், 'நிலத்தைக் கடந்தான் என்பது நிலங்கடந்தான்........ என உருபு தொக்க வழியும் ஒட்டுப்படாது நின்று தொகாநிலைத் தொடர்ச்சியாகிப் பொருள்பட்டவாறு கண்டுகொள்க' (தொல் சொல். தெய்வ ப. 82) என அவர் எழுதுவதால் அறியலாம். உருபுதொகைச் சொல் வேறு, தொகை வேறு என்பது அவர் கொள்கை உருபு தொகைக்கும் தொகாநிலைக்கும் பொருள் அளவில் வேறுபாடு இல்லை. அவற்றின் அமைப்பிற்கும் தொகையின் அமைப்பிற்கும் வேறுபாடு உண்டு என்பது அவர் கருத்து தொகை, ஒட்டுப் பெயர் என்னும் குறியும் பெறும்' என்று அவர் எழுதுகின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 228). தொகைச் சொல்லாவது 'இரண்டு சொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டிநிற்பது' என விளக்குவார் (ப.228). இக்கருத்து, "எல்லாத் தொகையும் ஒரு சொன்னடைய", என்னும் தொல்காப்பிய நூற்பாவுடன் (903) இயைவது.

## 2.23. காரகப் பொருள்

வினைமுற்றின் காரகப் பொருள்கள் எட்டு என்பர் தொல்காப்பியர் (தொல். 596). இவையே வேற்றுமைப் பொருள்களாகவும் இருத்தலின், இவற்றைச்சுட்டும் உருபுகளை ஏற்ற பெயர், வினையால் முடியும் என்று தெய்வச்சிலையார் கொண்டார். எழுவாய் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை முடிய, ஐந்தாவதும்

ஆறாவதும் தவிர ஏனையவை வினையால் முடிதற்குக் காரணம், வினையின் காரகப் பொருளும் வேற்றுமைப் பொருளும் ஒன்று யிருப்பதுதான். இதுவும் அடைவு இலக்கணமே தெய்வச் சிலையார் தம் இக்கொள்கைபற்றியே, "ஐயெனப் பெயரிய வேற்று மைக் கிளவி, எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு, அவ்விரு முதலின் தோன்றுமதுவே" (தொல். 555) என்னும் நூற்பாவில், "வினை என்பது செயல்; வினைக்குறிப்பு என்பது அவ்வினையினாற் குறிக்கப்பட்ட பொருள்; அஃதாவது செயப்படுபொருள்", (தொல் சொல் தெய்வ ப 57), என உரை வரைந்தார். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் (தொல். சொல். சேனா. ப 58 59; நச்சி ப. 53) இவை முறையே தெரிநிலை வினையும் வினைக் குறிப்பும் என்று கொண்டு, அவை இரண்டினும் பிறந்த செயப்படு பொருளாகிய இரண்டு காரணத்தின் கண்ணும் தோன்றும் என்று கூறி இடர்ப்பட்டனர். இருவகை வினையால் பிறப்பினும் செயப்படுபொருள் ஒரு காரணம் தானே? இரண்டு காரணம் யாண்டுள? தெய்வச்சிலையாரோ, செயலும் செயப்படு பொருளும் என இரண்டு காரணம் காட்டி, 'வனைதலைச் செய் தான், குடத்தை வனைந்தான்' என்று காட்டுவர் (ப. 57) இவர் தம் கருத்து, வினைமுற்றிலக்கணத்தை வேற்றுமை மயங்கியலுள் வைத்த தொல்காப்பியரின் கருத்துடன் (தொல் 596) இயைவது.

## 2.24. ஆகுபெயர்

வேற்றுமைக்கும் ஆகுபெயர்க்கும் உள்ள தொடர்பைத் தெய்வச்சிலையார் உணர்ந்து, "வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும்" என்ற தொல்காப்பிய நூற்பா (தொல். 600) வரிக்கு, ஏனைய உரைகாரர் போலாது, "ஆகுபெயர் என்பது வேண்டிய வாறு கொள்ளப்படாது; வேற்றுமைப் பொருட்கண்ணே வரப் பெறுவது" (தொல். சொல். தெய்வ. ப. 92) என்று உரைத்து அது வேற்றுமைப் பொருள் மயக்கமே என உணர்த்துகின்றார்

## 2.3. எச்சங்கள்

எச்ச வியலுட் கண்ட பத்து எச்சங்களுக்குந் தெய்வச் சிலையார் கூறும் விளக்கம், தொடரியலைப் பற்றிய அலாது மற்றொரு கருத்தைக் காட்டுகின்றது. தமிழ்த் தொடரியல் பற்றிய மற்றோர் இன்றியமையாத செய்தியை அவர் இங்குப் புலப்படுத்துகின்றார் எனலாம்.

சொல்லக் கருதும் பொருள் எல்லாம் தொடரில் சொல்லாக இடம் பெறுவதில்லை சில சொல் வராமலே, அவற்றின் பொருள் தொடரில் புலப்பட்டு விடும். இத்தன்மை பொருளிய (Semantics) லோடு சார்த்தி ஆராயப் படவேண்டும். தமிழ் இலக்கணம், தொடரின் இவ்வியல்பை 'எச்சம்' எனப் பொதுப் பெயரிட்டு வழங்கும். சொல் நிலையில் எச்சங்களாக உள்ளவை வேறு. அவை பெயரெச்சம், வினையெச்சம் என்னும் வினைச் சொற்கள் ஆகும். தொடர் நிலையில் எச்சங்களாக உள்ள வற்றையே எச்சவியலுள் தொல்காப்பியர் கூறுகின்றார் என்பது உரையாசிரியர்களுள் தெய்வச்சிலையார் மட்டுமே கொள்ளும் கருத்து. அக்கருத்தே தொல்காப்பியர் கருத்துடன் இயைவது. அதனை இங்குக் காண்போம்.

### 2.31 பிரிநிலை எச்சம்

இவ்வெச்சத்தைக் கருதும் பொழுது, பிரிநிலைப் பொருள் தரும் 'ஏ' என்னும் இடைச்சொல், தொடரில் சொல்லுடன் இணைந்து நிற்றலையும் உடன் கருதல் வேண்டும். இவ்விடைச் சொல் இன்றியும், தொடர் பிரிநிலைப் பொருளை உணர்த்தும் அது பிரிநிலை எச்சம் எனப்பட்டது. பிரிநிலை யெச்சத்தொடர் எனவும் கொள்ளலாம்.

' இவன் கல்வி உடையன்'', என்று வரும் தொடர், சொல்லு வான், இவ் அவையத்தாருள் எனக் கருதினானாயின் அதனை எஞ்சு பொருட் கிளவியாக (முடிக்கும் சொல்லாக) க்கொள்ளும்.

ஆகலின் இத்தொடர் பிரிநிலை எச்சம் ஆகும் என்று தெய்வச் சிலையார் விளக்குகின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 244). இது, தொடர் சூழ்நிலையால் பெறும் இலக்கணம் ஆகும். ஏனைய உரைகாரர், (தொல். சொல். இளம். ப. 195, 196, சேனா. ப 228 229; நச்சி. ப. 251), பிரிநிலை ஏகார இடைச்சொல்லின் முடிக்குஞ்சொல்லை உணர்த்துவது என்று கொண்டனர். ஓரி டைச் சொல் தன்னோடும் சேர்ந்த அளவில், ஒருசொல் எச்ச மாய், முடிக்கும் சொல்லை வேண்டி நிற்கும் என்று அவர்கள் கொண்டனர். அவ்வாறாயின் இடைச்சொற்கள் உணர்த்தும் பொருள் பலவாதலின், அத்தனையும் எச்சமாகல் வேண்டும்; தொல்காப்பியர் பிரிநிலை, ஒழியிசை, எதிர்மறை என்னும் மூன்று மட்டும் கூறுவது ஏன் என்னும் வினாவிற்கு விடை இறுக்க இயலாது. மற்றும் இடையியலுட் கண்ட பொருளையே எச்ச வியலுள்ளும் காண்டலால் பயனில்லை. வேற்றுமையுருபு நின்று பயக்கும் பொருளை, அஃது இன்றியும் பயக்கும் வேற்றுமைத் தொகையையும், அஃது ஒத்த பிற தொகைகளையும் கூறி, அவற்றை அடுத்து, எச்சங்களை அமைத்த ஆசிரியர்க்குச் சொற்கள் நின்று பயக்கும் பொருளை, அவையின்றியும் தொடர்கள், சூழ் நிலையின் காரணத்தால், பயக்கும் என்பதே கருத்தாதல் வேண்டும். அவர் கருத்தை ஒட்டியே தெய்வச்சிலையாரின் கொள்கை அமைந்துள்ளது.

2.32 அடுத்து வரும் வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசை யெச்சம் எதிர்மறையெச்சம், உம்மையெச்சம், எனவென் எச்சம் என்னும் ஆறும், முன்னதைப் போல, முறையே, வினை, பெயர், ஒழியிசையிடைச்சொல், எதிர்மறையிடைச்சொல், உம்மையிடைச்சொல், 'என' என்னும் இடைச்சொல், என்பவை இன்றியும் அப்பொருள்களைப் பயக்கும் தொடர்கள் ஆகும் என்று தெய்வச்சிலையார் விளக்குகின்றார் (ப. 245-249). இவற்றிற்கும் ஏனை உரைகாரர் (தொல். சொல் இளம். ப 196-199, சேனா.

ப. 229-232, நச்சி. ப. 251-255), வினையியல், இடையியல் களுட் கண்ட இலக்கணமே கண்டு, தொல்காப்பியர்க்குக் கூறியது கூறல் என்னும் குற்றத்தை ஏற்றினர். இவ்வெச்சங்கள் பற்றிய தெய்வச்சிலையாரின் கருத்துக்களை விரிவஞ்சி ஈண்டு நாம் விரிக்கவில்லை.

2.33. மேற்கூறிய ஏழு எச்சங்கள் ஒழிய, ஏனை மூன்றாகிய சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் என்பவை, சொல் நின்று பயக்கும் பொருளை, அஃது இன்றியும் பயப்பவை யல்லவாதலின், அவற்றில் எஞ்சி நிற்கும் பொருளை இன்னது என வரையறுக்க முடியாது. அதாவது, பிரிநிலைப் பொருள் ஒழியிசைப் பொருள் என்றாற்போல வரையறுக்க முடியாது. ஆகலின், ஆசிரியர்,

> "எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
> எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப" (தொல்.922)

என்றார்.

முற்கூறிய ஏழு எச்சங்களும் தொடரிலக்கணத்தால் நிரம்பி யவை எனினும் அவற்றுட் சொல் ஒழிபுகள் உள்ளன. பொருள் நிரம்புதற்கு அவற்றைக் கொண்டு வர வேண்டிய இன்றியமை யாமை உள்ளது. பிற்கூறிய மூன்று எச்சங்களிலும் கொண்டு வந்து முடிக்கத்தக்க சொற்கள் இல்லை. இவற்றில் உள்ள சொற்களின் குறிப்பாலேயே, அவற்றின் பொருளல்லாத வேறு பொருளும் தோன்றும் என்பதும் அக்குறிப்பும் மூன்று வகை யானது என்பதும் தெய்வச்சிலையார் கொள்கை. அவ்வாறு கோடலின், சேனாவரையரும் (தொல். சொல் சேனா ப. 234 239) நச்சினார்க்கினியரும் (தொல். சொல். நச்சி ப 257-264) வேறு கருத்தினை உதவியனவாகக் கொள்ளும், "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" (தொல். 925) என்னும் நூற்பா முதல், "செய்யாய் என்னும்" (தொல் 933) எனத் தொடங்கும் நூற்பா

முடிய இம்மூன்று எச்சங்களையும் முறையே நுதலியனவாகக் கொள்கின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 250 254).

## 2.331. சொல்லெச்சம்

தொடரில் வந்த சொல்லின் பயனாக ஒரு கருத்து விளையின், அத்தொடர் சொல்லெச்சம் என்பது தெய்வச்சிலையார் கொள்கை. "நெடும் புனலுள் வெல்லும் முதலை அடும் புனலின் நீங்கின் அதனைப் பிற" (495) என்ற குறட்பாவில் உள்ள சொற்களாலே, 'தமது நிலத்தில் எளியாரும் வலியராவர், பிறர் நிலத்தில் வலியாரும் எளியராவர்' என்னும் கருத்துப் பிறந்தது என்று எடுத்துக் காட்டுவார் (தொல். சொல். தெய்வ. ப. 249 250) இதனை ஒட்டணி என்பர் அணியிலக்கண நூலார். வேறொரு சொல், அல்லது தொடரின் துணையின்றி, இங்கு நின்ற சொற்களே, தம் பொருளுடன் தொடர்புடைய ஒரு கருத்தை உணர்த்துதலின், இதனைச் சொல்லெச்சம் எனத் தெய்வச்சிலையார் கொண்டார் பிற உரைகாரர் எல்லாம் இதனை வெவ்வேறு வகையில் விளக்குவர் (தொல். சொல். இளம். ப. 201; சேனா. ப. 234; நச்சி. ப. 256, 257).

## 2.332. குறிப்பெச்சம்

அவையில் சொல்லக் கூடாத சொற்களை மறைத்துப் பிற வாய்பாட்டால் சொல்வன குறிப்பெச்சம் என்று அவர் கொண்டார். அவை தம் பொருள் அல்லாத வேறு ஒன்றைக் குறித்துக் கூறலின் குறிப்பெச்சம் என்று விளக்கினார் (தொல். சொல். தெய்வ. ப. 250). 'குறித்து' என்பதற்கு இடுகுறி போலச் சுட்டி, எனப் பொருள் கொண்டார் என்று கருதலாம். உரையாசிரியருள் இவரன்றிப் பிறர், இதனைக் குறிப்பெச்சம் என்றோ எச்சவகையுட் சேர்ந்ததென்றோ கருதவில்லை.

## 2.333. இசையெச்சம்

ஒரு தொடர் தனக்குரிய பொருளையும் உணர்த்தி, பிறிது பொருளும் உணர்த்தின் அஃது இசையெச்சம் என்பது தெய்வச்

சிலையாரின் கொள்கை. இதுவும் பிறர் கொள்கையினின்றும் மாறுபடும் இடமே. 'பெயர்நிலைக்கிளவி' (தொல். 932) எனத் தொடங்கும் எச்சவியல் நூற்பா, இசையெச்சத்தின் ஐந்து வகைகளை நுதலியது எனத் தெய்வச்சிலையார் கொண்டார். பலபொருள் ஒரு சொல், ஒரு தொடரில் வழங்குப்போது, பிறபொருள்களையும் தன் ஓசையால் குறிக்கும் தன்மையைத் தன்னுட் பொதிந்துள்ளது ஆதலின் அஃது இசையெச்சம் என்றும் திசைச்சொற்கள், செந்தமிழ் வழக்கில் ஒரு பொருளும் தம் நிலத்தில் பிறிது பொருளும் உடையனவ தலின் அவையும் இசையெச்சம் என்றும், குன்றேறுமா என்பது இசை வேறுபாட்டால், இரு வேறு பொருள் உணர்த்துதலின் இசையெச்சம் என்றும் சிலேடையணிபட வரும் தொடரும் குழூஉக் குறியும் இசையெச்சம் என்றும் அவர் கொண்டார் (தொல். சொல். தெய்வ. ப. 251-254).

இம் மூன்று எச்சங்களாலும் பெறப்படும் பொருளை அவர் விளக்குவது கொண்டு, அவை தொடரின் பொருளை நிரப்புவதற்கு இன்றியமையாதனவல்ல; தொடர்ப் பொருளோடு அகற்று முறையே உபகாரமாயும், வேறாயும் ஒரு பொருள் உடன் தோன்ற நிற்பன என்பது தெளிவாம். இவை தொடரியற் கூறுகளையும் பொருளியற் கூறுகளையும் விளக்குவனவாம்.

## 3.00 சொல்லியல்

சொல்லதிகாரத்துள் சொற்களின் சொன்மை நிலையே எடுத்தோதப்பட்டது என்பார் தெய்வச்சிலையார். அதனை இற்றை மொழியியலார் 'பொருளுருக' (form) என்பர். இது பற்றித் தெய்வச்சிலையாரின் கருத்துக்களைக் காண்போம்.

### 3.1. அடி

உரிச்சொல்லைத் தொல்காப்பிய எழுத்ததிகாரம், 'குறைச் சொற்கிளவி' (தொல். 482) எனக் கூறுதலின், வடநூலார்

காது எனக் குறிப்பிட்ட சொற்களே இவை என்பது தெய்வச்சிலையார் கொள்கை (தொல். சொல். தெய்வ. ப. 190) காது வாதற்கு ஏற்ப, உறு என்னும் உரிச்சொல் முறையே உறுவன் என்ற பெயர்க்கும், உற்றான் என்ற வினைக்கும் அங்கம் ஆயிற்று என்று காட்டுகின்றார். அடிச்சொல மற்றொரு சொல்லிற்கு உறுப்பாகாமல் தனியே அடைமொழியாகவும் வழங்குதலை, உறு வளி என்ற காட்டால் புலப்படுத்துகின்றார் (தொல். சொல். தெய்வ. ப. 191).

## 3.2 இணைப்பு

அடிச்சொல்லொடு இணையும் இடைநிலை, விகுதி, ஆகியன பற்றியும் தெய்வச்சிலையாரின் கருத்துக்கள் குறிப்பிடத்தக்கவை. அவை பின்வருவன.

### 3.21 'டு' விகுதி

'டு' என்பது ஒன்றன்பால் விகுதியாதல் கொண்டு, இரண்டு என்பது ஒன்றன்பால் என்பர் (தொல். சொல் தெய்வ. ப. 14). பவணந்தியார் (நன். 280) இதனைப் பலவின்பால் என்றார். இது ஓர் எண்ணின் பெயரே ஆதலின் ஒன்றன்பால் என்றலே வற்புடைத்து.

### 3.22 கால இடைநிலைகள்

டு, கின்று, பு என்பவை முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய காலங்களைக் காட்டும் எழுத்துக்கள் என்பார் தெய்வச்சிலையார் (தொல். சொல். தெய்வ. ப. 132).

## 3.3 பெயரும் வினைக் குறிப்பும்

அவர் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் வேறுபாடு கூறுவார். குழலன் கோட்டன், கச்சினன் என்பவை வினைக்கருத்து உள்வழி வினைக்குறிப்பாம்; பெயர்க் கருத்து உள்வழிப் பெயராம் என்பது அவர் காட்டும் வேறுபாடு.

"அதுச் சொல் வேற்றுமை உடைமையானும்" (தொல். 698) என்ற வரியைக் கொண்டு வினைக் குறிப்பை விளங்குங்கால், "உடைமையாவது உடையானும் உடைப் பொருளும் தோன்ற வரும். 'சாத்தனது உடைமை குழை', என்பது இதனுள், உடைப்பொருளை முந்துறக் கிளக்குங்கால் குழையை உடையன் சாத்தன் என வரும். ஆண்டு, உடையன் என்பது பெயரும் இன்றி, வினையும் இன்றி நின்றதாயினும், உருபு ஏலாது வினைச் சொல் போல நிற்றலின் வினைக்குறி பெற்றது" (தொல். சொல். தெய்வ. ப. 137) என எழுதுகின்றார்.

## 3.4. வினைச்சொல்லில் காலம்

வினையெச்ச வாய்பாடுகட்கு உரிய காலத்தைப் பின்வருமாறு தெய்வச்சிலையார் கூறுகிறார் (தொல் சொல் தெய்வ. ப 148). செய்து-இறந்த காலம்; செய்தென-இறந்த காலம் (இது செய்து என்பதன் திரிபு என்பார்); செய்யூ-இறந்தகாலமும் நிகழ்கால மும்; செய்யியர், செய்யிய எதிர்காலம்; செய்பு, செய-மூன்று காலமும்; செயின்-எதிர்காலம்; செயற்கு-எதிர்காலம்.

## 3.5. வியங்கோள்

வியங்கோள் என்பது படர்க்கையிடத்தில் வரும் ஏவலே என்று விளக்குகின்றார் தெய்வச்சிலையார். பாலுணர்த்தாமையின் வேறு குறி பெற்றதென்கிறார் (தொல். சொல். தெய்வ. ப. 146).

> " ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
> ஆஅதும் என்னு மவர் " (குறள். 653)

என்னும் குறளில், 'ஓதல் வேண்டும்' என்பது வியங்கோள் என்பார் என்னை? வேண்டும் என்பது செய்யும் என்ற முற் றெனக் கொள்ளின், என்னுமவர் என்ற பலர்பாற் சொல்லிற்கு ஏலாது, என்று விளக்குவார் (தெய்வ. ப. 147) இங்கு வேண் டும் என்பது வியங்கோள் விகுதியன்று; அது ஓதல் என்

னும் சொல்லுடன் தொடர்ந்து, தொடராகி வியங்கோளை உணர்த்திற்று.

3.6. செய்யும் என் எச்சம்

செய்யும் என்னும் பெயரெச்சம் வினையும் உருபும் ஆகிய இரு நிலைமைத்து என்கிறார். செய்+உம் எனப் பிரியும் என்பது கருத்து. இவ்வும்மை ஆக்கவும்மை என்பார் (தொல். சொல் தெய்வ ப. 169,170).

3.7. உவம உருபுகள்

உவமவுருபுகள் இடைச்சொல் அன்று, வினைமுற்றும், வினையெச்சமும், பெயரெச்சமும் ஆக நிற்பவை, வினைக்குறிப்புக்கள் என்பது தெய்வச்சிலையார் கொள்கை (ப. 165, 166). "ஒப்பில் வழியால் பொருள் செய்குந", என்பதற்கு ஏனைய உரையாசிரியர் உவம உருபுகள் (தொல். சொல். சேனா. ப. 164, 165; நச்சி. ப. 165, 166; கல்லா. ப. 194, 195) என்று உரைத்தனர். தெய்வச்சிலையார், "கொன்னே கழிந்தது இளமையும்" என்பதில் கொன் என்னும் இடைச்சொல், பொருந்தம் இல்லாதவிடத்து வந்து, பயன் இன்மை உணர நின்றது என்று காட்டுகின்றார் (ப. 168).

3.8. அசைநிலையும், இசைநிறையும்

அசை நிலைக்கும் இசை நிறைக்கும் உள்ள வேறுபாட்டைத் தெய்வச்சிலையார் விளக்குகின்றார்: "இசைநிறையாவது, இசை நிறைத்தற் பொருட்டு ஒரு சொல்லோடு ஒட்டி வரும். அசைநிலையாவது தனி வரும்" (தெய்வ ப. 177) என்பது அவர் விளக்கம். 'அளிதோ தானே யதுபெறலருங் குரைத்தே' என்பதில், 'குரை' இசை நிறைத்தது; "நல்குர வென்னும் இடும்பையுட பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும்' (குறள். 1045) என்பதில் குரை அசைநிலை (ப. 177).

## 4.0 முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் மொழிபற்றியும், தமிழ்த் தொடரியல், சொல்லியல், பற்றியும் தொல்காப்பியச் சொல்லதிகார உரைவழித் தெய்வச்சிலையார் தெரிவித்த கொள்கைகள் அறியப் பட்டன. அவ்வை தொல்காப்பிய நூற்பாக்களுடன் பொருந்தியனவாகவும் கால வளர்ச்சியில் நிகழ்ந்த மொழி வளர்ச்சியை எடுத்துக் காட்டுவனவாகவும், இற்றை மொழியியலாரின் கருத்துக்களுடன் ஒப்பு நோக்கத் தக்கனவாகவும் உள்ளமையும் அறியப்பட்டது.

# 22

# சேனாவரையரின் இலக்கணக் கொள்கை

ந. வீ. செயராமன்
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*

முன்னுரை

செந்தமிழ் மொழியின் இலக்கண வளத்துக்கு முன்னோடிச் சான்றாகத் திகழ்வது தொல்காப்பியம் என்னும் ஒல்காப்பெருஞ் செல்வம். இந்நூலின் சொல்லதிகாரப் பகுதிக்கு உரைகண்டவர் சேனாவரையர். "ஆனா இயல்பிற் சேனாவரையர்" என்றும் "வடநூற் கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர்" என்றும் அமைந்த சொன்மாலைகள் இவரது உரைவளத்தையும் மதிநலத்தையும் உணர்த்தும் சான்றுகள்.

சேனாவரையரின் உரை இலக்கிய நலம் வாய்ந்தது. தெள்ளத் தெளிவாக ஏதுக்கள் காட்டித் தன் இலக்கணக் கொள்கையை இனிது இயம்பும் பான்மை இவருக்கே உரியதாகும். பிற உரையாளிகளின் கருத்துக்களின் பொருத்தமற்ற தன்மையைச் சான்று காட்டி விளக்கி, தனது கொள்கையே நூலாசிரியன்

கருத்துக்கும் உலகவழக்குக்கும் ஏற்றது என்று சேனாவரையர் நிறுவும் இடங்கள் பல அவரது நுண்மாண் நுழைபுலத்தினையும் திறனாய்வுச் செப்பத்தையும் திறம்பட உணர்த்துகின்றன. தன் கருத்துக்கு ஏற்பக்கூறிய முன்னோர் உரைகளையும் பொன்னே போல் போற்றித் தன்னுரையுள் பொதிந்து வைக்கும் பெருமிதமும் சேனாவரையருக்கு உரியது.

சொல் விளக்கம்

சொல்லதிகாரத்துக்கு உரை எழுதப்புகும் சேனாவரையர், சொல் என்பது யாது, என்ற வினாவிற்கு விடையிறுக்கும் நிலையில், "சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது" (தொல். சொல். சேனா. ப. 2) எனத் தம் கருத்தைச் சுவைபடக் கூறியுள்ளார். எழுத்துக்கள் தனித்து நின்றும் தொடர்ந்து நின்றும் பொருளுணர்த்தும் இயல்பின. ஆயினும் தனித்து நிற்கும் எழுத்துக்கும் சொல்லில் தொடர்ந்து நிற்கும் எழுத்துக்களுக்கும் இடையில் நுட்பமான வேறுபாடு உண்டு. சொற்களில் அமைந்த எழுத்துக்கள் தத்தமக்குரிய அனைத்து இலக்கணமும் பெறாது அவ்விடத்துக்கு ஏற்ற அளவான இலக்கணத்தையே பெற்று வருகின்றன. இங்ஙனம் சொல்லில் தொடர்ந்து நிற்கும் எழுத்துக்கள், எழுத்தாக விளங்கும் தனி நிலையில் தமக்குரிய எல்லா இலக்கணங்களையும் பெறாமல், இடத்திற்கேற்ப அளவான இலக்கணம் பெற்று வரும் நுட்பத்தையே சேனாவரையர் "எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்" என்று குறிப்பிடுகின்றார்.

நச்சினார்க்கினியர், "எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையே சொல்" (தொல். சொல். நச்சி. ப 1) என்றும், தெய்வச்சிலையார் "எழுத்தினானியன்று பொருள் அறிவிப்பது சொல்' (தொல். சொல். தெய்வ ப. 5) என்றும் சொல் என்பதற்குத் தரும் விளக்

கங்களில், "ஒருபுடையான் ஒற்றுமை உடைத்தாய்" (சேனா.ப. 2) என்றும் நுட்ப நிலையை நாம் காணவில்லை. இளம்பூரணரும் சொல்லாவது, "எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை" தொல். சொல். இளம். ப. 1) எனப் பொது நிலையில் குறிப்பிட்டிருப்பினும், தனக்கு முன்னர் வாழ்ந்த உரையாளிகளைப் போற்றும் பண்பினராய சேனாவரையர் உரையாசிரியர் விளக்கத்துள்ளும் இந்நுட்பம் அமைந்துள்ளதாக ஏற்றுக் கொள்கின்றார். "உரையாசிரியரும் எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து என்பார், 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின் ஒருபுடையொற்றுமையே கூறினார்" என்ற சேனாவரையர் உரைப் பகுதி (ப. 2) அவர்தம் இலக்கணக் கொள்கையைச் சுட்டுவதோடு மட்டுமின்றி உள்ளத்தின் உயர்ந்த பண்புநிலையையும் சுட்டி நிற்கின்றது.

சேனாவரையரின் இவ்வுரை நுட்பத்தையும் கொள்கையையும் பின்பற்றியே நன்னூல் உரையாளி சங்கரநமச்சிவாயரும் "எழுத்தானாய பதம் அரிசனம் முதலியவற்றால் சமைந்த சுண்ணம் போலாது மலரால் சமைந்த மாலைபோல நிற்பது" (நன். சங்கர. ப. 69) என விளக்கியுள்ளார்.

## கொள்கை விளக்கம் : பல நோக்கு

சேனாவரையரின் இலக்கணக் கொள்கைகள் அவர்தம் உரைமுழுதும் ஆங்காங்கே ஒளிவீசி நிற்கின்றன "என்மனார்" என்ற சொல் செய்யுள் முடிபெய்தி நின்ற ஆர் ஈற்று எதிர்கால முற்றுச் சொல்லே (சேனா. ப. 3) என்றும், "உண்ப" என்னும் சொல் பகாவீற்றுப் பலர்பால் சொல்லன்று; அகரவீற்றுப் பலவறி சொல்லே (சேனா. ப. 10) என்றும் தனிச்சொற்களை நோக்கி அவர்தம் இலக்கணக் கொள்கைகளை நிறுவும் இடங்கள் சில.

"மக்கட்சுட்டு" என்பது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை (சேனா. ப. 4) என்று இலக்கண

நோக்காலும், "பொருளொடு புணராச் சுட்டுப் பெய" ராவது சாதியும் பண்பும் தொழிலும் முதலாயின பற்றி ஒரு பொருளை வரைந்துணர்த்தாது எல்லாப் பொருள் மேலும் செல்வது (சேனா. ப. 31) என்று பொருள் நோக்காலும் தொடர்களை நோக்கி அவர் தம் இலக்கணக் கொள்கைகளை நிறுவும் இடங்கள் பல.

நுட்பமான வேறுபாடுடைய தொடர்களுக்கிடையே அவ் வேறுபாட்டைச் சுட்டி இருவகைத் தொடர்களையும் விளக்கும் முறையாலும் தொடர்களின் வேறுபாட்டைச் சுட்டும் முறை யாலும் பலவிடங்களையும் விளக்கும் முறையாலும் சேனாவரையர் பலவிடங்களில் தமது இலக்கணக் கொள்கையைச் சுட்டியுள்ளார். உறழ் பொருளாவது ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது; துணைப்பொருளாவது ஒப்புமை கூறப்படுவது (சேனா. ப 15) என்றும், பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்புவகையான் அறியப்படாமை நோக்கி வினவுவது அறியான் வினா; அறியப் பட்ட பொருளையே ஒரு பயன் நோக்கி வினவுவது அறி பொருள்வினா (சேனா. ப. 14) என்றும் பொருள் மயக்கமாவது தன்பொருளில் தீராது பிறிதொன்றன் பொருட்கண் சேறல்; உருபுமயக்கமாவது தன் பொருளில் தீர்ந்து சேறல் (சேனா ப. 73) என்றும் வருகின்ற பகுதிகள் தொடர்களுக்கிடையே அமைந்த வேறுபாட்டு நிலையைச் சுட்டித் தம் இலக்கணக் கொள்கையைச் சேனாவரையர் நிறுவும் இடங்களுள் குறிப்பிடத் தக்கவை.

சேனாவரையர் தம் இலக்கணக் கொள்கையை நிறுவும் இடங்கள் சிலவற்றுள், பிறர் கருத்துக்களையும் ஏற்றுத் தெளிவுபடுத்தும் பகுதிகள் சுட்டத்தக்கவை. உரிச்சொற்களின் பெயர்க்காரணத்தை விளக்கும் பொழுது, "இசை,குறிப்பு,பண்பு என்னும் பொருட்குத் தாமேயுரியவாகலின் உரிச்சொல்லாயிற்று" என்று கூறி, "பெரும்பான்மையும் செய்யுட்குரியவாய வருதலின்

உரிச்சொல்லாயிற்று என்பாருமுளர்" (சேன. ப. 4) என்று பிறர் கருத்தையும் சுட்டிச்சொல்லும் உரைச்செப்பம் சேனவரையத்தில் நாம் காணும் சிறப்பு.

கூறப்பட்ட பருமை இலக்கண நிலையினின்று நுட்ப இலக்கணக் கூறையுங் கொள்ளவைக்கும் உரைநலத்தாலும் சேனவரையர் தம் இலக்கணக் கொள்கையை நிறுவுகின்றார். இடைச்சொல்லின் பொது இலக்கணம் கூறும் தொல்காப்பியர் பெயரொடும் வினையொடும் சார்ந்து நடைபெறுவது; தமக்கென்று தனி இயல்பு இல்லாதது என இருவகை இலக்கண நிலைகளைச் சுட்டியுள்ளார் (தொல். 734). சேனவரையரோ இடைச்சொல் சாரப்படும் சொல்லின் வேறாய் வருதலேயன்றி, அச்சொல்லின் உறுப்பாக வருதலும் உண்டு எனக்கூறி, சொல்லின் உறுப்பாக வருதலும் இடைச்சொல்லுக்குரிய இலக்கணம் எனத் தனது இலக்கணக் கொள்கையை நிறுவுகின்றார் (சேன. ப. 163).

பெயரெச்சம்

சேனவரையரின் இலக்கணக் கொள்கையைப் பரந்துபட்ட அளவில் பருமையாகக் காணாது ஒரு கருத்தைமட்டும் சுட்டி நுட்பமாக ஆய்வது பொருந்தும் ஆதலால் பெயரெச்சம் பற்றிய சேனவரையரின் இலக்கணக் கொள்கை இங்கு ஆய்வுக்குரியதாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

தொல்காப்பியர் பெயரெச்சம் பற்றிய இலக்கணத்தை வினைச்சொல்லாந்தன்மை பெற்று இருத்தலால் வினையியலுள்ளும், எச்சமாதல் தன்மை நோக்கி எச்சவியலுள்ளும் குறிப்பிட்டுள்ளார்.

வினைச்சொற்களை உயர்திணை வினை, அஃறிணை வினை, விரவு வினை எனத் திணை அடிப்படையில் பிரித்து அவற்றுள் விரவு வினையுள் அமைந்த "அம்முறை நின்ற ஆயெண் கிளவி" (தொல். 707) யுள் ஒன்றாக வினையெச்சத்தைக் கூறியுள்ளார் தொல்காப்பியர்.

பெயரெச்சமும் 'அம்முறை நின்ற ஆயெண் கிளவி'யுள் ஒன்று எனத் தொல்காப்பியர் வெளிப்படையாகச் சுட்டவில்லை. எனினும் அவர் கூறியுள்ள சில வாய்பாட்டுச் சொற்களைக் கொண்டு பெயரெஞ்சுகிளவியும் விரவுவினையுள் ஒன்றாகக் கூறப்பட்டது என்று சேனாவரையர் தன் கருத்தாக இதனை விளக்குகின்றார் செய்யும் என்னும் வாய்பாட்டுச் சொல் முற்றாகவும் எச்சமாகவும் வரும் செய்த என்னும் வாய்பாட்டுச் சொல் எச்சமாகவே வரும் எனவே எச்சமாக வருங்காலை இவ்விரண்டு வாய்பாட்டுச சொற்களும் பெயரெஞ்சுகிளவிகளாகவே விளங்குகின்றன என்னும் தமது கருத்தைச் சேனாவரையர் விளக்கத்தாலும் சான்றுகளாலும் வெளிப்படுத்துகின்றார். "செய்யுமென்பது முற்றும் எச்சமுமாகிய இருநிலைமையுமுடைத்தாய் உம்மீற்றான் நிகழ் காலமுணர்த்தும்; செய்தவென்பது அகரவீற்றெச்சமாய் இறந்த காலம் உணர்த்தும்" (சேனா. ப. 145), என்பது சேனாவரையர் விளக்கம். எனவே விரவுவினைக்குரிய "அம்முறை நின்ற ஆயெண் கிளவியுள்" செய்யும் செய்த என்னும் வாய்பாட்டினையுடைய இரண்டு எச்சங்களும் பெயரெச்சங்களே என்பது சேனாவரையர் கருத்தாதல் அறியலாம். தொல்காப்பியர் பெயரெச்ச வாய்பாடுகளைச் சுட்டுங்கால் "செய்யும் செய்த என்னும் சொல்லே" (தொல். 719) எனக் குறிப்பிட்டமைக்கு ஏற்ப சேனாவரையர் உரை அமைந்துள்ளது.

உரியபொருண்மை

"நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கு மோரன்ன வுரிமைய
செய்யும் செய்த வென்னுஞ் சொல்லே" (தொல். 719)

என்பது தொல்காப்பியத்துள் அமைந்த பெயரெச்சம் பற்றிய நூற்பாவாகும். நிலம், பொருள், காலம், கருவி, வினைமுதற் கிளவி, வினை என்ற ஆறு பொருள்களை மட்டுமே தொல்காப்பியர்

சுட்டி, இவ்வாறு பொருளுக்கும் உரிமையுடையவாய் செய்யும், செய்த என்ற வாய்பாட்டோடு வருபவை பெயரெச்சங்கள் என்று பெயரெச்சத்தின் இலக்கணத்தைக் கூறியுள்ளார்.

சேனாவரையர், "ஆயெட்டென்ப தொழில் முதல்நிலையே" (தொல். 596) எனத் தொழிலின் முதல் நிலையாகக் குறிக்கப் பட்ட எட்டனுள் இரண்டனை நீக்கி, எஞ்சிய ஆறினை இங்குக் குறிப்பிட்டதாக உரை எழுதுவர் (சேனா ப 154). எனவே வினைச்சொல் தோன்றுதற்குரிய முதனிலையாகிய காரணம் அல்லது காரகத்தையே பொருளாகக் கொண்டு பெயரெச்சமும் பிறக்கும் என்ற தனது இலக்கணக் கொள்கையைச் சேனா வரையர் இவண் வெளிப்படுத்தியுள்ள திறம் அறிந்து மகிழ்தற் குரியதாகும்.

தொழில முதனிலை எட்டனுள் எஞ்சிய இன்னதற்கு இது பயன் ஆகிய இரண்டினையும் பொருளாகக் கொண்டும் பெய ரெச்சம் சிறுபான்மை பிறக்கும் என்னும் தனது கொள்கையை, "இவற்றிற்கு ஒத்தவுரிமைய எனவே ஒழிந்த விரண்டற்கும் இவற்றோடு ஒப்பவுரியவாகா, சிறுபான்மையுரிய வென்றவாறும்" (சேனா. ப. 154) எனவரும் பகுதியால் சேனாவரையர் விளக்கு கின்றார்.

தொழில் முதனிலையாகவுள்ளனவற்றையே பொருளாகக் கொண்டு பெயரெச்சம் பிறக்கும் என்பதே சேனாவரையரின் இலக்கணக் கொள்கை என்பதை நிறுவுவதற்குப் பிறிதொரு சான்றும் துணையாகவுள்ளது. தொழில் முதல்நிலையை விளக் குங்கால் வினை நிகழ்தற்கு முதல் நிலையாக அமைந்த ஏதுப் பொருண்மையைக் கருவி என்னும் முதல்நிலையுள் அடக்கிக் கூறியுள்ளதைப்போன்று (சேனா. ப. 88, 89), பெயரெச்சம் பொருளாகக் கொள்ளும் ஏதுப்பொருண்மையையும் கருவிக்கண் அடக்கினர் (சேனா. ப. 154). இரண்டிடத்தும் சேனாவரையர்

தரும் விளக்கங்கள் அறிதற்குரியவை. "ஈண்டு ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடக்கப்பட்டது" (சேனா. ப 88). "நோய்தீரு மருந்து, நோய்தீர்ந்த மருந்து என்னும் ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடங்கும்" (ப 154).

நீங்கற்பொருள்

பெயரெச்சம் பிறப்பதற்குப் பொருளாகவுரியவை எனத் தொல்காப்பியரால் சுட்டப்பட்ட பொருண்மைகளுக்கு மேலும் பிறக்கும் பெயரெச்சங்களுள், நீங்கல் பொருளை அடிப்படையாகக் கொண்டு பிறக்கும் பெயரெச்சமும் ஒன்று. இதற்குச் சான்றாகப் பழம் உதிருங்கோடு, பழம் உதிர்ந்தகோடு ஆகியவற்றைச் சேனாவரையர் சுட்டுவர். இதனை நீங்கல பொருளாகக் கொள்ளாது எல்லைப் பொருளாகக் கொண்டே சேனாவரையர் உரையின் பழைய பதிப்புக்கள் வெளியிடப் பெற்றன.[1] நீங்கல் பொருளாக அமைந்த இதனை எல்லைப்பொருள் என்று கூறிய தற்கு ஏற்ப, "பழம் உதிருங்கோடு என்பதைக் கோட்டினின்றும் பழம் உதிர்ந்தது எனமாற்றி, கோடு எல்லையாதல் காண்க"[2] என்று தமிழுலகம் விளக்கமும் அளித்தது. ஆயினும் இதனை நீக்கப் பொருள் என்றே கொள்ளுதல் பொருத்தமுடையதாகும் எனப் பேராசிரியர் ஆ. பூவராகம்பிள்ளை முதன் முதலாகக் குறிப்பிட்டார்.[3] இக் கருத்தினை ஏற்று, பின்னே வந்த பதிப்பாசிரியர்கள் எல்லைப்பொருள் என்ற பாடத்தைத் நீங்கல் பொருள் எனக் கொண்டு பதிப்பித்தனர்.[4]

நீங்கல் பொருளையும் எல்லைப் பொருண்மையாகக் கொண்டு அதனடியாகப் பெயரெச்சம் பிறக்கும் என்ற தனது இலக்கணக்

1. ஆறுமுகநாவலர் பதிப்பு, 1934, ப. 185
கணேசையர் பதிப்பு, 1938, ப. 278, 279
சைவசித்தாந்தக் கழகப் பதிப்பு, 1962, ப. 154
2. பூவராகம் பிள்ளை, 1962, ப. 120; கணேசையர், 1938, ப. 279
3. பூவராகம்பிள்ளை, 1962, ப. 120
4. சுந்தரமூர்த்தி, 1966, ப. 272

கொள்கையைச் சேனாவரையர் இங்குச் சுட்டியுள்ளார். நீங்கல், எல்லைப் பொருண்மைகள் தொல்காப்பியரால் சுட்டப்படாமை யால் (தொல். 562), சேனாவரையர் தான் எடுத்துக் காட்டிய இப் பொருளுக்கு 'இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி'க் குரிய பொருளின் பாகுபாட்டிலிருந்து அடிப்படையை அமைத் துக் கொள்கின்றார். "எல்லைப் பொருள் பஃறொழில் பற்றி வரும் சிறப்பின்று ஆகலின் தொழில் முதலொடு கூறாது "இன்மையுடைமை நாற்றம் தீர்தல்" (தொல். 562) என்னும் பொருண்மையால் தழீஇக் கொண்டார்" (ப. 154) எனவரும் சேனாவரையர் விளக்கம் அறியத்தக்கது.

பொருளா, முடிபா?

நிலம், பொருள், காலம், கருவி; வினைமுதற்கிளவி, வினை என வரும் பெயரெச்சத்தின் பொருண்மைகளைப் பொருள் என்றே கூறுதல் வேண்டும் என்பது சேனாவரையரின் கருத்து. "அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய" (தொல். 719) என்று தொல்காப்பியரும் இவற்றைப் பொருண்மை என்ற பெயராலேயே சுட்டியுள்ளார் ஆதலால் நூலாசிரியன் கருத்துக்கேற்ப, உரை யாசிரியர் சேனாவரையரும் தன் கருத்தைச் சுட்டும் பான்மையை இங்குக் காண்கின்றோம்.

"பெயரெஞ்சுகிளவி பெயரொடு முடிமே" (தொல். 916) என எச்சவியலிற்றான் முடிக்கும் சொல் என்ற பெயரால் தொல்காப்பியர் இவற்றைச் சுட்டியுள்ளார். எனவேதான், சேனா வரையரும் "முடிபு எச்ச வியலுட் பெறப்படும்" (சேனா ப. 155) என்றும் "நில முதலாயினவற்றைப் பெயரெச்சப் பொருளென் னாது முடிக்குஞ்சொல் எனின் அவ்வறு பொருட்குமென்னாது அவ்வறு பெயர்க்குமென்றோதுவார். ஆகவே பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே என்னும் சூத்திரம் வேண்டாவாம்; அதனான் இவை பொருளென்றலேயுரை" (சேனா ப. 155) என்றும் சேனாவரையர் விளக்கம் தந்துள்ளார்.

எனவே, நிலம் முதலிய ஆறையும் வினையியலுள் பெயரெச்சம் தோன்றுதற்குரிய பொருண்மைகள் என்றும், எச்சவியலுள் பெயரெச்சம் கொண்டு முடியும் முடிபுச் சொற்கள் என்றும் கூறப்படுதல் வேண்டும் என்ற தம் கருத்தைச் சேனாவரையர் இதனால் விளக்கியுள்ளார்.

செய்யும் என்னும் வாய்பாடு

செய்யும் என்னும் வாய்பாடு பெயரெச்சத்திற்குரியது என்பதைச் "செய்யுஞ் செய்த என்னும் சொல்லே" (தொல். 719) எனவரும் தொல்காப்பியத் தொடரால் அறிகின்றோம். இனி, செய்யும் என்ற வாய்பாடு முற்றாகவும் நிகழ்காலம் உணர்த்தி விரவு வினையாக வரும் என்பதைச் "செய்யும் என்பது முற்றும் எச்சமுமாகிய இருநிலைமையுடைத்தாய் உம்மீற்றான் நிகழ் காலம் உணர்த்தும்" (சேனா. ப. 145) எனவரும் சேனாவரையர் விளக்கத்தால் அறியலாம்.

தொல்காப்பியர் செய்யும் என்ற வாய்பாட்டுச் சொல்லுக்கு ஈரிடத்தில் பின்வருமாறு விதி கூறியுள்ளார்.

"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா" (தொல். 712)

"அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்றும் உரித்தே" (தொல். 720)

என்பவை அவ்விரு நூற்பாக்கள். பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை என முன் நூற்பாவில் சுட்டப்பட்டவற்றையே பின்னே உள்ள நூற்பாவில் "முதற்கண் வரைந்த மூவீறு" என்ற தொடரால் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். முதல் நூற்பாவில் செய்யும் என்ற வாய்பாட்டுச் சொல் கூறப் பட்ட மூன்றிடத்தும் வாரா என்றும், பின்னுள்ள நூற்பாவில்

செய்யும் என்ற வாய்பாட்டுச் சொல் கூறப்பட்ட மூன்றிடத்தும் வரும் என்றும் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். மேலெழுந்த வாரியாக நோக்குங்கால் முரணாக அமைந்தது போன்றுள்ள இவ்விரு நூற்பாக்களில் முதல் நூற்பா செய்யும் என்ற வாய்பாட்டு முற்றுச் சொல்லிற்குரிய விதியைக் கூறுவது என்றும், பின் னுள்ள நூற்பா செய்யும் என்ற வாய்பாட்டு எச்சச் சொல்லிற் குரிய விதியைக் கூறுவது என்றும் சேனாவரையர் மிக நுட்ப மாக இவ்வேறுபாட்டை விளக்கியுள்ளார். "செய்யுமென்னும் சொல் அப்பொருண்மைக்குரித்தாயும் உரித்தன்றியும் வரும் இரு நிலைமையும் உடைத்து என்பது பெறுதும்; அவற்றொடு வரும் நிலை பெயரெஞ்சு கிளவியாம்; அவற்றொடு வாராத நிலைமை முற்றுச் சொல்லாம்" என இவ்விரண்டு நூற்பாக்களிடையே மேலெழுந்தவாரியாகத் தோன்றும் முரண்பாட்டைச் சேனாவரை யர் மிக நுட்பமான விளக்கத்தால் தெளிவுபடுத்துகின்றார்.

எனவே செய்யும் என்னும் வாய்பாட்டுச் சொல் பெய ரெச்சமாக வருங்கால் பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய மூவிடத்தும் வரும் என்ற செய்தியை அறிகின்றோம்.

**பொருணிலை திரியா**

பெயரெச்சச் சொற்கள் உடன்பாட்டு வாய்பாட்டால் (செய்யும் செய்த) கூறப்படுங்கால் பொருணிலை திரியாது இருத் தல் போன்று, எதிர்மறை வாய்பாட்டால் (செய்யா) கூறப்பட் டாலும் பொருணிலை திரியாது என்று தொல்காப்பியர் குறிப் பிட்டுள்ளார் (தொல். 721).

"பொருணிலை திரியா (தொல். 711) என்பதற்கு "எச்சப் பொருண்மையிலிருந்து திரியா" எனப் பொருணிலையால் முதலில் விளக்கம் தந்தார் சேனாவரையர் (சேனா. ப. 156). பின்னர் அதனையே மேலும் விளக்குங்கால் "பொருணிலையாவது தம் எச்சமாகிய பெயரைக் கொண்டல்லது அமையாத நிலைமை"

(சேனா. ப. 156) என்றும் குறிப்பிட்டுள்ளார். எனவே பெயரெச்ச வாய்பாட்டுள் எதிர்மறைப் பொருளாக வருவது, "செய்யா" என்ற வாய்பாட்டுச் சொல் என்றும், அங்ஙனம் எதிர்மறை வாய்பாட்டால் வரும் அச்சொல்லும் பெயரைக் கொண்டே முடியும் என்றும் தனது கருத்தைச் சேனாவரையர் இதன் மூலம் விளக்கியுள்ளார்

எதிர்மறைப் பெயரெச்சத்திற்குரிய வாய்பாட்டைக் கூறுவதில் சேனாவரையர் நம் கால வழக்கு நிலைக்கு ஏற்ப இங்கு அமைத்துக் காட்டியுள்ளார். "செய்யா" என்ற வாய்பாட்டுச் சொல்லோடு செய்யாத என்ற வாய்பாட்டுச் சொல்லும் எதிர் மறைப் பெயரெச்சத்திற்கு உரியது என்றும், "செய்யாத" என்ற வாய்பாடே ஈறுகெட்டு "செய்யா" என நிற்கும் என்றும் தனது கருத்துக்களைப் பின்வரும் பகுதியால் தெளிவுறுத்துகின்றார். "உண்ணா என்பது உண்ணும், உண்ட என்னும் இரண்டற்கும் எதிர்மறையாம்; உண்ணாத என்பதும் அது" (சேனா. 156).

சிவணும் குறிப்பு

பெயரெச்சம் அறுவகைப் பெயர்ப்பொருளையும் கொண்டு முடியுங்கால் இடையே சிலவகைச் சொற்கள் வருதல் உண்டு. இதனைத்,

"தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்,
எச்சொல்லாயினும் இடைநிலை வரையார்" (தொல். 722)

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். பெயர்ச் சொற்கள் பின்னுள்ள சொல்லோடு இயையும் குறிப்புடையன வாயின் இடையே பிற சொற்கள் பயின்று வரலாம் என்பதால், அங்ஙனம் இயையும் குறிப்பு இல்வழி இடையே பிறசொற்கள் பயின்று வருவது நீக்கப்படும் என்ற கருத்தையும் சேனாவரையர் இங்குப் பெறவைக்கின்றார் (சேனா. ப. 157).

இடையே இங்ஙனம் பயின்றுவரும் சொற்களை இடைக்கிடப்பு (தொல். சொல். தெய்வ. ப. 154) என்ற சொல்லாலும் இடைப்பிறவரல் (நன். 356) என்ற சொல்லாலும் பிறர் குறிப்பிடுவர்.

சிவணுங்குறிப்பு உள்ளவிடத்துப் பிற சொற்கள் இடையே வரும் எனப் பொதுநிலையால் தொல்காப்பியர் குறிப்பிட்டிருப்பினும் சேனாவரையர் தனது மதிநுட்பத்தால் சிலவகை முடிபுகளில் இடையே பிறசொற்கள் வருதல் கூடாது என்ற தனது கொள்கையையும் இக்கு நிறுவியுள்ளார். "சிவணும் குறிப்பின் வரையார் எனவே சிவணக் குறிப்பின் வரைபவென்பதாம்" (சேனா ப. 157 என்பர் சேனாவரையர். மேலும் "சிவணக் குறிப்பினவாவன—ஒரு தலையாக எச்சத்தோடியைந்து நில்லாது நின்ற சொல்லோடும் தாமேயியைந்து கவர்பொருட்படுவன" (சேனா ப. 157) என்றும் விளக்கம் கூறியுள்ளார்.

"கொல்லும் காட்டுள் யானை", என்ற தொடரில் இடையே நின்ற காட்டுள் என்ற சொல் பெயரெச்சத்தோடு இயைந்தாலும் கவர்பொருட்படுதல் இல்லை; ஆனால் "வல்லம் எறிந்த நல்லிளங் கோசர் தந்தை மல்லல்பானைப் பெருவழுதி' என்ற தொடருள் வல்லமெறிதல் நல்லிளங்கோசர்க்கும் ஏற்கும் ஆகலின், ஆண்டுப் பொருள் கவர்க்கும் என்று சான்றுகளின் மூலம் சேனாவரையர் இதனை விளக்கியுள்ளார் (சேனா. ப. 157). எனவே கவர்பொருட்படுதல் இல்லாதவிடத்து மட்டுமே எச்சத்திற்கும் பொருளுக்கும் இடையே "இடைப்பிறவரல்" வரலாம் என்ற தனது கொள்கையைச் சேனாவரையர் இதன் மூலம் சுட்டியுள்ளது அறியத்தக்கது.

**எச்சொல்லாயினும்**

இனி "எச்சொல்லாயினும்" (தொல். 722) என, நூற்பாவுள் பயின்ற விதப்புக் கிளவியின் துணையாலும் தமக்குரிய

இலக்கணக் கொள்கையொன்றைச் சேனாவரையர் சுட்டுகின்றார். "இடைப்பிறவரலாக வரும் சொற்கள் இன்ன சொற்களேயாகும் என்று தொல்காப்பியர் வரையறை செய்யாமையான் பெயரெச்சத் தொடருள் வேறொரு பெயரெச்சமும் இடைப்பிறவரலாக வருதல் உண்டு என்று சேனாவரையர் "கவளம் கொள்ளாக் களித்த யானை" என்ற தொடர் மூலமும் தனது இலக்கணக் கொள்கையை நிறுவியுள்ளார் (சேனா. ப. 157)

**உகரம் மெய்யொடு கெடுதல்**

செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் சிலவிடங்களில் இறுதியில் அமைந்த உகரம் மெய்யொடும் கெட்டுவரும் (தொல். 723) எனத் தொல்காப்பியர் விதி கூறியுள்ளார். இங்ஙனம் ஈற்றுமிசை நின்ற உகரம் தான் ஊர்ந்த மெய்யொடும் கெடுதல் எவ்வெவ்விடங்களில் என வரையறுத்தல் இயலாது. அதனை வழக்கு நோக்கியும் செய்யுள் நோக்கியுமே உணர்தல் வேண்டும். இதனை விளக்கும் சேனாவரையர், "கெடுமிடமறிக என்றது, அவ்வீற்று மிசையுகரம் யாண்டும் கெடாது, வரையறுக்கவும் படாது; சான்றோர் வழக்கினுள்ளும் வந்தவழிக் கண்டு கொள்க" (சேனா. ப 157) என்று குறிப்பிட்டுள்ளார். வாவும்புரவி—வாம்புரவி என வரும்.

செய்யும் என்னும் வாய்பாட்டு எச்சத்திற்குக் கூறப்பட்ட இவ்விதியை செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுக்கு உரியதாக்கிக் கூறுவர் சேனாவரையர். "செய்யுமென்னும் முற்றுச் சொற்கு ஈற்றுமிசையுகரம் மெய்யொடும் கெடும்; மெய்யொழித்தும் கெடும்" என்று கூறியுள்ளார். எனவே செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுச் சொல்லுள்ளும் ஈற்றுமிசையுகரம் மெய்யுடனோ மெய்யின்றியோ கெடும் என்பது சேனாவரையர் நிறுவும் இலக்கணக்கொள்கையுள் ஒன்றாகும். "அம்பலூரு மவனொடு மொழிமே" என்றும் "சாரனாடனிவன் றோழியும் கலுழ்மே"

என்றும் வரும் இலக்கியச் சான்றுகளை நோக்கித் தனது இலக்கணக் கொள்கையைச் சேனாவரையர் இங்கு நிறுவியுள்ளார் (சேனா. ப. 157).

நன்னூலார் கருத்து

சேனாவரையர் காலமாகிய கி. பி. 13-ஆம் நூற்றாண்டே நன்னூலார் காலமும் ஆகும்[5] என ஆராய்ச்சியாளர் பொது நிலையில் குறிப்பிட்டாலும், நன்னூலாரைச் சேனாவரையர் காலத்துக்குப் பிந்தியாகக் கருதுவர் பூவராகம்பிள்ளை போன்றோர். இதனை, "இவ்வாறெல்லாம் சேனாவரையர் பிரித்துக் கூறுவதனால் நன்னூல் இவர் காலத்திற்குப் பிற்பட்டது; அன்றி இவர் காலத்தில் வழக்குப் பயிற்சி பெறவில்லை என்று கொள்ள இடமாகின்றது"[6] எனவரும் விளக்கப்பகுதி சுட்டுகின்றது.

பெயரெச்சம் பற்றி நன்னூலார் கருத்தை மட்டும் இங்குச் சுட்டுவது பெயரெச்சம் பற்றிய கருத்து வளர்ச்சியின் வரலாற்று நிலையைச் சுட்டுதற்குச் சான்றாகும்.

செய்த செய்கின்ற செய்யும்என் பாட்டிற்
காலமும் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே (நன். 340)

என்ற நன்னூல் நூற்பா (1) பெயரெச்சம் செய்த, செய்கின்ற, செய்யும் என்ற மூன்று காலத்திற்குமுரிய வாய்பாடு பற்றிப் பிறக்கும் என்றும் (2) செய்வதாதி அறுபொருட் பெயர்களைத் (செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள்) தனது பொருண்மையாகக் கொண்டு பிறக்கும் என்றும் குறிப்பிடுகின்றது

5. பூவராகம் பிள்ளை, 1962, ப 105
6. வேங்கடராமச்செட்டியார் செ. 1958 ப. 217
வேங்கடராஜுலு ரெட்டியார் வே 1959 ப 320

தொல்காப்பியர் இரண்டு வாய்பாடுகளே சுட்ட, நன்னூலார் செய்கின்ற என்ற நிகழ்காலத்திற்குரிய வாய்பாட்டைச் சேர்த்துக் கூறியுள்ளார். செய்யும் என்னும் வாய்பாடு நிகழ்காலம் உணர்த்தும் எனச் சேனாவரையர் குறிப்பிட்டுள்ளார். எனவே நிகழ்காலத்திற்குரியதாகத் தொல்காப்பியத்துள் சுட்டப்பட்ட வாய்பாடு நன்னூலார் காலத்தில் எதிர்காலத்துக்குரிய வாய்பாடாக மாறியுள்ளதைக் காணலாம்.

இங்ஙனம் பெயரெச்சத்தை விளக்கும், நிலையில் சேனாவரையர் தமது இலக்கணக் கொள்கைகளை மிகச் சிறப்புற எடுத்து விளக்கியுள்ளார்.

இனி, இக்கட்டுரைக்கண் சுட்டப்பட்ட முடிபுகள் ஈண்டுத் தொகுத்துக் காட்டப்படுகின்றன.

1. எழுத்துக்கள் சொல்லாகுங்கால் தத்தமக்குரிய எல்லா இலக்கணங்களையும் ஒருசேரப் பெறாது, அவ்வவ்விடத்திற்கேற்ப அளவான இலக்கணம் பெற்று வருகின்றன. எனவே சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது எனச் சேனாவரையர் காட்டியுள்ளார்.

2. தனிச்சொல் நோக்காலும், தொடர் நோக்காலும், வேறுபாடுரைக்கும் நோக்காலும், பிறர் கருத்தைச் சுட்டும் நோக்காலும், பருமையமைப்பினின்று நுட்பநிலை கூறும் நோக்காலும் சேனாவரையர் தனது இலக்கணக் கொள்கைகளை நிறுவியுள்ளார்.

3. 'அம்முறை நின்ற ஆயெண் ணிளவி'யுள் செய்யும், செய்த என்னும் வாய்பாட்டு எச்சங்கள் பெயரெச்சங்களே. அவையும் வினையெஞ்சுகிளவிபோல விரவு வினைக்கு உரியவை.

4. வினைச்சொல் தோன்றுதற்குரிய முதனிலையாகிய காரணம் அல்லது காரகத்தையே பொருளாகக் கொண்டு பெயரெச்சம் பிறக்கும் எனச் சேனாவரையர் சுட்டியுள்ளார்.

5. அறுபொருளுக்கு மேலும் எதுப்பொருண்மை, எல்லைப் பொருண்மை, நீங்கற்பொருண்மை ஆகியவற்றையும் பொருண்மை யாகக் கொண்டு பெயரெச்சங்கள் பிறக்கும் என்பது சேனாவரை யர் கருத்து.

6. பெயரெச்சத்திற்கும் அறுபொருளை வினை இயலுள் பொருண்மை என்றும் எச்சவியலுள் முடிக்கும் சொல் என்றும் குறிப்பிடுதல் வேண்டும் என்பர் சேனாவரையர்.

7. செய்யும் என்ற வாய்பாட்டுச் சொல் பெயரெச்சமாக வருங்கால் பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய மூவிடத்தும் வரும் என்றும், அவ்வாய்பாட்டுச் சொல் முற்றாக வருங்கால் அம்மூவிடத்திலும் வாரா என்றும் சேனாவரையர் இரண்டுக்குமிடையேயுள்ள வேறுபாட்டைச் சுட்டியுள்ளார்

8. இருவகை வாய்பாட்டுப் பெயரெச்சத்திற்கும் செய்யா, செய்யாத ஆகிய வாய்பாட்டுச் சொற்கள் எதிர்மறையாகி வரும். அவையும் உடன்பாட்டுப் பெயரெச்சம் போலப் பொருணிலை திரியாது வரும்.

9. செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுள் ஈற்றுமிசை உகரம் மெய்யுடனே, மெய்யின்றியோ கெடும்.

10. கவர்பொருட்படுதல் இல்லாதவிடத்து மட்டுமே எச் சத்திற்கும் பொருளுக்குமிடையே "இடைப்பிறவரல்" வரும்

11. தொல்காப்பியர் கூறிய பெயரெச்ச இலக்கணத்திற்கும் நன்னூலார் கூறும் பெயரெச்ச இலக்கணத்திற்கும் அமைந்த வேறுபாடு கருத்து வளர்ச்சியின் வரலாற்றைச் சுட்டுகின்றது

மேற்கோள் நூல்கள்

ஆறுமுக நாவலர், (பதிப்பு) 1934, தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையர் உரை, சென்னை

கணேசையர், சி., (பதிப்பு) 1938, தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையர் உரை, உரைவிளக்கக் குறிப்புரையுடன், சுன்னாகம்

சுந்தரமூர்த்தி, கு., (பதிப்பு) 1966, தொல்காப்பியம். சொல்லதிகாரம், சேனாவரையர்உரை (விளக்கவுரையுடன்), திருப்பனந்தாள்

பூவராகம் பிள்ளை, ஆ., 1962, சேனாவரையர் விளக்கவுரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை

வேங்கடராமச் செட்டியார் செ., 1958, 'சேனாவரையர்', கலைக்களஞ்சியம் தொகுதி 5 தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை

வேங்கடராஜுலு ரெட்டியார் வே., 19 9, 'நன்னூல்' கலைக் களஞ்சியம் தொகுதி 6. தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

# 23

# நச்சினார்க்கினியர் உரைகொண்டு நாமறியும் வழக்காறுகள்

சக்திப்பெருமாள்
*மதுரை*

## 1. முன்னுரை

1.0 தொல்காப்பியத்திற்கு உரை வகுத்தவர்களுள் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும் ஒருவர். பத்துப்பாட்டு, சிந்தாமணி, கலித்தொகை போன்ற இலக்கியங்களுக்கு உரை எழுதியுள்ளதைப் போலவே தொல்காப்பியத்திற்கும் விளக்கமாக உரை கண்டவர் இவர். ஆனால் நச்சினார்க்கினியருக்கும் அவர் உரை காண முயன்ற நூலாசிரியராம் தொல்காப்பியருக்கும் இடையே ஏறத்தாழ ஆயிரத்தைந்நூறு ஆண்டுகள் கடந்துவிட்டன. இத்துணைப் பெரிய கால இடையீட்டில் மொழி வளர்ச்சியில் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்ந்திருக்கக் கூடும். ஆதலின் தொல்காப்பிய விதிகளுக்குப் பொருள் காண்பது என்பது அரிய முயற்சியேயாகும். இளம்பூரணர், பேராசிரியர், கல்லாடர் போன்றோர் இம்முயற்சியில் ஈடுபட்டுத் திறம்பட உரை

வகுத்துள்ளனர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே சிறப்புற வகுத்துள்ளார்.

1.1. நச்சினார்க்கினியர் தொல்காப்பிய விதிகளைத் தம் காலத்து வழக்காற்றுச் சான்றுகள் தந்து விளக்குகிறார். அவ்வாறு விளக்கும் போது தொல்காப்பியம் குறிப்பிடும் சொற்கள் சில வழக்கிறந்து போனவை என்று சுட்டிக்காட்டவும் தவறவில்லை; அருகி வந்த வழக்காறுகளாயின் அவற்றைத் தம் காலத்து மக்கள் நன்கு உணருமாறு, அவற்றிற்கு விளக்கவுரை எழுதுகிறார். இவ்வாறு அவர் வகுத்துள்ள உரையினின்றும், தொல்காப்பியர் காலத்தில் சிறப்புற்றிருந்த வழக்காறுகள், வழக்கிலிருந்து நாளடைவில் மறைந்து போன வழக்காறுகள், நச்சினார்க்கினியர் காலத்தில் பெருவரவிற்றாக இருந்தவை, அருகிய வழக்காறாக அமைந்தவை போன்ற அனைத்தையும் அறிய முடிகிறது. இத்தகைய ஆய்வுக்கு அவருடைய உரை முழுவதும் துணை செய்யுமேனும் எழுத்ததிகார உரையை மட்டுமே என் ஆய்வின் தளமாகக் கட்டுப்படுத்தியுள்ளேன்.

2. நச்சினார்க்கினியர் கால வழக்காறு

2.0. நச்சினார்க்கினியர் உரைப்பகுதியில் அவர் கையாளும் மொழி நடையினின்றும், அவர் தரும் எடுத்துககாட்டுக்களினின்றும், சில சொல்லாட்சியை நோக்குவோம். மக்கள் வழக்கில் நன்கு பயின்று வருவனவே எடுத்துக்காட்டுக்களாக அமையக் கூடியன தொல்காப்பியத்திற்கு உரை விளக்கம் தரும் நச்சினார்க்கினியர் மக்கள் எளிதில் உணருமாறு சிலவிடங்களில் தம்முடைய உரையில் தாம் கையாளும் சொற்களுக்கும் விளக்கம் தருவதுண்டு. அவ்வாறு அவர் தரும் விளக்கங்களினின்றும் அவர் காலத்து வழக்காறுகள் சிலவற்றை நாம் உய்த்துணர முடிகிறது.

2.1 இயற்பெயர்: சாத்தன், தேவன், பூதன், வெள்ளன், நாகன், மாடன், வடுகன், கங்கன், கஞ்சன், கண்டன் கம்பன்,

கந்தன் போன்றவை பெரும்பாலான உரையாசிரியர்களால் குறிப்பிடப்படுபவை; இவற்றில் ஔள்ளன் தவிர ஏனைய பெயர்கள் சங்க காலத்தில் வழக்கிலிருந்தவை. சாத்தனார், கருவூர்ச்சாத்தன், நப்பூதனார், நன்னாகனார் போன்ற பெயர்கள் சான்றாகும். ஆயின் தொல்காப்பியர் காலத்தில் ஆதன், பூதன், தான், பேன், கோன், அழான், புழான், என்ற இயற்பெயர்களும் காணப்பட்டு வந்துள்ளன (தொல். 348, 351). இவற்றுள் 'தான்' தவிர பேன், கோன் என்பவை நச்சினார்க்கினியர் காலத்திற்குள் வழக்காற்றினின்றும் மறைந்துவிட்டன.[1] ஆதன் தந்தை, ஆந்தை எனவும், பூதன் தந்தை, பூந்தை எனவும் தொல்காப்பியர் காலத்தில் திரிந்து வந்தன (தொல். 348). இது போன்றே நாளடைவில் அழான் தந்தை, அழாந்தை எனவும் புழான் தந்தை, புழாந்தை எனவும் வழங்கி வந்தன (தொல். எழுத்து. நச்சி ப 204).

22. அளவைப்பெயர்: ஒரு சமுதாயத்தின் வணிக, பொருளாதார வளர்ச்சியை விளக்குவன அம்மொழியின் அளவுப் பெயர்கள். நச்சினார்க்கினியர் உரையினின்று முகத்தலளவைப் பெயர்களாகக் கலம், சாடி, தூதை, பனை, நாழி, மண்டை, வட்டில், அகல், உழக்கு, செவிடு என்பவற்றை அறிகிறோம். உழக்கு, செவிடு தவிர ஏனையவை அளவைக் கலங்களின் அமைப்பால் பெயர் பெற்றவை. நிறுத்தலளவைப் பெயர்கள் பெரும்பாலானவை தானியங்களால் பெயர் பெற்றவை. கழஞ்சு, குன்றி, கொள், ஐயவி, சீரகம், தொடி, பலம் நிறை, மா, வரை, அந்தை என்பன நச்சினார்க்கினியர் உரை குறிப்பிடும் பெயர்கள் (தொல். எழுத்து. நச்சி. ப. 116). ஒன்று, கால், காணி, முந்திரி, இம்மி, ஓராடை, இடா போன்றவையும் அளவுப்பெயர்களே. 'துவலி' என்பது தேயவழக்காக இருந்துள்ளது (தொல். எழுத்து நச்சி ப. 116).

---

1 "பேன் கோன் என்பன முற்காலத்து வழக்கு" - தொல் எழுத்து நச்சி ப, 206

2.3. "வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே" என்னும் நூற்பாவின் உரையில் 'இருவிளக் கொற்றன்' என்னும் எடுத்துக் காட்டினைத் தருகிறார். இதில் "இருவிளவென்பது ஓலை; வேணாட்டகத்து ஓர் ஊர்; கருவூரினகத்து ஒரு சேரியுமென்ப" (தொல். எழுத்து. நச்சி. ப. 141) என்று விளக்குகிறார்.

2.4. "இஃது உசு; உளுவின் பெயர்" என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார் (தொல். எழுத்து. நச்சி. ப. 59). உசு, உளு, என்பவை அவர் காலம் வரை நிலவி வந்த சொற்கள் எனலாம். பசு என்ற சொல்லை ஆரியச் சிதைவாக அவர் கருதுகிறார் (தொல். எழுத்து. நச்சி. ப. 59). 'பாற்சோறு' அவர் காலத்தில் பாளிதம் என வழங்கப்பட்டது (தொல். எழுத்து. நச்சி. ப. 155).

3. அருகிய வழக்கு

3.0. தொல்காப்பியர் நூற்பாவினின்றும் அவர் காலத்தில் வழக்கிலிருந்த சில பெயர்கள், நச்சினார்க்கினியர் காலத்திற்குள் மறைந்து விட்டதையும் காணலாம். முற்கூறிய (2.1) பேன், கோன் என்ற சொற்கள் அவ்வாறு அமைந்தவையே.

3.1. ஓரெழுத்து ஒரு மொழியாகிய ஆ, ஊ, கா, மா என்பன னகர ஒற்றினைச் சார்ந்து ஆன், ஊன், கான், மான் என வழங்கி வந்தன (தொல். 231, 269) ஊன் என்ற சொல் தொல்காப்பியர் காலத்தில் ஊவென நின்றது. நச்சினார்க்கினியர் காலத்திற்குள் இச்சொல் வழக்கற்றுவிட்டது. "ஊவென்பது தசையை உணர்த்தி நின்ற வழக்கு ஆசிரியர் நூல் செய்த காலத்து வழக்கு அன்றித் தேய வழக்கேனும் உணர்க' என்கிறார் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து. நச்சி ப. 165)

3.2 அவ், இவ், உவ் போன்ற வகர மெய் ஈற்றுச் சொற்கள் வல்லெழுத்து முதலாகவுடைய சொற்களுடன்

புணருங்காலத்து வகரம் கெட்டு அஃகடிய, இஃகடிய, உஃகடிய என்று வழங்கி வந்தன (தொல். 379). அவை கடிய, இவை கடிய, உவை கடிய என இவை பொருள்படும். இவ்வழக்காறும் நச்சினார்க்கினியர் காலத்தே மறைந்து விட்டது.[2]

3.3. வினா: 'ஆ, ஏ, ஓ' வினாவாக அமைந்த நிலையைத் தொல்காப்பியம் (தொல். 32) உணர்த்துகின்றது. இவற்றுள் ஏகாரம் தவிர ஏனையவை இன்று வழக்காற்றில் உள்ளன. 'நீயா', 'நீயோ' என வரும். நச்சினார்க்கினியர் காலத்தில் ஆகாரம் வினாவாக அமையவில்லை, என அறிகிறோம் நீயே, நீயோ போன்ற வழக்காறுகள் மட்டும் வினாப் பொருளில் வந்துள்ளன (தொல். எழுத்து நச்சி. ப. 36).

4. அரிய வழக்கு

4.0. நச்சினார்க்கினியர் தொல்காப்பியர் நூற்பாவுக்கு உரை வழங்குங்கால், குறிப்பிட்ட சில சொற்களுக்குத் தனியாக விளக்கவுரை வழங்கக் காண்கிறோம். அச்சொற்கள் அவர் காலத்தில் அருகிய (obsolete) வழக்காகவோ அன்றி அரிய (rare) வழக்காகவோ இருந்திருக்க வேண்டுமென்பது தெளிவு

4.1 "குயினென் கிளவி இயற்கையாகும்" (தொல். 335) என்ற நூற்பாவின் உரையில் "குயினென்பது மேகம் ........குயின் வினையுமாம்", என விளக்கக் காண்கிறோம். குயின் என்ற சொல் தொல்காப்பியர் காலத்தில் மேகத்தைக் குறித்து வந்து, நச்சினார்க்கினியர் காலத்தில் அரிய வழக்காகி இன்று அறவே மறைந்துள்ளது.

4.2. "ஓ என்பது மதகு நீர் தாங்கும் பலகை" என நச்சினார்க்கினியர் உரைப்பதால் (தொல். எழுத்து. நச்சி. ப 122) இஃதும் அரிய வழக்கே

2. "இவ்வழக்கு இக்காலத்து அரிது" - தொல். எழுத்து நச்சி ப. 217

4.3. இறந்த உடலைத் தாழியிலிட்டு அகற்றும் வழக்கம் நம் நாட்டிலிருந்து வந்ததனை நாம் அறிவோம். அவ்வாறு இடப்படும் தாழியை அழக்குடம் என்ற சொல்லால் குறிப்பிட்டார்கள். நச்சினார்க்கினியர் காலத்தில் இச்சொல் ஓரளவு அரிய வழக்காக இருந்திருக்க வேண்டும். ஆகவேதான் "அழக்குடம் என்பது பிணக்குடத்தை" (தொல். எழுத்து. நச்சி ப. 207) எனத் தெளிவுபடுத்துகிறார் நச்சினார்க்கினியர்.

## 5. பலபொருள் ஒரு சொற்கள்

5.0. தொல்காப்பியர் தம் நூற்பாவில் பலபொருள் கொண்ட சொற்களும் தொடர்களும் இடம் பெறும்போது, அவற்றிற்கு அடை கொடுத்துச் சிறப்பித்தல் உண்டு. அத்தகைய நூற்பாக் களுக்கு விளக்கம் கூறுங்கால் நச்சினார்க்கினியனார் அவற்றை விதந்தோதி விளக்குதல் உண்டு

5 1. "சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும்" (தொல். 364) என்ற நூற்பாவின் உரையில், "சாரினது விதையென்பதே பொருள். இதனை வயிரமெனின் கிளந்தோதுவாரென உணர்க" (தொல். எழுத்து. நச்சி. ப. 211) என்கிறார். நச்சினார்க்கினியர் காலத்தில் காழ் என்ற சொல் வித்தினையும் வயிரத்தையும் குறித்து வந்துள்ளது என அறிகிறோம்.

5.2. 'பனி' யென்ற சொல் நச்சினார்க்கினியர் காலம் வரை நோயையும் குறித்து வந்துள்ளது (தொல். எழுத்து நச்சி ப. 154). இன்று காலத்தை மட்டும் குறிப்பிடும் சொல்லாகக் காணப் படுகிறது. இன்றும், கன்னியாகுமரி மாவட்டத்தில் சில பகுதிகளி லும் கேரளப்பகுதியிலும் பனியென்பது நோயையும் குறித்து வருகிறது.

5.3. 'ஒடு'வென்றசொல் நச்சினார்க்கினியர் காலத்தில் மரத் தையும் நோயையும் குறித்து வந்துள்ளது (தொல். எழுத்து.

நச்சி. ப. 162). இது போன்றே 'சே' என்னும் சொல் ஒரு மரத்தையும், பெற்றத்தையும் குறிக்க வழங்கி வந்துள்ளது (தொல். எழுத்து. நச்சி. ப. 169).

6. ஒருபொருள் பலசொல்

ஒரு பொருள் குறித்த இரு சொற்களின் பொருள் வேறு பாட்டை நச்சினார்க்கினியர் நுட்பமாக உணர்த்துவார். வேட்கை, அவா என்ற இரு சொற்களின் பொருளின் வேறுபாட்டை இவ்வாறு உணர்த்துகிறார். "வேட்கையாவது பொருள்மேல் தோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது அப்பொருள்களைப் பெற வேண்டுமென்று மேன்மேலும் நிகழும் ஆசை" (தொல். எழுத்து. நச்சி. ப. 174) என விளக்குகிறார் நச்சினார்க்கினியர்.

7. மொழிமாற்றம்

7.1. ஒலித்திரிபு: ஒலிகள் காலபபோக்கில் மாறி ஒலிக்கப் பெறுதல் மொழியின் இயல்பு. இதழ் குவித்து உச்சரிக்கப் பெறும் உகர, ஒகர ஒலிகள் தம்முள் மாறுதல் உண்டு.

(எ.டு) உங்கள்–ஒங்க(ள்)

தொல்காப்பியர் காலததில் உதியென வழங்கி வந்த மரப்பெயர்க்கிளவி நச்சினார்க்கினியர் காலத்து ஒதியென வழக்காற்றில் நிலவியது (தொல், எழுத்து. நச்சி. ப. 154)

7.2. வரிவடிவத்திரிபு: ஒலித்திரிபைப் போன்றே எழுத்தின் வரிவடிவமும் திரிந்து வந்துள்ளமையை மொழிவரலாறு விளக்கும். இன்று நாம் கையாளும் எழுத்து முறை பல்வேறு மாறு பாடுகளையும் சீர்திருத்தங்களையும் பெற்றபின் நிலைத்துள்ள முறை யாகும். இதுவும் காலப்போக்கில் வேறுபட வாய்ப்புண்டு. தொல் காப்பியர் நூற்பாவினின்றும் பகர, மகரங்கள் எவ்வாறு எழுதப் பட்டு வந்தன என அறிகிறோம் (தொல். 14). நச்சினார்க்கினியர்

உரையினின்று மற்றொன்றையும் அறியமுடிகிறது. ஆய்த வெழுத்து தொல்காப்பியர் காலத்து அடுப்புக்கூட்டுபோல முப்பாற்புள்ளியாக எழுதப்பெற்று வந்தது. நச்சினார்க்கினியர் காலத்தில் நடுவில் சுன்னமிட்டு எழுதப்பட்டு வந்துள்ளது எனத் தெரிகிறது[3].

8. முடிவுரை

இவ்வாறு தொல்காப்பிய உரையாசிரியர்களின் உரையினின்றும் அவர்கள் கால வழக்காற்று நிலைமையை நாம் உணர்ந்து கொள்கிறோம்.

3. "அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட்டு எழுதுப" - தொல். எழுத்து, நச்சி. ப. 20

# 25

# தொல்காப்பிய ஒரு நூற்பாவின் ஆராய்ச்சித் தெளிவுரை

மோசசு பொன்னையா
மதுரை

நூற்பா

*"குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்*
*நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"* (தொல். 41)

அதிகார முறைமை

பருத்தி நெற்றின் பஞ்சுத் திரளிலிருந்து நூற்றற்காம் நூலை வேறுபிரித்து வகைப்படுத்துமாறே போல், தமிழ்க் கிளவியங்களின் பொருட்குறிப்புக்குத் துணையாம் ஒலிகளை எழுத்து என வேறுகண்டு, அவற்றின் தொகை, வகை, இயல் பற்றிய முன்னோர் கொள்கைகளை "நூன்மரபு" என்ற முதல் இயலில் தெளிவுறுத்திய ஆசிரியர், இசைநிறைவும் பொருட்குறிப்பும் ஒருங்கே பெற்ற அமைப்பையே 'மொழி' எனக் குறியிட்டாண்ட தம் முன்னோர் நெறி நின்று அவற்றின் ஆக்கம், வகை, இயல் பற்றிய கொள்கைகளை 'மொழி மரபு' என்ற இரண்டாம்

இடவில் கூற முற்பட்டு, மொழியாக்கத்துட்பட்டனவும், எழுத்தெனப்படாதனவுமான (1) எழுத்தோரன்ன, (2) எழுத்தின் இயலா, (3) இசைநிறை, (4) தொடர் மெய்யியக்க ஒலி நிலைகளும், முதற்கண் நின்ற சார்ந்துவரல் மரபினவான எழுத்தோரன்ன ஒலிநிலையின் மூவேறு வகைகளை அவ்வை ஒருமொழிக்கண்ணும், தொடர்மொழிக்கண்ணும் அமைந்து வழங்குமாற்றைக் காட்டிய முறையானே தெளிவுறுத்திய பின்னர் (தொல். 34–39) எழுத்தின் இயலா ஒலிநிலையை ஒரு நூற்பாவில் விளங்க உரைத்த முறையானே, (தொல். 40) இசைநிறை ஒலிநிலை அதிகாரப் பட்டு நிற்க, இதுமுதல் இரண்டு நூற்பாக்களில் அதனை விளக்கப் புகுந்தார் ஆசிரியர்.

நுதலிய பொருள்

இசைநிறை ஒலிநிலையின் இடமும் பற்றுக்கோடும் இந் நூற்பா நுதலிய பொருளாம்.

பொழிப்பு

குன்றிசை மொழியிடத்து இசைநிறைவு செய்தற் பொருட்டாய் நிற்கும் நெட்டெழுத்தின்கண், அதனை அடுத்து நிற்கும் எழுத்தை ஒத்த குற்றெழுத்து இசைநிறை ஒலிநிலையாக உள்ளது, என்றவாறு.

உரைத்தெளிவு

இடமுன்னன் ஒலியமைப்பை 'இம்பர்' என்றார். 'இம்பர்' ஆதலொமர் இம்பர் ஒத்த குற்றெழுத்து, குன்றிசை மொழியின் நெட்டெழுத்து (கண்), நின்று, இசை நிறைக்கும் என வினை முடிவு செய்க. இம்பர் ஒத்த குற்றெழுத்து உம்பர் (குன்றிசை மொழி) நெட்டெழுத்து (கண்) நின்று இசைநிறைக்கும் என்றதால், இம்பர், உம்பர் என்பன இருவேறு ஒலியமைப்புகள் என்பது தெளிவாம். இம்பர் (இன்) ஒத்த குற்றெழுத்து,

நெட்டெழுத்து (கண்) நின்று இசைநிறைக்கும் என்றதால், இம்பர் தனிக் குற்றெழுத்தாகவோ, குற்றெழுத்தை முதற்கண் பெற்றதாகவோ அமையலாம் என்பது புலனாவதோடு, இம்பர் முதற்கண் குற்றெழுத்து நிற்குங்காலே உம்பர்(கண்) நெட்டெழுத்தின்கண் இசைநிறை ஒலிநிலை அமையும் என்பதும் விளக்கமுறும். 'குன்றிசை மொழியின் நின்றிசை நிறைக்கும் நெட்டெழுத்து' என்றதனால் குன்றிசை மொழியின் பொருட் குறிப்புடை அமைப்பே குன்றிசைமொழி எனப்படும் என்பதும், நெட்டெழுத்து ஆண்டு இசைநிறைவு செய்தே நிற்பதல்லால் பொருட்குறிப்புக்கு உதவுவதில்லை என்பதும், இசைநிறைவு பெற்ற பின்னரும் இலக்கணவகையான் அவ்வமைப்பைக் குன்றிசைமொழி என வழங்கலே மரபாம் என்பதும், உம்பர் நெட்டெழுத்தின் அடிநிலைக்குறில் ஒலித்துணையேயாம் என்பதோடு, நெட்டெழுத்து (கண்) ஒத்த குற்றெழுத்து என்ற விதப்பால் அவ்வடிநிலைக்குறில் இம்பர் (முதற்குறில்) ஒத்ததாகவே இருத்தல் வேண்டும் என்ற நியதி இல்லை என்பதும் பெற்றாம் இன்னும் அதனாலே, மொழிப்படு வழக்கில் இம்பர் ஒத்து உம்பர் அமைவதே தமிழ் வழக்காம் என்பதும் பெற்றாம். அவ்வழக்கத்திற்கு விலக்கு அடுத்த நூற்பாவிலும் (தொல். 4 ) மொழிப்படு வழக்குடன் தெரிந்து வேறிசைத்தல் வழக்குப் புலப்படுத்தப்படும் நூற்பாக்களாலும் (தொல். 53 58) தெளிவு படுத்தப்படுவதாலும் அது புலனாகும்.

மொழி எனப்படுவது இசைநிறைவும் பொருட்குறிப்பும் ஒருங்கே பெற்ற அமைப்பேயாகும் என்பதும்,

> "ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
> இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
> மூன்றே மொழிநிலை தோன்றிய நெறிய" (தொல். 45)

என ஆசிரியர் வரைந்தோதிய அளவன்றி, அதாவது நெட்டெழுத்தின் (தொல். 43) அளவுக்குக் குறைந்த ஒலியமைப்பு

ஆனது பொருட்குறிப்புப் பெறின், அது குன்றிசைமொழி எனப்படும் என்பதும் ஈண்டே பெறுதும்.

இனி, ஆசிரியர், 'குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே' (தொல் .44) என்றதனால் இலக்கணப் பொருட் குறிப் புடைக் குறில்களும், "தொடரல் இறுதி தம்முற் றும்வரின் லகரம் றகரவொற் றாதலு முரித்தே" (தொல். 214) என்ற நூற்பாவாலும், அதன் உரையாலும் தெரியவரும், பல், சில் என்பன போன்று பொருட்குறிப்புப் பெற்று இசைநிறைவு பெறாத கண், மண், எண், பல், அல் என்பனவும் குன்றிசை மொழி களே என்பதும் தெளிவாம். அதனாலே, மொழிமுதல் மெய்களின் அளவை மொழியிசையளவில் வகைசெய்வது தமிழ் மரபன்றென் பதும் போதரும். ஆசிரியர் நெடிற்றொடரை ஈரெழுத்தொரு மொழி (தொல. 406) எனக் குறிப்பிட்டுள்ளதாலும் அது புலனா கும். குற்றியலுகர இகரங்களும் ஆய்தமும் பொருட்குறிப்புக்கு உதவினும், இசைநிலைக்கு உதவாத காரணத்தாலேயே அவை எழுத்தோரன்ன ஒலிநிலைகளாயின என்பதும் அதனாலே தெளி வுறும். இன்னும் அதனாலே ஈரெழுத்தொருமொழியின் இரண் டாம் எழுத்து மெய்யே என்பதோடு, ஈரெழுத்து மொழியாகவே இருப்பினும், அளவில் நெட்டெழுத்தின் அளவோடு ஒத்து இரண்டு மாத்திரை அளவு பெறாததாலேயே பல், சில், கண் முதலியவை குன்றிசை மொழிகளாயின என்பதும், மெய்களால் தொடரப்பெற்று, இரண்டு மாத்திரையும் மிக்கும் பெற்றுக் குறிலையடுத்து மெய்கள் நிற்கும் அமைப்பே தொடர்மொழியாம் என்பதும் போதரும். ஆசிரியர்,

> " குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
> தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத் தியல" (தொல்.50)

என்றது, தொடர்மொழியின் அமைப்பைத் தெளிவுபடுத்தும் விளக்கமே என்பதும் அதனாலே தெளிவாம்.

எடுத்துக்காட்டு

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தழ் | + | உ | → | தழு | + | (இ) | + | இ | → | தழீஇ |
| குர் | + | உ | → | குரு | + | (இ) | + | இ | → | குரீஇ |
| பழ் | + | உ | → | பழு | + | (உ) | + | உ | → | பழூஉ |
| வட் | + | அ | → | வட | + | (அ) | + | அது | → | வடாஅது |
| தென் | + | அ | → | தென | + | (அ) | + | அது | → | தெனாஅது |

உரைமரபு ஆராய்ச்சி

இந்நூற்பாவிற்கு, '(அளபெடை யோசையாகச் சொல்லா தொழியில்) குன்றுவதான ஓசையையுடைய அளபெடை எழுத்தாகிய மொழிக்கண்ணே நின்று அவ்வோசையை நிறைக்கும், (அவை யாவை எனின்) நெட்டெழுத்துக்களின் பின்னாக (அவற்றிற்குப் பிறப்பானும், புணர்ச்சியானும் ஓசையானும்) இனமொத்த குற்றெழுத்துக்கள்' (தொல் எழுத்து. இளம். ப. 29) என இளம்பூரணரும், 'அளபெடுத்துக் கூறாக்கால் குன்றுவதான ஓசையையுடைய அவ்வளபெடைச் சொற்கண்ணே நின்று அவ்வோசையை நிறைக்கும். அவை யாவையோவெனின், நெட்டெழுத்துக்களின் பின்னாகத் தமக்கு இனமொத்த குற்றெழுத்துக்கள்' (தொல். எழுத்து. நச்சி. ப. 42) என நச்சினார்க்கினியரும், உரை கூறி, ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஓஒ என எடுத்துக் காட்டியுஞ் சென்றனர். அவருள் இளம்பூரணர், 'ஈண்டு மொழி யென்றது, அவ்வளபெடை எழுத்து ஒரு பொருள் உணர்த்தி ஓரெழுத் தொருமொழியாய் நிற்கும் நிலையினை' (தொல். எழுத்து. இளம். ப 29) என, ஆசிரியர் "மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே" (தொல். 5) எனக் கூறியுள்ளதை அயர்த்து, உரை கூறியுள்ளார். தாம், அளபெடை எழுத்து எனக் கொண்ட ஒன்றை ஆசிரியர் மொழி மரபிற் கூறினார் என அவர் தவறாகக் கருதினதாலேயே, அவ்வாறு கூறினார் என்பது, 'ஈண்டு மொழி யென்றது, அளபெடை எழுத்து ஒரு பொருள் உணர்த்தி ஓரெழுத்தொரு மொழியாய் நிற்கும் நிலையினை' என்ற பொருத்தமில் கூற்றை

முன்னர் அமைத்தும், 'சிறுபான்மையும் அம்மொழி தானே எழுத்தாய் வாரா தெனக் கொள்க' (தொல். எழுத்து. இளம். ப. 29) எனப் பின்னர் வேண்டா கூறி அதனைத் தாமே மறுத்தும், 'காலுருஅது' எனக் காட்டியும் இடர்ப்படுவதால் நன்கு புலனாகும். இளம்பூரணர் கூட்டி எழுப்பப்பட்ட குறிலைப் பொருட்குறிப்புக்கு இன்றியமையாத குறிலோடு ஒப்பக்கண்டு மயங்கியதால் இவ்வாறு எழுதினார் என்பதும், வடமொழிப் புலுதத்தைத் தமிழில் தேடியதே அதற்குக் காரணம் என்பதும் இப்பொழுது அனைவரும் ஏற்கும் கருத்தாகலாம்.

நச்சினார்க்கினியரும் இந்நூற்பா அளபெடைக்கே விளக்கம் கூறுவதாகக் கருதினார் என்பது தெளிவு. எனினும், மொழிநிலை விளக்கமாபாக அமைந்த மொழிமரபில், அளபெடை பற்றிய விளக்கம் தேவையில்லை என்ற கருத்து அவர் மனத்தில் எழுந்ததால், 'இஃது எதிரது போற்றல் என்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கி (தொல். 1274), "நீட்டம் வேண்டின்' (தொல். 6) என முற்கூறிய அளபெடையாமாறு கூறுகின்றது' (தொல். எழுத்து. நச்சி. ப. 42) எனக் கூறி ஓராற்றான் செய்யுளியல் நோக்கியும், ஓராற்றான் நூன்மரபின் ஒழிபாகவும் இந்நூற்பா அமைந்துள்ளது எனத் தம் கருத்தை மாட்டி வைத்தார்.

அளபெடை செய்யுட்கே உரியது என்ற தம் கருத்திற்கேற்ப, அவர் ஈண்டு 'மொழி என்றது, 'அளபெடை யசைநிலை' (தொல். 1274) என்னுஞ்செய்யுளியல் சூத்திரத்து எட்டு இயற்சீரின்பாற் படுகின்ற எண்வகை அளபெடைச் சொற்களையும்' (தொல். எழுத்து. நச்சி. ப. 42) எனவும் பிறவாறும் எழுதியுள்ளார் மொழிவழக்கு நெறியில் அமையும் ஓரெழுத்தொரு மொழி, ஈரெழுத்தொருமொழி, இரண்டிறந்திசைக்கும் தொடர் மொழியாயவை பற்றியும், குன்றிசைமொழி பற்றியும் ஆசிரியர் மொழிமரபிற் கூறியுள்ளதைச் செய்யுளியல் நோக்கிக் கூறப்பட்ட

தாகக் கூறியுள்ளதன் பொருந்தாமை அசை வேறு, மொழி வேறு, என உணரவல்லார்க் கெல்லாம் புலனாகும்.

சங்கர நமச்சிவாயரும் உரையாசிரியரின் கருத்தினரே என்பது "'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும் நெட்டெழுத்து' என்றும் 'அற்றின் பின் அறிகுறியாய் வரும் ஒத்த குற்றெழுத்து' என்றுங் கூறினான்றே?" என்று அவர் நன்னூல் உரையில் (ப. 44) எழுதியுள்ளதாற் போதரும். எனினும், அவர், இசை நிறைப்பது நெட்டெழுத்தே எனக் கொள்ளுமாறு நெட்டெழுத்தை வினைமுதலாக்கி யுரைத்து நூற்பாவின் போக்கிற்கேற்ப வினைமுடிவு காட்டிச் சிந்திக்க வைத்துள்ளமை மனங்கொளற்குரியதாகின்றது

வேங்கடராசுலு ரெட்டியாரும் இந்நூற்பா அளபெடைக்கே விளக்கங் கூறுகின்றது என்ற கருத்தினரே.[1] டாக்டர் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரும் இந்நூற்பா அளபெடைக்கே விளக்கங்கூறுவதாகக் கொண்டார்.[2] எனினும் நச்சினார்க்கினியர் மொழியென்றதற்கு 'அளபெடைச் சொற்கள்' எனக் கொண்டது பொருந்தாது; 'சொற்கள்' என்றே கொள்ளவேண்டும் என்றும் நெட்டெழுத்தின் ஓசை குறைவாயிருப்பின் அதன் பின்னர் ஒத்த குற்றெழுத்தின் ஓசையைச் சேர்த்தல் வேண்டும், என உணர்த்த வந்தது எனக் கூறல் வேண்டும்; "நீட்டம் வேண்டின்" (தொல். 6) என்ற சூத்திரத்து "அவ்வளபுடைய கூட்டி எழூஉதல்" எனக் கூறியிருத்தலின், ஒரு மாத்திரை கொண்ட எழுத்துக் கூட்டப்படவேண்டும் எனப் பெறுதலின், இச் சூத்திரத்து, "குற்றெழுத்து" என்றது மிகையாகும் எனவும் கூறி, நூலாசிரியருக்குக் குற்றம் கற்பித்தார்.[3] மேலும் அவர் 'நான்கு மாத்திரை ஒலிக்க வேண்டின் ஆ, ஈ, முதலிய

1. வேங்கடராஜுலு ரெட்டியார், 1944, ப. 41-47
2. சுப்பிரமணிய சாத்திரி, பி. சா. 1937, ப. 51
3. சுப்பிரமணிய சாத்திரி, பி. சா. 1937, ப. 51

வற்றின் பின்னர் அஅ, இஇ முதலியன வருமேயன்றி ஆகாரம் முதலியன வாரா வென இச்சூத்திரம் உணர்த்திற் றென்க'[4] என்ப் புதுவது கூறுவதுபோல், 'அவ்வளபுடைய கூட்டி எழூஉதல்' என்பதன் உரையை ஈண்டு எழுதி வைத்தார். விளியிலும், பண்ட மாற்றிலும் கூட்டி எழூஉதல் இன்றியமையாததாகலின் வழக்கு இயலிலும் அளபெடைபற்றி அறிவிக்க முன்வந்தாரே யன்றிப் பிற காரணத்தால் நூன்மரபில் ஆசிரியர் அளபெடை பற்றிக் கூற முனைந்தாரல்லர் என்பதையும், மொழி மரபில் இயல்நெறிக்கே முறைமை கூறப்பட்டதாகலின் அளபெடைக்கு அதில் இடமில்லை யென்பதையும் சிந்தனை வல்லார் ஏற்பர்.

மேற்கோள் நூல்கள்

சுப்பிரமணிய சாத்திரி, பி சா. 1937, தொல்காப்பியம் எழுத்ததிகாரம், குறிப்புரையுடன், திருச்சி.

வேங்கடராஜுலு ரெட்டியார், வே. 1944, தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி, சென்னை.

4. சுப்பிரமணிய சாத்திரி, பி. சா. 1937, ப. 51

# தொல்காப்பியம் - தமிழ் ஒலியன்கள்

நு. சுப்புரெட்டியார்
திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி

0. முன்னுரை

0.1. தொல்காப்பியர் வகுத்த இலக்கண நூல் அன்றைய தமிழ் மொழியின் அமைப்பைக் காட்டும் கண்ணுடியாக விளங்குகிறது. அவர் காலத் தமிழ் மொழியின் எழுத்தமைதி, எழுத்துத் தொடர்ந்து தனி மொழியும் தொடர் மொழியுமா யமைந்த சொல்லமைதி, தமிழைக் கருவியாகக்கொண்டமைந்த இலக்கியச் செல்வங்கள் காட்டும் பொருளமைதி ஆகியவற்றை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம என்னும் மூன்று பிரிவுகளில் படம் பிடித்துக் காட்டுகிறது தொல்காப்பியம். அவற்றுள் எழுத்ததிகாரம் எழுத்துக்களின் தொகை, வகை, பெயர், முறை, அளவு, வடிவு, மயக்கம், பிறப்பு, புணர்ச்சி இன்னோரன்ன பற்றி விரிவாகப் பேசுகின்றது.

0.2. இன்றைய மொழியியலார் மொழியை அறிவியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து அதன் அமைப்பைப் பொருளியல் (semantics), தொடரியல் (syntax), உருபனியல் (morphology)

உருபொலியனியல் (morphophonemics), ஒலியனியல்(phonemics), ஒலியியல் (phonetics) எனப் பல பகுதிகளாகப் பிரித்து ஆய்வர். இவற்றுள் ஒலியனியல் ஒலியன்கள் (phonemes) அல்லது எழுத்துக்களின் தொகை (inventory), வகை (classification), மாற்றொலிகள் (allophones), வரன்முறை (distribution) இவற்றை ஆராயும். உருபொலியனியல சொற்களின் ஒலியனமைப்பு, ஒலியன்கள் புணர்ச்சியில் அடையும் மாற்றங்கள் இவற்றை ஆராயும். ஒலியியல் சொற்களின் பிறப்பையும் தன்மையையும் ஆராயும். தொல்காப்பிய எழுத்ததிகாரம் தன் ஒன்பது இயல்களில் இன்றைய மொழியியலார் இம் மூன்று பகுதிகளில் ஆராயும் செய்திகளை உள்ளடக்கியுள்ளது. நூன் மரபு, மொழி மரபு ஆகிய இரு இயல்களும் ஒலியனியல் கூறுகளைப் பேசுகின்றன. பிறப்பியல் ஒலியியல் கூறுகளைக் காட்டுகின்றது. மற்ற ஆறு இயல்களும் உருபொலியனியல் செய்திகளைக் கொண்டுள்ளன.

0 3. இக்கட்டுரை நூன்மரபு, மொழிமரபு ஆகிய பகுதிகளை மொழியியற் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து தொல்காப்பியர் காலத் தமிழின் ஒலியனியல் அமைப்பைக் கண்டறிய முயற்சி செய்யும்

## 1. ஒலியன்களின் தொகையும் வகையும்

1.1. "எழுத் தெனப்படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே" (தொல்.1)

என்ற நூற்பாவினால் தமிழ் எழுத்துக்களின் தொகையை வரையறுக்கிறார் தொல்காப்பியர். அடுத்து வரும்,

" அவைதாம்
குற்றியலிகரம் குற்றியலுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன" (தொல். 2)

என்ற நூற்பாவில் குற்றியலிகரமுதல் மூன்றையும் "எழுத் தோரன்ன" என்கிறார். ஆகலின் "அகரமுதல் னகர இறுவாய்" (தொல். 1) முப்பதையுமே அவர் எழுத்துக்களாக அல்லது ஒலியன்களாகக் கருதுகிறார் என்பது பெறப்படும்.[1] எனவே தொல்காப்பியர் கண்ட அவர் காலத்தமிழ் ஒலியன்கள் முப்பது என்பது தெளிவு.

12 ஒலியன்கள் முப்பது எனத் தொகை கூறிய தொல்காப்பியர் அவற்றைப் பல்வேறு தன்மைகளின் அடிப்படையில் வகைப்படுத்துகிறார். "ஔகார இறுவாய்ப் பன்னீரெழுத்" (தொல் 8) தையும் உயிரெனவும், "னகர இறுவாய்ப் பதினெண் எழுத்' (தொல். 9) தையும் மெய்யெனவும் அவற்றின் உயிரொலித் தன்மை (vocalic quality), மெய்யொலித் தன்மை (consonantal quality) இவற்றின் அடிப்படையில் வகுத்து, அவற்றுள் உயிரின் தனித்தன்மையை "மெய்யோடியையினும் உயிரியல் திரியா" (தொல். 10) என விளக்குகிறார்.

முதற்கண் உயிர்களை அவை ஒலிக்கும் கால அளவு (duration) அடிப்படையில் குறில், நெடில் எனப் பிரிக்கிறார். அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தும் ஓரளபு இசைப்பதால் குற்றெழுத்துக்கள் (தொல். 3). ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழும் ஈரளபு இசைப்பதால் நெட்டெழுத்துக்கள் (தொல். 4). ஈருயிர் (diphthong) களாகிய ஐ ஔ ஆகியவற்றையும் அளபுபற்றி நெடிலோடு சேர்த்துக் கூறியது உட்கொள்ளத் தக்கது. எடுத்துக்கொண்ட வகைப்படுத்தும் தன்மை (classificatory criterion)க் கேற்ப அவற்றை நெடில் என இங்கு வகுத்தாலும் அவற்றின் ஈருயிர்த் தன்மையை,

"அகர இகரம் ஐகாரமாகும்" (தொல். 54)
"அகர உகரம் ஔகாரமாகும்" (தொல். 55)

எனப் பின்னர்த் தெளிவுப்படுத்துகிறார்.

---

1. 'சார்ந்துவரல் மரபின் மூன்றின்' தன்மை பின்னர் (2) ஆராயப்படும்.

மெய்யெழுத்துக்களை, வல்லெழுத்து (தொல். 19), மெல்லெழுத்து (தொல். 20), இடையெழுத்து (தொல். 21) என மூவகைப்படுத்துகிறார். வல்லெழுத்துக்கள் ஆறும் தடையொலி (stop) களாகும். மெல்லெழுத்துக்கள் ஆறும் மூக்கின (nasal) ஒலிகளாகும். இடையெழுத்துக்களாக வகுக்கப்பட்டுள்ள ஆறனுள் ர, ல, ழ, ள என்ற நான்கும் ஒழுகொலி (liquid) களாகும். யகரமும் வகரமும் அரை உயிர்கள் (semivowels). இடையெழுத்துக்கள் அனைத்தும் தொடரொலித்தன்மை (continuant) என்னும் பொதுத் தன்மையைக் கொண்டிருப்பதால் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன.

## 2. மாற்றொலிகள்

2.1. எழுத்துக்கள் முப்பதென்ற தொல்காப்பியர் 'சார்ந்து வரல் மரபின் மூன்றும் அல்லாதவிடத்து' (தொல். 1) என மூன்றினைத் தனியே கூறுகிறார். பின்னர் அம் மூன்றும் வருமிடங்களைக் கூறுகிறார்.

குற்றியலிகரம் தனி மொழியில் 'மியா என்ற உரையசைக்கிளவியில் வரும் மகரத்தை ஊர்ந்து யா என்னும் உறுப்பின் முன்னர் நிற்கும்' (தொல். 34 என்றும் 'புணரியல் நிலையிடையும் குறுகும்' (தொல் 35), எனவும் கூறிப் பின்னர் 'யகர முதன் மொழி முன்னர்க் குற்றியலுகரம் கெடக் குற்றியலிகரம் வரும்' (தொல். 410) என்று கூறுகின்றார்.

'குற்றியலுகரம் வல்லெழுத்து ஆறனையும் ஊர்ந்து நெட்டெழுத்தின் பின்னரும் தொடர் மொழியின் ஈற்றின்கண்ணும் நிற்றல் வேண்டும்' (தொல். 36) என்று மொழியிறுதிக் குற்றியலுகரத்தைப் பற்றியும் 'முறைப்பெயரின்கண் ஒற்றாய் நின்ற நகரத்தின் முன்னர் மற்றொரு நகர வொற்றைச் சார்ந்து குற்றியலுகரம் மொழி முதற்கண் வரும்' (தொல். 67); 'அவ்விடத்தின்கண் நிற்கும்போது குற்றியலுகரம் முற்றுகரத்தோடு பொருள் வேறுபடாது' (தொல். 68) என்று மொழி முதற் குற்றியலுகரத்

தைப்பற்றியும் கூறுகிறார். பின்னர் புணர் மொழியிடை வரும் குற்றுகரங்கள்பற்றிக் குற்றியலுகரப் புணரியலில் (தொல். 406-409) பேசுகிறார்.

தனிமொழிக்கண், 'ஆய்தம் குற்றெழுத்துக்களின், முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துக்கள் ஆறன் மேலதாய் வரும்' (தொல்.38). இதே அடிப்படையில் நிலைமொழியீறு வருமொழி முதலொடு பொருந்தி நடக்கும் இடத்திலும் அது வரும் (தொல். 39, 369, 379, 399).

இவ்வாறு குற்றியலிகரம் முதலிய மூன்றும் குறிப்பிட்ட இடங்களில்தான் வரும் எனக்காட்டி அவற்றை எழுத்தோரன்ன என வேறுபிரித்துக் கூறுகின்றார். மொழியியலார் கண்ணோட்டத்தில் இவற்றின் தன்மை என்ன? தொல்காப்பியர் காலத் தமிழின் ஒலியனியல் அமைப்பில் இவற்றின் இடம் என்ன?

2.2. ஒலி ஒப்புமை (phonetic similarity) யுடைய இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட ஒலிகள் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட ஒலிச்சூழல் (context) களில் மட்டும் வழங்கி, ஒன்று வருமிடத்து மற்றவை எக்காலத்தும் வாராது ஒன்றுக்கொன்று துணைநிலை வழக்கில் (complementary distribution) அமையினும் அல்லது ஒரே சூழலில் ஒன்றோ மற்றவையோ வந்து பொருள் வேறுபடாது உறழ்ச்சி (freevariation) யாக அமையினும் அவை ஓர் ஒலியனின் மாற்றொலி (allophone) களாகும் எனக் கூறுவர் மொழியியலார்.[2] இக் கருத்தின் அடிப்படையில் பார்த்தால் குற்றியலிகரம் இகரக் குறிலுடன் துணைநிலை வழக்கிலும், குற்றியலுகரம் உகரக் குறிலுடன் மொழியிறுதியில் துணைநிலை வழக்கிலும் மொழி முதலில் உறழ்ச்சியாகவும் வருகின்றன. எனவே குற்றியலிகரமும் குற்றியலுகரமும் முறையே இகரக்குறில் உகரக்குறில் ஆகியவற்றின் மாற்றொலிகளாம். ஆயின் ஆய்தமும் சில குறிப்பிட்ட சூழலிலேயே வரினும் அதனை எதனுடைய

2. Gleason, 1967 ப. 261-263.

மாற்றொலியாகக் கூறுவது என்பது தெளிவாகவில்லை. வல்லொற்றோடு உறழ்ந்து வருகின்றமையையும் (தொல். 366, 369, 396, 399) வரலாற்றுக் காரணங்களையும் அடிப்படையாகக் கொண்டு ஆய்தத்தை இரட்டித்த வல்லெழுத்துக்களின் மாற்றொலியாகக் கருதுவர் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.[3] இது ஆய்விற்குரியது.

2.3. சார்ந்து வரல் மரபின் இம் மூன்றினையன்றி மகரம் குறுகுமிடங்கள் (தொல். 13, 51, 52, 330), ஐகாரம் குறுகுமிடம் (தொல். 57) ஆகியவை பற்றியும் தொல்காப்பியர் பேசுகிறார். இவற்றை முதல் எழுத்துக்கள் முப்பதுடன் அவர் சேர்க்கவில்லை. மகரக் குறுக்கமும் ஐகாரக் குறுக்கமும் குறிப்பிட்ட சூழல்களிலேயே வருகின்றமையால் அவை முறையே மகரத்துடனும் ஐகாரத்துடனும் துணைநிலை வழக்கில் நின்று அவற்றின் மாற்றொலிகளாகின்றன.

3. ஒலியன்களின் வரன்முறை

தொல்காப்பியர் நூன்மரபில் ஒன்பது நூற்பாக்களில் (22–30) மெய்கள் தம்மொடு தாமும் தம்மொடு பிறவும் மயங்கும் மெய்ம்மயக்கம் பற்றிப் பேசுகிறார். மொழி மரபில் ஈரொற்றுடனிலை பற்றியும் (தொல். 48) இறுதியில் வரும் ஈரொற்றுக்கள் பற்றியும் (தொல். 51) பேசுகிறார். பின்னர் மொழி முதல், மொழியிறுதி எழுத்துக்கள் பற்றி 24 நூற்பாக்களில் (தொல். 59-82) ஆராய்கிறார். இவையனைத்தும் மொழியியலார் ஒலியன்களின் வரன்முறை என்ற தலைப்பில் ஆராயும் செய்திகளாகும்.

3.1. மெய்ம்மயக்கம்: மெய்ம்மயக்கம் மொழியியலாரால் இருமெய்மயக்கம் (two consonant cluster), மூம்மெய் மயக்கம் (three consonant cluster) எனவும் அவற்றுள் இடைநிலை மயக்க (medial cluster) மும் ஈற்றுநிலை மயக்க (final cluster) மும் தனியாகவும் ஆராயப்படும்.

3. Meenakshisundaran, T. P. 1965 ப. 68–78.

3.1.1. இடைநிலை மயக்கத்துள் இரு மெய்கள் தம்மொடு பிறவும் தம்மொடு தாமுமாய் மயங்கி வருகின்றன. டகர, றகர, லகர, ளகரங்களின் முன்னர் க, ச, ப என்னும் மூன்றும் மயங்கும் (தொல். 23). 'அவற்றுள் லகர, ளகரங்களின் முன்னர் யகர, வகரங்களும் தோன்றும்' (தொல். 24). மெல்லெழுத்தாறன் முன்னும் அவற்றின் இன வல்லெழுத்துக்கள் வருவதுடன் (தொல். 25) ணகர னகரங்களின் முன்னர் க, ச, ஞ, ப, ம, ய, வ என்னும் ஏழும் வரும் (தொல். 26). ஞ, ந, ம, வ என்னும் மெய்களின் முன் யகரம் வருவதுடன் (தொல். 27) அவற்றுள் மகரத்தின் முன் வகரமும் வரும் (தொல். 28). யகர, ரகர, ழகரங்களின் முன் மொழிக்கு முதலாக வரும் க, ச, ஞ, த, ந, ப, ம, வ, ய ஆகியவற்றுடன் ஙகரமும் சேர்ந்து வரும் (தொல். 29). இவை தம்மொடு பிற மயங்கிய மயக்கம். ரகர, ழகரங்கள் தவிர மற்றையவை தம்மொடு தாம் மயங்கிவரும் (தொல். 30).

மும்மெய் மயக்கத்திற்கு எடுத்துக் காட்டாக யகர, ரகர, ழகரங்களுள் ஒன்றை முதல் மெய்யாகக் கொண்டு க, ச, த, ப, ங, ஞ, ந, ம என்ற மெய்கள் அவற்றின் பின் இரட்டித்து வரும் மயக்கம் அமையும் (தொல். 48). இவற்றுள்ளும் குற்றுயிர்களின் பின்னர் ரகர, ழகரங்கள் இம் மயக்கத்துள் வாரா (தொல். 49).

3.1.2. செய்யுள் இறுதிக்கண் போலும் என்ற மொழியில் னகரமும் மகரமும் ஈரொற்றுகப் போன்ம் என்று வரும் (தொல். 51). இது ஒன்றே ஈற்றுநிலை மெய்மயக்கத்திற்கு உதாரணமாக அமைவதாகும்.

3.2. மொழிமுதல் எழுத்துக்கள்: உயிர்கள் அனைத்தும் மொழி முதலில் வரும் (தொல். 59). மெய்கள் உயிருடன் கூடி உயிர்மெய்களாக மட்டுமே மொழி முதலில் வரும் (தொல். 60). அவ்வாறு மொழி முதலாகும் மெய்கள் க, ச, த, ப, ஞ, ந,

ம, ய, வ என்னும் ஒன்பதாம். அவற்றுள் க, த, ந, ப, ம, என்னும் ஐந்து மெய்களும் எல்லா உயிரொடுஞ் சேர்ந்து மொழி முதலில் வரும் (தொல். 61). சகரம் அ, ஐ, ஔ என்னும் மூன்றும் அல்லாத மற்ற உயிர்களுடன் மொழி முதலில் வரும் (தொல். 62). வகரம் உ, ஊ, ஒ, ஓ என்னும் நான்குயிர்களோடும் மொழி முதலில் வாராது (தொல். 63). ஞகரம் ஆ, எ, ஒ என்னும் மூன்றுயிருடனும் (தொல். 64). யகரம் ஆகார உயிர் ஒன்றுடனும் மொழிமுதலில் வரும் (தொல். 65). குற்றியலுகரமும் முற்றுகரத்துடன் உறழ்ச்சியாக நுந்தை என்னும் முறைப் பெயரிடத்து வரும் (தொல். 67). முதலில் வரா எனப்பட்ட எழுத்துக்களும் தத்தம் பெயரைக் குறிப்பிடுகால் முதலில் வரும் (தொல். 66). இவ்வாறு மொழிமுதல் எழுத்துக்களின் வரன்முறை பற்றிப் பேசுகிறார் தொல்காப்பியர்.

3.3 மொழி இறுதி எழுத்துக்கள்: உயிர்களுள் ஔ தவிர ஏனையவை இறுதிக்கண் வரும் (தொல். 69) எனவும் ஔவும் ககர, வகரங்களுடன் இயைந்து இறுதிக்கண் வரும் (தொல்.70) எனவும் கூறுகிறார். எகரம் தனி உயிரீறாய் வருதலன்றி மெய்யோடியைந்து ஈறாய் வாராது (தொல். 71). ஒகாரமும் நகரம் தவிர மற்றவற்றுடன் ஈறாகாது (தொல் 72). ஏகார, ஒகாரங்கள் ஞகரத்துடன் ஈறாகா (தொல். 73). உகர, ஊகாரங்கள் நகர, வகரங்களோடு ஈற்றில் வரா (தொல். 74). சகர உகரம் இரு மொழிக்கண் மாத்திரமும் (தொல். 75) பகர உகரம் இரு பொருள்படும் ஒரு மொழிக்கண் மாத்திரமும் (தொல். 36) ஈறாய் வரும்.

மெய்களுள் ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் பதினொன்றே இறுதிக்கண் வரும் (தொல். 78). அவற்றுள் நகர மெய் இரு மொழிக்கண் மாத்திரம் ஈறாகும் (தொல். 79). பகர உகரத்தைப் போன்றே ஞகரமும் ஒரு மொழிக்கண் மாத்திரம் ஈறாகும்; ஆயின் அச்சொல் இங்கு இரு பொருள்படாது

(தொல். 80). வகரம் நான்கு மொழிகளில் மாத்திரம் ஈறுய் வரும் (தொல். 21).

4. முடிவுரை

இவ்வாறு தொல்காப்பியர் கூறும் விதிகள் அவர்காலத் தமிழின் ஒலியனியல் அமைதியைக் காட்டுகின்றன. அவற்றுக்கு எடுத்துக்காட்டுக்கள் உரையாசிரியர் காலத்திலோ பிற்காலத்திலோ கிடைக்காமற் போயினும் அவர் காலத்து வழக்கில் இருந்து பின்னர் வழக்கொழிந்தன என்றே கொள்ளல்வேண்டும். அவ்வாறன்றிப் பிற்கால மொழி அமைப்பை அவர் விதிகளுள் அமைக்க எண்ணி இடர்ப்படல் சரியாகாது. மொழியின் பரப்பு முழுவதையும் நுனித்தாராய்ந்து சில எழுத்துக்கள் இத்துணை மொழியில்தான் வரும் என வரையறுத்துக் கூறும் அவர் முரண்பாடுகள் தோன்றும் வகையில் நூலியற்றியிருக்க மாட்டார் என்பது உணரற்பாலது.

மேற்கோள் நூல்கள்

Gleason, H. A., 1967, *An Introduction to Descriptive Linguistics*, New York.

Meenakshisundaran, T.P., 1965, *A History of Tamil Language*, Poona.

# 28

# தொல்காப்பியர் இலக்கணம்-எண்ணியக்க ஆய்வுகள்

திருமதி தெ. மீ. காமேசுவரி
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

## 1. முன்னுரை

மொழியியற் செய்திகளின் எல்லாவகையான விவரணங்களும், அவற்றைப் பற்றிக்கொள்ளும் முடிவுகளும்-அம்மட்டுமா, மொழியின் நிலையைப்பற்றி எளிய விவரணங்களும், கிடைத்த செய்திகளைப் புள்ளியியல் முறைப்படி ஆய்ந்த ஆராய்ச்சியை அடிப்படையாகக்கொண்டே விளங்குகின்றன. அகராதியில் வரும் சொற்களின் பொருள்களும் இலக்கணங்களில் வரும் விதிகளும் உண்மையிற் பார்க்கப்போனால் அன்றாட அனுபவத்தில் மொழி வழக்கினைப் பலமுறை கவனித்து வந்ததன் பயனாக எழும் பொதுநிலை மதிப்பீட்டின் முடிவுகளே ஆம். ஒரு நூலின் மொழிப் பாங்கினைப்பற்றியோ ஆசிரியரைப்பற்றியோ ஐயப்பாடு எழுந்தால், மொழி ஆராய்ச்சியாளர்கள் அந்நூலின் பலவகையான கையெழுத்துப் பிரதிகளில் காணப்பெறும் பலவகை மொழியியற்கூறுகளின் இயல்புகள் திரும்பத் திரும்ப வரும் விதாசாரத்தைக் கணக்கிட்டே ஒரு முடிவுக்கு வருகிறார்கள். மொழியியலின் பலவேறு துறைகளிலும் கிடைக்கும் செய்திகளை

எண்ணிக்கை முறையில் ஆராயும் ஆராய்ச்சியே மெல்ல மெல்லப் பரவி இப்போது சிறந்து விளங்குகிறது. புள்ளியியல் முறைப்படி குறிப்பிடத் தக்க வகைகளில் அமையும் வேற்றுமைகளே கொள்ளத்தக்கன. அத்தகைய வேற்றுமைகளின் அடிப்படையை ஒட்டி முடிவுகள் அமைந்தால் மட்டுமே விஞ்ஞான முறைப்படி அவற்றை ஒப்புக்கொள்ளமுடியும். மொழித்துறையிலோ மொழிவழிச் சேதிகளை (Information) அளந்தறியும் கொள்கைத் துறையிலோ இப்போது நடைபெறும் ஆராய்ச்சிகள் கணக்கியல் முறைகளையும் (Mathematical methods) புள்ளியியல் விளக்கங்களையும் பெரும்பான்மையும் அடிப்படையாகக் கொள்கின்றன. ஓர் ஆசிரியரின் மொழிப்பாங்கினைப் பற்றிய புள்ளியியல் விவரணம் கூற அவருடைய மொழியியல் வழக்கைப் பற்றித் தோராயமாக நாம் மதிப்பிடுவதை மட்டும் நம்பிப் பயனில்லை. மொழியியற் கூறுகள் ஒவ்வொன்றும் திரும்பத் திரும்ப வருவதைக் கணக்கிடும் அவற்றின் தொறு எண்கள் (Frequency), இவை எந்த எல்லைக்குள் மாறிவருகின்றன என்ற வீச்சுநிலை (Range of fluctuation), இவற்றின் நடுநிலை மதிப்பு (Mean value) முதலிய மாறு அடிப்படையின்மேல் அமைய வேண்டும். ஆசிரியரின் நடையை ஆராயும் புள்ளியியல்துறை நடைப்புள்ளியியல் (Stylo-statistics) எனப்பெறும். இத்துறையில் ஆராயப்பெறும் நடையின் பரிமாணங்களை அளவிடும் அளவைகளையும் அளவிடும் முறைகளையும் ஒரு பானைக்கு ஒரு சோறு என்று பதம் பார்க்கும் வகையில் சுருக்கமாகச் சுட்டுவதே இங்கு நோக்கம். ஒரு நூலின் ஆசிரியரைப்பற்றி எழும் ஐயப்பாட்டினை எடுத்துக்காட்டாகக்கொண்டு நடைப்புள்ளியியல் எப்படி இதனை ஆராய்கிறது என்பதைச் சுவடு காட்ட இக்கட்டுரை முயல்கின்றது.

## 2. நடையின் அளவைகள்

தத்தம் மொழிநடையில் பலரும் பலவகைப்படுகின்றனர் இந்த வேறுபாடு அவரவரைப் பொறுத்த வரையில் ஏறக்குறைய

ஒருபடித்தாகவே விளங்குகிறது. நன்கு இனந்தெரிந்து கொள்ளக் கூடிய இந்த ஒருபடித்தான நிலை அவ்வவ்வாசிரியர்களின் மொழிப்பழக்கத்தில் காணப்படுவதால் அளவிட்டுக் காணும் (Quantitative procedures) முறையினைப் பின்பற்றி ஆராய முடிகின்றது. அவர்கள் பயன்படுத்தும் சொற்கள் ஒரு விதாசார முறைப்படி வரும் வகையே (Frequency distribution) நடையின் அளவிட்ட இயல்புக்கு (quantitative characteristic of style) அடிப்படையாகும். இந்த வகையான இயல்புகளின் விளக்கமே ஓர் ஆசிரியரின் ஒரு நூலோடு மற்றொரு நூலையோ ஓராசிரியரோடு வேறு ஆசிரியரையோ ஒப்பிட்டுக் காண்பதற்கு அடிப்படையாகும். இந்த அடிப்படையே, சொற்கோவைக்கும் (vocabulary) அதில் ஒவ்வொரு சொல்லும் வரும் எண்ணிக்கைக்கும் உள்ள தொடர்பினைப் பற்றியதாக விளங்குவதோடு தனித்தனியே சொற்கோவையைப்பற்றியும், ஒவ்வொரு சொல்லும் வரும் எண்ணிக்கையைப்பற்றியும் விளக்கவும் காண்கிறோம். நூலில் வரும் சொற்களை ஒட்டிய அதன் நீளமும் இங்குக் கணக்கிடப் பெறும்.

நடையின் பாங்குக (style characteristics)ளாகப் பல உள்ளன. அவற்றை முழுவதும் விளக்காமல் ஆங்கிலப் பெயர்கள் மட்டும் தரப்படுகின்றன. Bilogarithmic Type Token Ratio; the relative fluctuation of the mean Vm, Yule's characteristic K etc. எடுத்துக்காட்டாக வந்தான் என்ற சொல் ஓர் இனமாக—டைப் ஆகக் கொள்ளப்படும். வந்தான் என்பது ஒவ்வொரு முறையும் வரும்போதெல்லாம் அதன் பிரதி அல்லது படி-டோகன் ஆக எண்ணப்படும். இனத்திற்கும் படிக்கும் உள்ள தொடர்பு ஒரு கணக்குக்குட்பட்டது. இவை வரும் இடத்தைக் கணக்கிட்டால் ஒரு நடுநிலை கிடைக்கும். அந்த நடுநிலையிலிருந்து ஒரு சொல்லுக்கு ஒரு சொல் எந்த விதத்தில் மாறுபடுகிறது என்று காண்பது மற்றொரு கணக்கு நடையினை

ஆராயும் போது மாறுநிலை என ஒன்றினைக் கணக்கிட்டுக் காட்டுகின்றார் யூல என்ற பேராசிரியர்.

## 3. பயன்படுத்தல்

### 3.1. கேள்வி

ஒரு நூலின் ஆசிரியரைப் பற்றிய ஐயப்பாட்டினை ஒரு கேள்வியாக எடுத்துக் கொண்டு, முன் கூறியபடி ஆராய்ந்து எப்படி விடை காண்பது என்பதைச் சிறிது விளக்கலாம். தொல்காப்பியம் என்ற இலக்கணநூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என மூன்று பிரிவுகளை உடையது. இவை மூன்றையும் தொல்காப்பியர் என்ற பெயருடைய ஆசிரியர் ஒருவரே எழுதினாரா? அல்லது தொல்காப்பியர் என்ற பெயருடைய மூன்று வேறு ஆசிரியர்கள் எழுதினார்களா? இதுவே கேள்வி.

வரலாற்று நோக்கிலோ இலக்கிய நோக்கிலோ பலர் பல வகையான முடிவுக்கு வந்துள்ளனர். புள்ளியியல் மொழி நூலின் படி இந்தக் கேள்வியை ஆராய வேண்டும். பொருள் அதிகாரத்தைப் பற்றியும் ஆராய்ச்சி நடந்துவந்தாலும் கால எல்லையை மனத்தில் கொண்டு எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் என்ற இரண்டினைப் பற்றிய குறிப்புகளே தரப்பட்டுள்ளன.

### 3.2. முறை

வரும் சொற்களை எல்லாம் வரிசையாகக் குறித்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு சொல்லும் எத்தனை முறைவருகிறது என்பதையும் குறிக்கவேண்டும். டாக்டர் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் நூல்களின் முதற்குறிப்பினைப் பயன்படுத்தி முதலாம் அட்டவணையில் இவை குறிப்பிடப்பட்டுள்ளன. நடையின் பலவகையான போக்குகளை அளவிடக் கூடிய அளவுகளை உருவாக்கிச் செம்மைப்படுத்துவதே இங்கே வேண்டப்படுவது. இவற்றில் இரண்டோ மூன்றோ நான்கோ காட்டும் முடிவில்

ஒத்திருந்தால் ஆசிரியரைப்பற்றி உறுதியாக முடிவுகூற முடியும். நடு நிலையிலிருந்து மாறும் மாற்றுவிச்சு விதம் (Relative fluctuation of the mean) எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் என்ற இரண்டிலும் சமமாகவே இருக்கின்றன. அதாவது 0.092 என்பதாம்.

3.3 சொல் வருமுறை

" அந்த இரண்டு அதிகாரங்களிலும் வரும் சொற்களை அகராதி வரிசையில் அமைத்தபோது அந்த வரிசையின்படி சொற்கள் வரும் வகையை இரண்டாம் அட்டவணை காட்டுகின்றது. இதில் இரண்டாம் வரிசை நெடுங்கணக்கில் ஒவ்வோர் எழுத்திலும் தொடங்கும் சொற்கள் எத்தனை எத்தனை எழுத்ததிகாரத்தில் வருகின்றன என்று காட்டுகிறது. மூன்றும் வரிசை அப்படியே சொல்லதிகாரத்தில் வருவனவற்றைக் காட்டுகிறது. இரண்டாம் மூன்றும் வரிசையில் வருவனவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக மொத்தம் 10,000 சொற்களில் எத்தனைச் சொற்கள் ஒவ்வோர் நெடுங் கணக்கெழுத்திலும், எழுத்ததிகாரத்தும் சொல்லதிகாரத்தும் தொடங்குகின்றன எனக்கணக்கிட்டு முறையே நான்காம் ஐந்தாம் வரிசைகள் காட்டுகின்றன ஒப்பிட்டுப் பார்க்கும் போது பெரிய மாற்றம் ஒன்றும் இல்லை பல ஆசிரியர்களின் நூல்களிலிருந்து எடுத்த மாதிரிப் பகுதிகளை விட ஒரே ஆசிரியரின் நூல்களிலிருந்து எடுத்த மாதிரிப் பகுதிகள் ஒரு தன்மை உடையனவாக இருக்கும் என்பதனை ஹெர்டன் என்பவரும் யூல் என்பவரும் காட்டி உள்ளார்கள்.

இந்த ஆராய்ச்சி இன்னும் பல கோணங்களிலிருந்து நடைபெற வேண்டும். ஹெர்டன் என்பாரின் முறைப்படி நடைபெற வேண்டிய ஆராய்ச்சியின் முதற்படியாக இரண்டாம் அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது.

அட்டவணை – 1.

வரிசை 1 எத்தனை முறைவருகிறது என்ற எண்ணை X எனக் குறிக்கிறது. அத்தனை முறை வரும் சொற்களின் எண்ணிக்கையை f X என எழுத்ததிகாரத்தில் வருவதை 2-ஆம் வரிசையும் சொல்லதிகாரத்தில் வருவதை 3-ஆம் வரிசையும் காட்டுகின்றன.

| X | fX (Eluttatikāram) | fX (Collatikāram) | X | fX (Eluttatikāram | fX (Collatikāram |
|---|---|---|---|---|---|
| 1 | 682 | 1142 | 25 | 1 | 1 |
| 2 | 171 | 214 | 26 | 1 | 1 |
| 3 | 74 | 95 | 27 | 2 | – |
| 4 | 49 | 52 | 30 | 1 | 1 |
| 5 | 39 | 33 | 31 | 1 | – |
| 6 | 27 | 26 | 32 | 1 | – |
| 7 | 10 | 15 | 33 | 2 | – |
| 8 | 15 | 8 | 35 | 1 | 1 |
| 9 | 13 | 10 | 36 | – | 1 |
| 10 | 10 | 6 | 37 | – | 1 |
| 11 | 8 | 1 | 39 | 1 | – |
| 12 | 4 | 3 | 40 | 2 | – |
| 13 | 5 | 4 | 41 | – | 1 |
| 14 | 4 | 1 | 42 | 2 | – |
| 15 | 4 | 2 | 46 | 1 | – |
| 16 | 5 | 1 | 47 | 1 | – |
| 17 | 2 | 1 | 49 | – | 2 |
| 18 | 1 | 1 | 63 | 2 | – |
| 19 | 6 | 2 | 68 | – | 1 |
| 20 | 3 | 2 | 78 | 1 | – |
| 21 | 2 | 2 | 190 | 1 | – |
| 22 | 3 | 1 | 237 | – | 1 |
| 23 | 2 | 2 | 250 | – | 1 |
| 24 | 3 | 1 | 288 | 1 | – |
| | | | Total: | 1164 | 1687 |

| | | | |
|---|---|---|---|
| 1. | Mean of the Distribution: | 3.7302 | 2.3959 |
| 2. | Standard Deviation: | 11.780 | 9.140 |
| 3. | Coefficient of variation CV. | 3.158 | 3 815 |
| 4. | Relative fluctuation of the mean: | 0.092 | 0.092 |

அட்டவணை 2.

தொல்காப்பியம் எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் சொற்கள் நெடுங்கணக்கு முறைப்படி வந்துள்ள வகையைக் காட்டுகிறது.

| 1<br>சொல்லின் முதல் எழுத்து | 2<br>எழுத்ததிகாரத்தில் வந்துள்ள அத்தகைய சொற்களின் எண்ணிக்கை | 3<br>சொல்லதிகாரத்தில் வந்துள்ள அத்தகைய சொற்களின் எண்ணிக்கை | 4<br>10,000க்கு எத்தனை என்ற வகையில் வந்துள்ள வீதம் | 5 |
|---|---|---|---|---|
| | | | எழுத்ததிகாரத்தில் | சொல்லதிகாரத்தில் |
| a | 110 | 177 | 945 | 1049 |
| ā | 63 | 63 | 541 | 373 |
| i | 79 | 134 | 679 | 794 |
| ī | 15 | 17 | 129 | 101 |
| u | 75 | 94 | 644 | 557 |
| ū | 4 | 3 | 34 | 18 |
| e | 39 | 83 | 335 | 492 |
| ē | 14 | 14 | 120 | 83 |
| ai | 10 | 9 | 86 | 53 |
| o | 40 | 59 | 344 | 350 |
| ō | 11 | 12 | 95 | 71 |
| au | 3 | 0 | 26 | 0 |
| k | 83 | 145 | 713 | 860 |
| ṅ | 3 | 0 | 26 | 0 |
| c | 60 | 128 | 515 | 759 |
| ñ | 7 | 2 | 60 | 12 |
| ṭ | 2 | 1 | 17 | 6 |
| ṇ | 3 | 0 | 26 | 0 |
| t | 76 | 138 | 653 | 818 |
| n | 87 | 89 | 747 | 528 |
| p | 97 | 192 | 833 | 1138 |
| m | 137 | 128 | 1177 | 759 |
| y | 15 | 12 | 129 | 71 |
| r | 6 | 2 | 52 | 12 |
| l | 4 | 1 | 34 | 6 |
| v | 101 | 179 | 868 | 1061 |
| ḻ | 4 | 0 | 34 | 0 |
| ḷ | 4 | 2 | 34 | 12 |
| ṟ | 5 | 1 | 43 | 6 |
| ṉ | 7 | 2 | 60 | 12 |
| **Total:** | 1164 | 1687 | — | — |

# துணைபுரிந்த இலக்கண நூல்கள்


இலக்கணக்கொத்து, *சுவாமிநாத தேசிகர்*, 1956, *ஆறுமுகநாவலர் பதிப்பு, சென்னை*

இலக்கண விளக்கம், *வைத்தியநாத தேசிகர்*, 1973, *திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் (கழகம்), சென்னை*

தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, *சிவஞானமுனிவர்*, 1956, *ஆறுமுகநாவலர் பதிப்பித்த* இலக்கணக்கொத்து *தொகுப்பில், சென்னை*

தொல்காப்பியம் மூலம், *தொல்காப்பியர்*, 1967, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணம், 1955, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், 1972, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், சொல்லதிகாரம், இளம்பூரணம், 1963, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம், 1962, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், சொல்லதிகாரம், நச்சினார்க்கினியம், 1962, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், சொல்லதிகாரம், தெய்வச்சிலையார் உரை, 1929, *கரந்தைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு*

தொல்காப்பியம், சொல்லதிகாரம், கல்லாடனார் விருத்தியுரையும் பழைய உரையும், 1964, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், 1953, *கழகம், சென்னை*

தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், அகத்திணையியல் - பொருளியல், 1968, கழகம், சென்னை

தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியம், மெய்ப்பாட்டியல் -மரபியல், 1972, கழகம், சென்னை

தொன்னூல் விளக்கம் மூலமும் பொழிப்புரையும், வீரமாமுனிவர், - 1891, நாகப்பட்டினம்

நன்னூல் மூலம், பவணந்தி, 1969, ஆறுமுக நாவலர் பரிசோதித்தது, சென்னை

நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும், 1942, உ. வே. சாமிநாதய்யர், சென்னை

நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், 1946, உ. வே. சாமிநாதய்யர், சென்னை

நன்னூல் விருத்தியுரை, சிவஞானமுனிவர் திருத்தியது, 1971, கழகம், சென்னை

நன்னூல் மூலமும் விருத்தியுரையும், முகவை இராமானுசக் கவிராயர், 1940, பதிப்பாசிரியர்: கா. ர. கோவிந்தராஜ முதலியார், மதுரை

நேமிநாதம், குணவீரபண்டிதர், 1973, கழகம், சென்னை

முத்துவீரியம், முத்துவீர உபாத்தியாயர், 1972, பதிப்பாசிரியர்: சுந்தரமூர்த்தி, கழகம், சென்னை

யாப்பருங்கலம் - விருத்தியுரை, அமிதசாகரனார், 1973, கழகம், சென்னை

வீரசோழியம், புத்தமித்திரனார், பெருந்தேவனார் இயற்றிய உரையுடன், 1970, பதிப்பு: கா. ர. கோவிந்தராச முதலியார் கழகம், சென்னை

# எடுத்தாளப்பெற்ற இலக்கியங்கள்

அகநானூறு
அப்பர் தேவாரம், 1941, *சித்தாந்த சமாசப் பதிப்பு*
கலித்தொகை
குறுந்தொகை
சிலப்பதிகாரம்
சீவகசிந்தாமணி
சுந்தரர் தேவாரம், 1964, *தருமையாதீனப் பதிப்பு*
திருக்குறள்
நற்றிணை
பத்துப்பாட்டு
பதிற்றுப்பத்து
பரிபாடல்

# கலைச் சொற்கள்

## தமிழ் - ஆங்கிலம்

| | |
|---|---|
| அகப்படுக்கும் வாக்கியம் | embedding sentence |
| அடி | stem |
| அடிநிலை ஒலியன் | archi segment |
| அடைவு | concord |
| அண்மை உறுப்பு | immediate constituent |
| அதிர்வெண் | frequency |
| அதிர்வு வீச்சு | amplitude |
| அமைப்பு (அறையின்), | shape |
| அமைப்புமுறை மொழியியல் | structural linguistics |
| அரிய | rare |
| அருகிய | obsolete |
| அரை உயிர் | semi-vowel |
| அளவிட்டுக்காணும் முறை | quantitative procedure |
| ஆர்க்கி ஒலியன் | i) archi segment<br>ii) archi phoneme |
| ஆல்ஃபா ஒலியன் | alpha-phoneme |
| இசை | pitch |
| இயங்குறுப்பு | active articulator |
| இலக்கணச் சொற்கள் | functors |
| இலக்கணப் பொருள் உள்ளவை | functors |
| இலக்கணத் தொடர்பு | grammatical relation |
| ஈரிதழ் ஒலி | bilabial sound |
| ஈருயிர் | diphthong |
| உந்தி | diaphragm |
| உயிரொலித்தன்மை | vocalic quality |
| உரசொலி | fricative |
| உரப்பு | i) intensity<br>ii) loudness |
| உருபன்கள் | morphemes |

| | |
|---|---|
| உருபனியல் | morphology |
| உருபொலியனியல் | morphophonemics |
| உள்வட்டத்தொடர் | endocentric construction |
| உறழ்ச்சி | free variation |
| ஊக்குவிக்கும் | reinforcing |
| எச்சவினை | non-finite verb |
| எளிய | simple |
| எளிய வாக்கியம் | simple sentence |
| ஒரு பகுதி | constituent |
| ஒலி அழுத்தம் | suprasegmental feature |
| ஒலி எழுப்பி | articulator |
| ஒலி ஏற்றம் | intonation |
| ஒலி ஒப்புமை | phonetic similarity |
| ஒலி நீட்டம் | length |
| ஒலிப்பு முறை | articulatory |
| ஒலியன் | phoneme |
| ஒலியன் நிலை உறழ்ச்சி | phonemic freevariation |
| ஒலியனியல் | phonemics |
| ஒலியியக்க முறை | acoustics |
| ஒலியியல் | phonetics |
| ஒலியியல் அறிவு | phonetic science |
| ஒலியியல் வரலாறு | phonological history |
| ஒலியூக்கம் | resonance |
| ஒழுகொலி | liquid |
| கலப்பு | complex |
| கலப்பு வாக்கியம் | complex sentence |
| கருமொழி | i) the language under description<br>ii) the language |
| கருவி மொழி | i) the language of description<br>ii) metalanguage |
| காரணம் | purpose |
| காரண ஒட்டு | causative suffix |
| காலம் (அதிர்வுவீச்சு நீடிக்கும்), | duration |

| | |
|---|---|
| காற்றுத்துகள்கள் | air molecules |
| காற்றின் அளவு | volume |
| குரல் வளை | glottis |
| குரல்வளை மடல்கள் | vocal cords |
| கூட்டு வாக்கியம் | compound sentence |
| கூட்டு வினையெச்சம் | compound verbal participle |
| சூழல் | context |
| செயவெனெச்சம் | infinitive |
| செயப்படுபொருள்வினை | i) transitive verb<br>ii) two place predicate |
| சொல் தேர்வு | selectional restrictions |
| சொல்லியல் அமைப்பு | morphological structure |
| சொல்லியல் பகுதி | morphology |
| தமிழ்ப் பேரகராதி | Tamil lexicon |
| தனிச் சொல்லியன்கள் | particles |
| தனி வினையெச்சம் | simple verbal participle |
| தன்வினை போன்றது | one place predicate |
| திராவிட மொழிகளின் இனச்சொல் அகராதி | Dravidian etymological dictionary |
| துணைநிலை வழக்கு | complimentary distribution |
| துணை வினை | auxiliary verb |
| தொகை | inventory |
| தொடரியல் | syntax |
| தொடரொலி | continuant |
| தொண்டை | larynx |
| தொறுஎண்கள் | frequency |
| நடுநிலைமதிப்பு | mean value |
| நடுநிலையிலிருந்து மாறும் மாற்றுவீச்சு வீதம் | relative fluctuation of the mean |
| நடைப்புள்ளியியல் | stylo-statistics |
| நடையின் அளவிட்ட இயல்பு | quantitative characteristics of style |
| நடையின் பாங்குகள் | style characteristics |
| நாமுடி | top of the tongue |
| நிலையுறுப்பு | passive articulator |

| | |
|---|---|
| நிறுத்தமெய் | stop consonant |
| நீளவரிசையில் அமையாத | non-linear |
| நுரையீரல் | lung |
| நுனிநா | tip of the tongue |
| நுனிநா நுனி அண்ண ஒலி | apico-alveolar sound |
| பகுதித்துணைநிலை வழக்கு | partial complementation |
| படிமம் | concept |
| பிராக்கு குழுவினர் | Prague school of linguists |
| பிறப்பாக்கம் | manner of articulation |
| பிறழ்ப்பிரித்தல் | wrong segmentation |
| புதை அமைப்பு | deep structure |
| புதை நிலை | deep structure |
| புற அமைப்பு | surface structure |
| புற நிலை | surface structure |
| புறவட்டத் தொடர் | exo-centric construction |
| பெயர்ச்சொல் | noun |
| பேச்சுக்குழல் | i) oral cavity<br>ii) vocal tract |
| பேச்சுப்பொறி | vocal apparatus |
| பொருண்மை இயல் | semantics |
| பொருள் உள்ளவை | contentives' |
| பொருளியல் | semantics |
| பொருளுடைய உருபன் | semanteme |
| பொருளுருவம் | form |
| மயக்கம் | cluster |
| மயக்கம், இடைநிலை | medial cluster |
| மயக்கம், இருமெய் | two consonant cluster |
| மயக்கம், ஈற்றுநிலை | final cluster |
| மயக்கம், மும்மெய் | three consonant cluster |
| மறு பெயர்கள் | pronouns |
| மாற்றிலக்கண முறை | transformational generative approach |
| மாற்றொலி | allophone |
| முதல் வினை | main verb |

| | |
|---|---|
| முற்றுவினை | finite verb |
| மூக்கறை | nasal cavity |
| மூக்கினம் | nasals |
| மூச்சுக்குழல் | trachea |
| மெய்யொலித்தன்மை | consonantal quality |
| மெல்வினை | weak verb |
| மேற்றொண்டை | pharynx |
| மொழிவழிச்சேதி | information |
| வகை | classification |
| வகைப்படுத்தும் தன்மை | classification criterion |
| வரன்முறை | distribution |
| வல்லினம் | hard sounds |
| வல்வினை | strong verb |
| வழியின் அமைப்பு | opening |
| வினைச்சொல் | verb |
| வினையெச்சம் | verbal participle |
| வினையெச்சவினை | non-finite verb |
| வினைவேர் | verb root |
| வீச்சுநிலை | range of fluctuation |
| வீதாசார முறைப்படி வரும்வகை | frequency distribution |
| வேர்ச்சொல் | root |
| வேற்றுநிலை | contrast |

# ஆங்கிலம் - தமிழ்

| | |
|---|---|
| Acoustics | 'ஒலியியக்க முறை' |
| Active articulator | 'இயங்குறுப்பு' |
| Air molecules | 'காற்றுத்துகள்கள்' |
| Allophone | 'மாற்றொலி' |
| Alpha-phoneme | 'ஆல்ஃபா ஒலியன்' |
| Amplitude | 'அதிர்வு வீச்சு' |
| Apico-alveolar sound | 'நுனிநா நுனி அண்ண ஒலி' |
| Archisegment or | 'அடிநிலை ஒலியன்' |
| Archi-phoneme | 'ஆர்க்கி ஒலியன்' |
| Articulator | 'ஒலி எழுப்பி' |
| Articulatory | 'ஒலிப்பு முறை' |
| Auxiliary verb | 'துணைவினை' |
| Bilabial sound | 'ஈரிதழ் ஒலி' |
| Causative suffix | 'காரண ஒட்டு' |
| Classification | 'வகை' |
| Classification criterion | 'வகைப்படுத்தும் தன்மை |
| Cluster | 'மயக்கம்' |
| Cluster, final | 'ஈற்றுநிலை மயக்கம்' |
| Cluster, medial | 'இடைநிலை மயக்கம்' |
| Cluster, three consonant | 'மும்மெய் மயக்கம்' |
| Cluster, two consonant | 'இரு மெய் மயக்கம்' |
| Complementary distribution | 'துணைநிலை வழக்கு' |
| Complex | 'கலப்பு' |
| Complex sentence | 'கலப்பு வாக்கியம்' |
| Compound sentence | 'கூட்டு வாக்கியம்' |
| Compound verbal participle | 'கூட்டு வினையெச்சம்' |
| Concept | 'படிமம்' |
| Concord | 'அடைவு' |
| Consonantal quality | 'மெய்யொலித்தன்மை' |
| Contentives | 'பொருள் உள்ளவை' |

| | |
|---|---|
| Constituent | 'ஒரு பகுதி' |
| Context | 'சூழல்' |
| Continuant | 'தொடரொலி' |
| Contrast | 'வேற்றுநிலை' |
| Deep Structure | 'புதை நிலை/புதை அமைப்பு' |
| Diaphragm | 'உந்தி' |
| Diphthong | 'ஈருயிர்' |
| Distribution | 'வரன் முறை' |
| Dravidian Etymological Dictionary | 'திராவிட மொழிகளின் இனச்சொல் அகராதி' |
| Duration | '(அதிர்வீச்சு நீடிக்கும்) காலம்' |
| Embedding sentence | 'அகப்படுக்கும் வாக்கியம்' |
| Endo-centric construction | 'உள்வட்டத் தொடர்' |
| Exo-centric construction | 'புறவட்டத் தொடர்' |
| Finite verb | 'முற்றுவினை' |
| Form | 'பொருளுருவம்' |
| Free variation | 'உறழ்ச்சி' |
| Frequency | 1 'அதிர்வெண்<br>2 'தொறுஎண்கள்' |
| Frequency distribution | 'வீதாசார முறைப்படிவரும் வகை' |
| Fricative | 'உரசொலி' |
| Functors | 'இலக்கணப்பொருள் உள்ளவை<br>'இலக்கணச் சொற்கள்' |
| Glottis | 'குரல்வளை' |
| Grammatical relation | 'இலக்கணத் தொடர்பு' |
| Hard sounds | 'வல்லினம்' |
| Immediate constituent | 'அண்மை உறுப்பு' |
| Infinitive | 'செயவெனெச்சம்' |
| Information | 'மொழிவழிச்சேதி' |
| Intensity | 'உரப்பு' |
| Intonation | 'ஒலி ஏற்றம்' |
| Inventory | 'தொகை' |
| Language of Description | 'கருவி மொழி' |

| | |
|---|---|
| Language under description or the language | 'கரு மொழி' |
| Larynx | 'தொண்டை' |
| Length | 'ஒலி நீட்டம்' |
| Liquid | 'ஒழுகொலி' |
| Loudness | 'உரப்பு' |
| Lung | 'நுரையீரல்' |
| Main verb | 'முதல்வினை' |
| Manner of articulation | 'பிறப்பாக்கம்' |
| Mean value | 'நடுநிலை மதிப்பு' |
| Meta langauge | 'கருவி மொழி' |
| Morphemes | 'உருபன்கள்' |
| Morphology | 'சொல்லியல் பகுதி/உருபனியல்' |
| Morphological structure | 'சொல்லியல் அமைப்பு' |
| Morphophonemics | 'உருபொலியனியல்' |
| Nasal cavity | 'மூக்கறை' |
| Nasals | 'மூக்கினம்' |
| Non-finite verb | 'எச்சவினை' / 'வினை எச்ச வினை' |
| Non-linear | 'நீள வரிசையில் அமையாத' |
| Noun | 'பெயர்ச்சொல்' |
| Obsolete | 'அருகிய' |
| One place predicate | 'தன்வினை போன்றது' |
| Opening | 'அமைப்பு' |
| Passive articulator | 'நிலையுறுப்பு' |
| Partial Complementation | 'பகுதித் துணைநிலை வழக்கு' |
| particle | 'தனிச்சொல்லியன்கள்' |
| Pharynx | 'மேற்றொண்டை' |
| Phoneme | 'ஒலியன்' |
| Phonemics | 'ஒலியனியல்' |
| Phonetic free variation | 'ஒலியன்நிலை உறழ்ச்சி' |
| Phonetics | 'ஒலியியல்' |
| Phonetic science | 'ஒலியியல் அறிவு' |
| Phonetic similarity | 'ஒலி ஒப்புமை' |

| | |
|---|---|
| Phonological history | 'ஒலியியல் வரலாறு' |
| Pitch | 'இசை' |
| Prague School of Linguistics | 'பிராக் குழுவினர்' |
| Pronouns | 'மறுபெயர்கள்' |
| Purpose | 'காரணம்' |
| Quantitative characterisation of style | 'நடையின் அளவிட்ட இயல்பு' |
| Quantitative procedures | 'அளவிட்டுக்காணும் முறை' |
| Range of Fluctuation | 'வீச்சுநிலை' |
| Rare | 'அரிய' |
| Reinforcing | 'ஊக்குவிக்கும்' |
| Relative fluctuation of the mean | 'நடுநிலையிலிருந்து மாறும் மாற்று வீச்சுவீதம்' |
| Resonance | 'ஒலியூக்கம்' |
| Root | 'வேர்ச்சொல்' |
| Selectional restrictions | 'சொல் தேர்வு' |
| Semanteme | 'பொருளுடைய உருபன்' |
| Semantics | 'பொருண்மை இயல், பொருளியல்' |
| Semivowel | 'அரை உயிர்' |
| Simple | 'எளிய' |
| Simple Sentence | 'எளிய வாக்கியம்' |
| Simple Verbal Partioiple | 'தனி வினையெச்சம்' |
| Shape | 'அமைப்பு' |
| Stem | 'அடி' |
| Stop consonant | 'நிறுத்த மெய்' |
| Strong verb | 'வல்வினை' |
| Structural linguistics | 'அமைப்பு முறை மொழியியல்' |
| Style characteristics | 'நடையின் பாங்குகள்' |
| Stylo-statistics | 'நடைப்புள்ளியியல்' |
| Supra-segmental feature | 'ஒலி அழுத்தம்' |
| Sufrace structure | 'புறநிலை/புற அமைப்பு' |
| Syntax | 'தொடரியல்' |
| Tamil Lexicon | 'தமிழ்ப் பேரகராதி' |

| | |
|---|---|
| Tip of the tongue | 'நுனிநா' |
| Top of the tongue | 'நாமுடி' |
| Trachea | 'மூச்சுக்குழல்' |
| Transformational Generative approach | 'மாற்றிலக்கண முறை' |
| Transitive | 'செயப்படு பொருள்வினை' |
| Two place predicate | 'செயப்படு பொருள் ஒன்றினையும் எழுவாய் ஒன்றினையும் கொண்ட பயனிலை' |
| Verb | 'வினைச்சொல்' |
| Verbal participle | 'வினையெச்சம்' |
| Verb root | 'வினை வேர்' |
| Vocal apparatus | 'பேச்சுப்பொறி' |
| Vocal cords | 'குரல்வளை மடல்கள்' |
| Vocalic quality | 'உயிரொலித்தன்மை' |
| Vocal tract | 'பேச்சுக்குழல்' |
| Volume | '(காற்றின்) அளவு' |
| Weak verb | 'மெல்வினை' |
| Wrong segmentation | 'பிறழப் பிரித்தல்' |

# Department of Linguistics

## PUBLICATIONS

**1961**

1. *Prof. T.P. Meenakshisundaran-Sixty-first Birth day Commemoration Volume*-Collected Papers of Prof. T. P. Meenakshisundaran — Rs. 3-75
2. *Kolami*—M. B. Emeneau — Rs. 11-50

**1965**

3. *History of Tamil Literature* —T. P. Meenakshisundaran — Rs. 10-00
4. *Spoken Tamil I* - M. Shanmugam Pillai — Rs. 6-66
5. *India and Historical Grammar* —M. B. Emeneau — Rs. 4-00
6. *Lexicography*—S. M. Katre — Rs. 4-00
7. *Dravidian*—S. K. Chatterji — Rs. 4-00

**1966**

8. *Conversational Tamil* —N. Kumaraswami Raja & K. Doraswamy — Rs. 7-00

**1967**

9. *Dravidian Linguistics, Ethnology and Folk Tales-Collected Papers* —M. B. Emeneau — Rs. 25-00
10. *Naccina·rkkiniyar's Conception of Phonology*—S. V. Shanmugam — Rs. 5-00
11. *A Generative Grammar of Tamil (A fragment of Tamil Syntax)* —S. Agesthialingom — Rs. 7-00

**1968**

12. *Spoken Tamil II* - M. Shanmugam Pillai — Rs. 6-66
13. *Collected Papers on Dravidian Linguistics*—T. Burrow — Rs. 8-00
14. *A Modern Evaluation of Nannūl* —G. Vijayavenugopal — Rs. 8-00

15. *Two Lectures on the Historicity of Language Families*–M. Andronov Rs. 1-50

16. *A Descriptive Grammar of Gondi* —P. S. Subrahmanyam Rs. 5-00

**1969**

17. *Dravidian Linguistics (Seminar Papers)* —(Eds.) S. Agesthialingom & N. Kumaraswami Raja Rs. 7-00

18. *Post-Nasal Voiceless Plosives in Dravidian* —N. Kumaraswami Raja Rs. 3-00

19. *The Tirunelveli Tamil Dialect* —A. Kamatchinathan Rs. 5-00

**1970**

20. *Gowda Kannda* - K. Kushalappa Gowda Rs. 3-60

21. *Vaagri Boli-An Indo-Aryan Language* —G. Srinivasa Varma Rs. 5-00

22. *Dravidian Comparative Phonology: A Sketch*—M. B. Emeneau Rs. 6-00

23. *The Language of Tamil Inscriptions* 1250-1350 *A. D.*—S. Agesthialingom & S. V. Shanmugam Rs. 5-00

**1971**

24. *Dravidian Verb Morphology (A Comparative Study)* —P. S. Subrahmanyam Rs 10-00

25. *Dravidian Nouns (A Comparative Study)* —S. V. Shanmugam Rs. 8-00

26. *The Kollimalai Tamil Dialect* —K. Karunakaran Rs. 6-00

**1972**

27. *Third Seminar on Dravidian Linguistics* —(Eds.) S. Agesthialingom & S. V. Shanmugam Rs. 10-00

28. *A Grammar of Kannada (*based on the inscriptions of Coorg, South Kanara and North Kanara Dts. 1000 to 1400 A. D.) —K. Kushalappa Gowda Rs. 10 00

29. *Tolka:ppiya moḻiyiyal (Collection of papers presented at the Seminar on Tolka:ppiyam)* Rs. 10-00
-- (Eds.) S. Agesthialingom & K. Murugaiyan Rs. 10-00

1973

30. *A Bibliography of Dravidian Linguisics*
—S. Agesthialingom & S. Sakthivel Rs. 10-00

31. *A Bibliography for the Study of Nilagiri Hill Tribes*
—S. Agesthialingom & S. Sakthivel Rs. 2-00

32. *Structure of Malto*
– Sisir Kumar Das Rs. 5-00

1974

33. *Contrastive Linguistics and Language Teaching*—K. Theivanantham Pillai Rs. 10-00

34. *An Introduction to Modern Telugu*
—P. S. Subrahmanyam Rs. 10-00

35. *Ilakkaṇa āyvukkaṭṭuraikaḷ-I*
—(Eds.) S. Agesthialingom & K. Balasubramanian

In Press

36. *Cāminātam* Edited with Commentary (in Tamil) —S. V. Shanmugam (In press)

37. *Nominal Composition in Malayalam* (A generative transformational approach)
—P. N. Ravindran (In press)

38. *Dravidian Case System*
—(Eds.) S. Agesthialingom & K. Kushalappa Gowda (In press)

Forth Coming

39. *A Course in Modern Kannada*
—K. Kushalappa Gowda (In press)

40. *A Manual for Teaching Tamil to Hindi Speakers* —K. Rajeswari

---

*Copies* can be had from: The Registrar, Annamalai Universtiy, Annamalainagar 608101, India.